॥ ஸ்ரீஹரி: ॥

1480▲

# செயல்கள் அனைத்தும் பகவானுக்கே

भगवान्‌के स्वभावका रहस्य ( तमिल )




ஜயதயால் கோயந்தகா

1480

# செயல்கள் அனைத்தும் பகவானுக்கே

भगवान्के स्वभावका रहस्य ( तमिल )

त्वमेव माता च पिता त्वमेव
त्वमेव बन्धुश्च सखा त्वमेव।
त्वमेव विद्या द्रविणं त्वमेव
त्वमेव सर्वं मम देवदेव॥

ஜயதயாள் கோயந்தகா

॥ஸ்ரீஹரி:॥

# வேண்டுகோள்

ஞானயோகம், கர்மயோகம், பிரேமயோகம் சம்பந்தமான கட்டுரைகளைத் தனித்தனி நூலாக வெளியிட்டிருப்பதைப் போல, பக்தியோகம் பற்றிய கட்டுரைகளையும் தொகுத்து, நூல்வடிவில் வெளியிட வேண்டும் என்று பல அன்பர்கள் வற்புறுத்திக் கேட்டுக் கொண்டதற்கிணங்க, இந்தத் தொகுப்பு வெளியிடப்படுகிறது. இதிலுள்ள கட்டுரைகளில் பக்தியின் ஸ்வரூபம், மகிமை, ரகசியம்; அதேபோல், பக்தியின் லட்சணம், மகிமை, பிரபாவம் மற்றும் நாமஜபம், தியானம், சத்சங்கம், ஸ்வாத்யாயம், சிரத்தை, பிரேமை, சரணாகதி முதலிய பக்தி சாதனங்களைப் பற்றியும், பகவானுடைய நாமம், வடிவம், லீலை, தவம், குணம், பிரபாவம், தத்துவம், ரகசியம், ஸ்வபாவம் முதலிய பக்தி சம்பந்தமான மிக உன்னதமான உணர்வுகள், நல்ல முறையில் விளக்கப்பட்டிருக்கின்றன.

பகவத்பக்தி மார்க்கம் என்பது, ஞான-அஷ்டாங்க- கர்மயோகம் முதலிய எல்லா வழிகளைக் காட்டிலும் மிகவும் உயர்ந்ததாகவும் எளியதாகவும் இருப்பதால், சிறுவர்-வயோதிகர், பெண்கள் மற்றும் சாமான்யர்களாலும் கூட கைக்கொள்ளத்தக்கதாக இருக்கிறது. இப்படிப் பார்க்கும்போது, அடித்தள நிலையில் உள்ளவர்களுக்கும் கூட இந்த நூல் உபயோகமாக இருக்கும். இந்தக் கட்டுரைகள், பல்வேறு சந்தர்ப்பங்களில் எழுதப்பட்டவைகளாதலால், ஒரே செய்தி பல இடங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், இதனால் குற்றம் ஏதும் ஏற்படப் போவதில்லை. ஏனென்றால், பக்தி விஷயங்களை ஒரு தடவை படித்து விட்டதாலேயே, அவை மனத்தில் படிந்து விடுவதில்லை. அதனால், பல தடவைகள் படித்துப் படித்து, செயல்பாட்டிற்குக் கொண்டுவர வேண்டும்.

இந்தக் கட்டுரைகள், பகவானின் சொற்கள், பகவானின் அடியார்களுடைய சொற்கள் மற்றும் அறநூல்களில் கூறப்பட்ட விஷயங்களின் ஆதாரத்திலேயே எழுதப்பட்டுள்ளன. ஆதலால், இதில் கூறப்பட்ட முறைகளை வாழ்க்கையில் கடைப்பிடிப்பதால், பகவானை அடைந்துவிட முடியும் என்பதில் சந்தேகமே இல்லை.

பணிவுள்ள,

**ஜயதயாள் கோயந்தகா**

# பொருளடக்கம்

# 1. எழுச்சியும் வீழ்ச்சியும் உன்னுடைய கையிலே!

உலக வாழ்க்கையின் துக்கங்களிலிருந்தும் குறைபாடு களிலிருந்தும் முற்றிலுமாக, எக்காலத்துக்குமாக விடுபட்டுப் பரமானந்த, பரமசாந்தி ஸ்வரூபமாகவும் ஞானானந்தச் செறி வாகவுமுள்ள பரமாத்மாவை அடைவதற்கு, கீதை முதலிய நூல்களில் பலவகையான சாதனை முறைகள் சொல்லப் பட்டுள்ளன. அத்துடன், மிக உயர்ந்த வடிவினரான பரமாத்மாவை அடைவது எளிதானதாகையால், விரைவி லேயே அடைந்துவிட முடியும் என்றும் கூறப்பட்டுள்ளது. இதுவிஷயமாக அறிவுபூர்வமான விசாரத்தால் நாம் இதைத் தெரிந்து கொள்ளலாம். ஆனால், சாதனைகளை நடை முறைக்குக் கொண்டு வராததால், அவைகள் அனுஷ்டிக்க முடியாதவையாகத் தோன்றுகின்றன; அதனால், அவ நம்பிக்கை ஏற்பட்டு, சாதனையின் போக்கு வேகமாகவும் மகிழ்ச்சி தரத் தக்கதாகவும் எப்போதும் ஒரே மாதிரியாகவும் இல்லாமற் போகிறது. இதற்குக் காரணம் என்ன? இதிலிருந்து மீள்வதற்கு வழிதான் என்ன?-என்று, பல சாதகர்கள் கேள்வி கேட்டு வருகிறார்கள். நம்முடைய சாஸ்திரங்களிலும் மகான் களுடைய சொற்களிலும் புதைந்து விளங்கும் தத்துவ ரகசியத்தை, உள்ளபடி நாம் அறிந்துகொள்ளாததால், அடையத்தக்க (ஸாத்ய) வஸ்து (பரமாத்மா)விலும் சாதனை களிலும் உறுதியான நம்பிக்கை முழுமையாக ஏற்படாதது தான், காரணம்-என்று தான் இவர்களுக்குப் பதில் சொல்ல வேண்டியிருக்கும்! இந்த நம்பிக்கைக் குறைவு தான், சாதனையைத் தொடர்ந்து செய்வதில் ஆர்வத்தைக் குறைத்து விடுகிறது. இதனால், அவநம்பிக்கை போன்ற ஒரு நிலை ஏற்பட்டு சாதனைகளை அனுஷ்டிப்பதில் மனம் நிலைத்து நிற்காமல் போகிறது.

முதலாவதாக, சாதகன் (ஆன்மப் பயிற்சியாளன்), தான் அடையவேண்டிய வஸ்துவின் தத்துவ-ரகசியத்தை சத்சங்கம் மற்றும் அறநூல்கள் மூலம், பகுத்தறிந்து நன்றாகப் புரிந்து கொண்டு, மனத்தில் நிலைநிறுத்திக் கொள்ள வேண்டும்; இரண்டாவதாக, பரமாத்மாவைக் காட்டிலும் உயர்ந்ததான,

அடைய வேண்டிய வஸ்து வேறு எதுவுமில்லை என்பதையும் புரிந்துகொள்ள வேண்டும். அந்தப் பரமாத்மாவை அடையாமல், இந்தத் துன்பக் கடலிலிருந்து ஜீவன் கரையேற முடியாது; சம்சாரக் கடலிலிருந்து விடுதலை பெறாமல், ஜீவனுக்கு நித்திய நிரந்தரப் பேரமைதி கிடைக்கவே கிடைக்காது! ஆகவே, நாம் அடைய வேண்டிய (ஸாத்ய) வஸ்துவான பரமாத்மாவை இலக்காகக் கொண்டு, அறநூல்களில் விதிக்கப்பட்டுள்ள வழிகளில் ஏதேனும் ஒரு வழியைத் தேர்ந்தெடுத்து கவனத்துடனும் நிலைப்பட்ட மனத்துடனும் அதில் செல்ல வேண்டும். அப்போது தான், அடைய வேண்டிய மிகப் பெரும் தத்துவ வடிவினரான பரமாத்மாவை அடைய முடியும்.

ஒருவன் கல்கத்தாவிலிருந்து காசிக்குச் செல்ல விரும்புகிறான்; போகிற பாதை நன்றாக இருக்கிறது; பயணம் செய்வதற்கு மோட்டார் வண்டியும் இருக்கிறது. மோட்டார் காரின் முன்பக்கம் இரண்டு மின் விளக்குகள் பொருத்தப்பட்டுள்ளன. அவை இரண்டு பர்லாங் தூரத்துக்கு வெளிச்சம் பாய்ச்சி பாதையைக் காட்டி வருகின்றன. ஆனால், மிகவும் பயங்கரமான இரவு வேளை; பாதையின் இருமருங்கிலும் பள்ளமும் காடும் மண்டிக் கிடக்கிறது. அவனே வண்டியை ஓட்டிச் செல்கிறான். ஆகவே, அவன் மிகவும் கவனமாகவும் ஒரே நோக்கத்துடனும் மோட்டாரை ஓட்டிச் சென்றால் விரைவிலேயே போய்ச் சேர வேண்டிய இடத்தைச் சென்றடைவான்; ஆனால், கள் குடித்து விட்டு, மதிமயங்கிய நிலையில், கவனக்குறைவாக வண்டியை ஓட்டினால், அக்கம் பக்கத்திலுள்ள பள்ளங்களிலும் வனாந்தரங்களிலும் விழுந்து, மிகவும் அபாயத்துக்கு உள்ளாவான்.

இது ஓர் உதாரணம். இதனையே சாதனைப் பயிற்சியுடன் ஒப்பிட்டுப் பார்ப்போம். பரமாத்மாவின் நிரந்தர வாசஸ்தலமான பரம்தாம் (பரமபதம்) தான், காசி (என்ற, பிரயாணி சென்றடைய வேண்டிய இடம்) ஆகும். இவ்வுலகிலிருந்து வெளியேறி பரமாத்மாவை அடைய விரும்புகிற மனிதர் தான், காசிக்குச் செல்ல விரும்புபவர். கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம்-என்று, இடையூறு

களில்லாத, நேரான, எளிய மூன்று வழிகள். மனித சரீரம் தான், மோட்டார் வண்டி. எதிரே, சரியான வழியைக் காட்டுவதற்காக அமைக்கப்பட்டுள்ள இரண்டு விளக்குகள்-விவேகமும் விசாரமும்; அறியாமையின் விளைவான மோகமாயை தான், பயங்கரமான இருள் சூழ்ந்த இரவு; துர்குணம், துராசாரம் ஆகிய இரண்டும், வழியில் இருபுறங்களிலும் உள்ள பள்ளங்கள், காட்டுப் பகுதிகள். ஆன்மப் பயிற்சியாளன் (சாதனை புரிவோன்), தானே மோட்டார் ஓட்டுபவன். கவனத்துடன் வேகமாகவும் தொடர்ந்து சாதனை செய்வதால் பரமபதத்தை அடைகிறான்-என்பது தான், கவனத்துடனும் ஒரே நோக்கத்துடனும் சாலையில் மோட்டாரை ஓட்டிச் செல்வதன் மூலம் விரைவில், போய்ச் சேர வேண்டிய இடத்தை அடைவது ஆகும். தவறான முடிவு, மோக வசப்படு தல் என்பன சாராயம் குடித்தல், மனம் தடுமாறுதல் ஆகும். இதன் விளைவாக ஏற்படும் கவனக்குறைவால் துர்குண-துராசாரத்தைக் கைக்கொள்ளுதல் என்பதே பள்ளம்-காடு களில் விழுந்து மிகவும் அபாயத்தில் சிக்கிக் கொள்வதாகும்.

ஆகவே, சாதகன் எப்போதும் எச்சரிக்கையுடனும் விழிப்புணர்ச்சியுடனும் தன் சாதனையில் மனமொப்பி ஈடுபட்டிருக்க வேண்டும்; சாதனையில் ஒருபோதும் தொய்வு ஏற்பட விடக்கூடாது. முதலில் ஆரம்பிக்கும்போதே, கீதை முதலிய சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் ஆகிய மூன்று வழிகளில் தனக்கு உகந்த வழி எது?-என்று, சாதகன் முடிவு செய்து கொள்ள வேண்டும். அவ்விதம் ஒரு முடிவு எடுப்பதற்கும் ஒரு முறை இருக்கிறது. இந்த மூன்று வழிகளில், எந்த வழி தனது சக்தி, அறிவு மற்றும் உணர்வுக்கு ஏற்றதாக இருக்குமோ, எதில் தனக்கு நம்பிக்கை, ஆழ்ந்த ஈடுபாடு, சுவை இருக்குமோ அந்தப் பாதையை தீர்மானித்துத் தன் வழியாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்; ஏனென்றால், அதுவே தான் அவனுக்கு எல்லாவற்றைக் காட்டிலும் எளியதும் உயர்ந்ததும், பயன்தரத்தக்க மார்க்கமும் ஆகும். தான் போய்ச் சேர வேண்டிய இடத்தையும் வழியையும் தீர்மானித்துக் கொள்ளாத மனிதன், எங்கே, எப்படிப் போய்ச் சேருவான்? செல்ல வேண்டிய மார்க்கத்தைத் தீர்மானித்துக் கொண்டபின்,

அந்த வழியில் செல்வதற்குத் தொடங்க வேண்டும். போகும்போது, தவறான பாதை என்னும் இழிவான வழிகளில் வேறு எங்கும் சென்று விடாதபடி எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். அஜாக்கிரதைக்குக் காரணம் - சந்தேகம், தடுமாற்றம், அறியாமை, மமதை, பற்று, தவறு மற்றும் சோம்பல். இவைகள், மனிதனுக்கு சுகத்தின்பால் அழைப்பு விடுத்து, மதிமயக்கி, ஆழமான பள்ளத்தில் வீழ்த்தி விடுகின்றன. ஆனால், இவை எல்லாவற்றையும் ஒரேயடியாக ஒதுக்கித் தள்ளி விடுவதற்கு மனிதனுக்கு சுதந்திரம் இருக்கிறது.

'தவறான செயல் இது' என்று தன் அறிவுமூலமாகத் தெரிந்து கொண்ட செயல்களைச் செய்வதற்கு அவன் விரும்புவதில்லை; ஆனாலும், செய்யாமல் இருக்கவும் முடிவதில்லை. அதே போல, நல்ல கர்மா என்று, தான் உணர்ந்து, செய்ய விரும்புபவைகளை அவனால் செய்யவும் முடிவதில்லை. இவ்விதம், விட்டு விட வேண்டியவைகளை விட்டு விடாததும், செய்ய வேண்டியவைகளை செய்யாததும் தான் பெரும் தவறு ஆகும். இந்தத் தவறு என்பது மனிதனின் அஞ்ஞானத்திலிருந்து தோன்றுவது. ஆனால், மூடத்தனமாக, இந்தத் தவறுகளுக்கெல்லாம் காரணம் தன்னுடைய பிராரப்த வினை, மற்றவர் குறுக்கீடு, சூழ்நிலை, முன்னோர்களின் கர்மவினை, காலம், ஏன், கடவுளும் தான் என்று சிலர் சொல்லி வருகிறார்கள். ஆனால், இவைகளில் எதுவும் நமது தவற்றுக்குக் காரணம் ஆகமாட்டா. அவர்கள் அறியாமையால் இவ்வாறு கூறுகிறார்கள். உண்மையில், அவன், தானே தான் இதற்குக் காரணம்! ஏனென்றால், செய்யக் கூடாத காம-குரோதம், லோப-மோஹம், ராக-த்வேஷம் முதலிய துர் குணங்கள்; பொய், வஞ்சனை, களவு, ஹிம்ஸை, தீயஒழுக்கம் முதலிய கெட்ட நடவடிக்கைகள்; கேளிக்கை-விளையாட்டு, போதை முதலிய தீயபழக்கம், வீண் செயல் முதலியவைகளை விட்டு விடுவதிலும்; அதே போல, செய்யத் தகுந்த பக்தி, ஞானம், யோகம், வைராக்கியம், நற்குண-நல்லொழுக்கம் முதலியவற்றை ஏற்று நடத்துவதிலும் மனிதனுக்கு சுதந்தரம் இருக்கிறது. ஆனால், அறியாமை காரணமாக, பிறர் தலையில் குற்றத்தைச் சுமத்தி விட்டுத் தான் மட்டும் சுத்தமானவன் போல் காட்டிக் கொள்கிறான்!-

இது தான், இவனிடமுள்ள கெட்ட பழக்கம். 'பரமாத்மாவை அடைவதற்காக யோகம், பக்தி, ஞானம், வைராக்கியம், நற்குண-நல்லொழுக்கம் என்று எத்தனை முறைகள் உண்டோ, அத்தனையும் எனக்குத் தெரியும்; அவை எனக்குப் புரியவும் செய்கின்றன; அவை நமக்கு நன்மை பயக்கும் என்பதும் தெரிகிறது; நம்பிக்கை-சிரத்தையும் இருக்கு; ஆசையும் இருக்கு; ஆனால், செய்யத்தான் முடியல்லே!' என்றும் ஒரு சில சாதகர்கள் சொல்கிறார்கள். ஆனால், நல்லமுறையில் இதுபற்றி சிந்தித்துப் பார்த்தோமேயானால், உண்மையில், அவர், 'சாதனை மிகவும் நன்மை பயக்கக் கூடியது' என்று அறிந்து கொள்ளவில்லை என்பது தெரியவரும். 'நன்மை பயக்கக் கூடியது' என்று அறிந்து கொள்ளாததற்குக் காரணம் நம்பிக்கைக் குறைவு தான். அந்தக் குறையினால் தான், சாதனையில் ஒன்றிப் போதலும் ஆர்வமும் ஏற்படவில்லை. எனவே, இது மாதிரியான விஷயங்களை ஆழமாகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

நமக்குப் பசிக்கிறது; எதிரே சிற்றுண்டி இருக்கிறது. ஆனால், அதில் விஷம் கலந்திருக்கிறது என்று தெரிந்தபின், அதை எப்படிச் சாப்பிடுவோம்? இவ்விதமே, நமது தவறுகள், நமக்குத் தீங்கு விளைவிப்பன என்பதை ஏற்றுக் கொண்டு விட்டால், செய்யத்தகாத செயல்களை நாம் ஒருபோதும் செய்ய மாட்டோம்; செய்ய வேண்டிய செயல்களை அவசியம் செய்வோம். பகவானை அடைவது தான் மிகவும் முக்கியமான லட்சியம் என்பதை ஒப்புக்கொண்டு விட்டபின், 'அவரை அடையாமல் இருப்பது மிகப் பெரிய நஷ்டம்' என்று உணர்ந்து கொண்டு விட்ட பின், அவரை அடைவதற்கான சாதனை முறைகளில் ஏதேனும் குறை அல்லது தடை ஏற்பட்டால், நாம் அதனை எவ்வாறு பொறுத்துக் கொள் வோம்? அதனால் நமக்கு மிகவும் தன்னிரக்கமும் துயரமும் உண்டாகும். 'அடையவேண்டிய வஸ்துவை, விரைவில் அடையமுடியவில்லையே?' என்ற பிரிவாற்றாமையும் பதட்டமும் ஏற்படும், இல்லையா? அதனை அடையாமல் நம்மால் இருக்கவே முடியாது. இப்படியான உணர்ச்சிகள் ஏற்படவில்லை என்றால், காரணம், நமது நம்பிக்கைக் குறைவு தான்; நமது ஆசையில் குறைவு தான்; ஆசை

குறைந்ததால் சாதனையில் உற்சாகமும் தன்முனைப்பும் ஏற்படுவதில்லை. ஆக, சாதனையில் தொய்வு ஏற்படு வதற்குக் காரணம், மனிதன் தானே தான்! பிறரோ, பிராரப்தமோ, சூழ்நிலையோ, இடம்-காலம்-வினையோ ஈசுவரனோ அல்லவே அல்ல.

ஈசுவரன், மகான்கள், சாஸ்திரங்கள் முதலியன, சாதக னுக்குப் பணி புரிவன. அவற்றிடமிருந்து எத்தனை உதவி களை வேண்டுமானாலும் மனிதன் பெறலாம். அவற்றிட மிருந்து உதவி பெறுவதற்கும் மனிதனுக்கு சுய உரிமை இருக்கிறது. ஆனால், மனிதன் அறியாமையால், 'கடவுள் தான் பாவம் செய்விக்கிறார்' என்று எண்ணிக் கொள்கிறான். இதற்கு ஆதாரமாக இந்தச் செய்யுளையும் கூறுகிறான் -

ஜாநாமி த$_4$ர்மம் ந ச மே ப்ரவ்ருத்தி: ஜாநாம்யத$_4$ர்மம் ந ச மே நிவ்ருத்தி: ।
கேநாபி தேவேந ஹ்ருதி$_3$ஸ்த்தி$_2$தேந யத$_2$ா நியுக்தோऽஸ்மி தத$_2$ா கரோமி ॥
*(பாண்டவ கீதை)*

*(எனக்கு தர்மவழி தெரியும்; ஆனால், அந்த வழியில் போக முடியவில்லை; நான் அதர்மமும் அறிவேன்; ஆனால் அதிலிருந்து என்னால் விடுபட முடியவில்லை! ஏனென்றால், என் இதயத்தில் நிலை கொண்டுள்ள ஒரு தெய்வம் எவ்வாறு என்னைத் தூண்டி ஏவுகிறதோ, அவ்வாறே செய்கிறேன்).*

ஆனால், இந்தக் கொள்கை துர்யோதனனுடையது; எனவே முற்றிலுமாக விலக்கத் தக்கது. எல்லாவற்றைக் காட்டிலும் மிக உயர்ந்ததான கோட்பாடுகள், சாட்சாத் பகவானாலேயே கூறப்பட்ட கீதையில் காணத்தக்கன.

பாவம் ஏற்படுவது பற்றி அர்ஜுனன், பகவானைக் கேட்கிறான்-

அத$_2$ கேந ப்ரயுக்தோऽயம் பாபம் சரதி பூருஷ: ।
அநிச்ச$_2$ந்நபி வார்ஷ்ணேய ப$_3$லாதி$_3$வ நியோஜித: ॥
*(கீதை : 3-36)*

*(ஸ்ரீகிருஷ்ணா! பாவம் செய்வதற்கு மனிதன் விரும்பவில்லை என்றாலும், பலவந்தமாக இழுக்கப்பட்டதைப் போல, யாருடைய தூண்டுதலால் பாவச் செயல்கள் செய்கிறான்?)*

இதற்கு விடையாக, பகவான் கூறுகிறார் -

காம ஏஷ க்ரோத$_4$ ஏஷ ரஜோகுணஸமுத்ப$_4$வ:।
மஹாஶநோ மஹாபாப்மா வித்$_3$த்$_4$யேநமிஹ வைரிணம்॥
*(கீதை : 3-37)*

*[ரஜோகுணத்திலிருந்து தோன்றும் ஆசைதான் கோபமாகிறது; இது, பெருந்தீனிக்காரன்-எவ்வளவு போகங்களை அனுபவித்தாலும் திருப்தி அடைவதில்லை, இதனை, இந்த (பாபம்-புண்ணியம் செய்யும் விஷயத்தில்) எதிரியாக எண்ணிக் கொள்.]*

காமமானது ரஜோகுணத்திலிருந்து உற்பத்தியாகிறது என்று பகவான் சொல்லியிருக்கிறார். ரஜோகுணம் என்பது, ராக (தீவிரமான பற்றுதல்) வடிவமே. பகவான், இதற்கு முன்னரே, அர்ஜுனனிடம் கூறியிருக்கிறார் -

த்$_4$யாயதோ விஷயாந்பும்ஸ: ஸங்க$_3$ஸ்தேஷூபஜாயதே।
ஸங்க$_3$ாத்ஸஞ்ஜாயதே காம: காமாத் க்ரோதே$_4$ாऽபிஜாயதே॥
*(கீதை : 2-62)*

*(புலனுகர் பொருட்களைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பவனுக்கு, அந்தப் பொருட்களில் பற்றுதல் ஏற்பட்டுவிடுகிறது. பற்றுதலிலிருந்து அவற்றின்மீது ஆசை உண்டாகிறது. ஆசையை நிறைவேற்றிக் கொள்வதில் தடை ஏற்பட்டால், சினம் தோன்றுகிறது).*

இந்த சுலோகத்தில், பற்றுதல் காரணமாக ஆசையும் ஆசையிலிருந்து கோபமும் உற்பத்தியாகின்றன; எல்லாத் தீமைகளுக்கும் மூல காரணம், பற்றுதல்தான்; ஆதலால், மனைவி-மக்கள்-செல்வம்-வீடு-குடும்பம்-சீடன்-மடம்-ஆசிரமம்-கௌரவம்-பெருமை-பதவி-உடல் ஆகியவற்றிலும், மற்றப் பிராணிகள், பொருட்கள், செயல்கள் முதலியவற்றிலும், மறந்தும் கூட, எள்ளளவு கூடப் பற்றுதல் ஒருபோதும் வைக்கக் கூடாது. இவ்வித பாச-பற்றுதலுக்குக் காரணம், நான்-எனது என்னும் எண்ணம்; நான்-எனது தோன்றுவதற்குக் காரணம், அவித்தை (அஞ்ஞானம்)-என்று தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

யோகதர்சனம் என்னும் நூலில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது -

அவித்$_3$யாஸ்மிதாராகத்$_3$வேஷாபி$_4$நிவேஶா: க்லேஶா:।
அவித்$_3$ய க்ஷேத்ரமுத்தரேஷாம் ॥
*(யோக: 2/3,4)*

***[அவித்தை (அஜ்ஞானம்), அஸ்மிதா (நான் என்னும் முனைப்பு), பற்றுதல், வெறுப்பு, மரணபயம்- என்று, ஐந்து (கிலேசங்கள்) வேதனைகள். இவற்றுள், அவித்தை அடிப்படையானது; பிற நான்கும் அவித்தையிலிருந்து தோன்றுபவை. அதாவது, அவித்தையிலிருந்து தான், நான் என்னும் முனைப்பு, பற்றுதல் முதலியவை தோன்றுகின்றன.]***

ஆகவே, எல்லா வேதனைகளுக்கும் (க்லேசங்களுக்கும்) ஆணிவேராக இருப்பது அவித்தை. இந்த அவித்தையிலிருந்து தான் சந்தேகம், மதிமயக்கம், தவறு ஆகியவை உற்பத்தியாகின்றன. உண்மையான ஞானம் ஏற்பட்டவுடன் அஜ்ஞானம் அழிந்து போகிறது. உண்மையான மெய்யறிவை அடைவதற்கு அறநூல்களில் பலவித உபாயங்கள் கூறப்பட்டுள்ளன. ஈசுவரனிடம் பக்தி செலுத்தினால், அவருடைய அருள் கிடைக்கும். அவருடைய அருளினால் மெய்யறிவு உண்டாகிறது. பகவான், அர்ஜுனனிடம் கூறுகிறார் -

மச்சித்தா மத்க$_3$தப்ராணா போ$_3$த$_4$யந்த: பரஸ்பரம்।
கத$_2$யந்தஶ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச॥
*(கீதை : 10-9)*

***(எப்போதும் என்னிடமே மனத்தைச் செலுத்தி, என்னிடமே தங்கள் உயிரை அர்ப்பணித்திருக்கும் என்னுடைய பக்தர்கள், என்பால் பக்தியைப் பற்றி, கூடிப் பேசியும் பரஸ்பரம் என் பிரபாவத்தை அறிவுறுத்திக் கொண்டும், குணம்-பிரபாவம் நிறைந்த என் கதைகளைப் பேசியும் எப்போதும் மனநிறைவோடு இருக்கிறார்கள்; வாசுதேவனான என்னிடமே லயித்து இன்புறுகிறார்கள்).***

தேஷாம் ஸததயுக்தாநாம் ப$_4$ஜதாம் ப்ரீதிபூர்வகம்।
த$_3$த$_3$ாமி புத்$_3$தி$_4$யோக$_3$ம் தம் யேந மாமுபயாந்தி தே॥
*(கீதை : 10-10)*

***(எல்லாக் காலத்திலும் தியானம் முதலியவற்றால் என்னிடமே ஈடுபட்டு பிரேமையோடு வழிபடும் பக்தர்களுக்கு, தத்வஞான***

*வடிவமான புத்தியோகத்தை அருள்கிறேன்; அதன்மூலமாக, அவர்கள் என்னையே அடைந்து விடுகிறார்கள்).*

தேஷாமேவானுகம்பார்த்த$_2$மஹமஜ்ஞானஜம் தம: ।
நாஶயாம்யாத்மப$_4$ாவஸ்த்தே$_2$ா ஜ்ஞானதீ$_3$பேந ப$_4$ாஸ்வதா ॥
*(கீதை : 10-11)*

*(அவர்களுடைய அந்தக்கரணத்தில் வீற்றிருக்கின்ற நானே, அவர்களுக்குப் பேரருள் புரிவதற்காக, அஜ்ஞானமாகிற காரிருளை, மிக்க பிரகாசமான தத்வஜ்ஞான விளக்கைக் கொண்டு போக்கிவிடுகிறேன்).*

அவ்விதமே, 'பயனில் பற்றில்லாமல் கடமையைச் செய்ய வேண்டியது இன்றியமையாதது' என்ற கருத்துடன் செய்யப்படும் கர்மயோகத்தினால் தூய்மையான அந்தக்கரணத்திலும், தானாகவே உண்மையான மெய்யறிவு வெளிப்படுகிறது.

ந ஹி ஜ்ஞானேந ஸத்$_3$ருஶம் பவித்ரமிஹ வித்$_3$யதே ।
தத்ஸ்வயம் யோக$_3$ஸம்ஸித்$_3$த$_4$: காலேநாத்மநி விந்த$_3$தி ॥
*(கீதை : 4-38)*

*(இவ்வுலகில், மெய்யறிவுக்கு நிகராகப் புனிதப்படுத்தக் கூடிய எதுவும் இல்லவே இல்லை. அந்த மெய்ஞானத்தை நீண்டகால கர்மயோகப் பயிற்சியினால் தூயதாகிய அந்தக்கரணமுடைய மனிதன், தானே தன் ஆத்மாவில் அடைந்து விடுகிறான்).*

இப்படியே, மகான்களால் கூறப்பட்ட சாதனை முறைகளை அனுஷ்டித்து வந்தாலும், உண்மையான மெய்யறிவு இறைவன் அருளால் ஏற்பட்டு விடுகிறது.

தத்$_3$ வித்$_3$தி$_4$ ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா ।
உபதே$_3$க்ஷ்யந்தி தே ஜ்ஞானம் ஜ்ஞாநிநஸ்தத்வத$_3$ர்ஶிந: ॥
*(கீதை : 4-34)*

*(அர்ஜுனா! அந்த மெய்யறிவை, தத்துவதரிசிகளான ஞானியரிடம் சென்று அறிந்து கொள். அவர்கள் முன்னால், தண்டம் போல் விழுந்து வணங்கி, பணிவிடை செய்து நெஞ்சத்தில் கபடம் இல்லாமல் பவ்யமாகக் கேட்டால், பரமாத்மாவை நன்றாக அறிந்துள்ள மகாத்மாக்களான ஞானிகள், உனக்கு மெய்யறிவை உபதேசிப்பார்கள்).*

யஜ் ஜ்ஞாத்வா ந புநர்மோஹமேவம் யாஸ்யஸி பாண்ட$_3$வ।
யேந பூ$_4$தாந்யஶேஷேண த்$_3$ரக்ஷ்ஸ்யாத்மந்யதே$_2$ா மயி॥
(கீதை : 4-35)

*(பாண்டுவின் மைந்தனே! அந்த மெய்யறிவை அடைந்து விட்டால், இவ்விதமான மோகத்தை அடையமாட்டாய்; அந்த ஞானத்தின் மூலம், முதலில், எல்லா உயிர்களையும் தன்னில் காண்பாய்; பின்னர், சச்சிதானந்தத் திரட்சியான பரமாத்மாவாகிய என்னிடம் காண்பாய்).*

இவ்வாறே, கீதை போன்ற அறநூல்களின் பொருளையும் உட்கிடக்கையையும் அறிந்து கொண்டு, அவற்றைப் படித்து வருவதாலும் உண்மையான மெய்யறிவு ஏற்படும். பகவான் சொல்கிறார்-

ஸ்வாத்$_4$யாயஜ்ஞாநயஜ்ஞாஶ்ச யதய: ஸம்ஶிதவ்ரதா:॥
(கீதை : 4/28ன் 2ம் அடி)

*(பிற உயிர்களைத் துன்புறுத்தாதிருத்தல் போன்ற கடுமையான விரதங்களைத் தவறாது அனுஷ்டித்து வரும் சான்றோர்கள் கூட அறநூல்களைப் படித்தல் என்ற ஞான வேள்வியைச் செய்து வருகிறார்கள்).*

கீதையைப் பாராயணம் செய்துவரும் அன்பர்களைப் பற்றியும் பகவான் கூறியிருக்கிறார். 'நம் இருவரிடையே நிகழ்ந்த தர்மமயமான உரையாடல் வடிவிலான கீதா சாஸ்திரத்தைப் படிப்பதாலும், நான், ஞானவேள்வியினால் பூஜிக்கப்பட்டவன் ஆவேன்' (கீதை : 18/70). இதனால், (கீதையைப் படிப்பவருக்கு) நிஜமான மெய்யறிவு ஏற்பட்டு விடுகிறது. இந்த நிஜமான மெய்யறிவை அடைவதற்கு முக்கிய காரணமாக அமைவது, மன ஊக்கமும் நம்பிக்கையும் தான். பகவான் சொல்லியிருக்கிறார் -

ஶ்ரத்$_3$த$_4$ாவாந்ல்லப$_4$தே ஜ்ஞாநம் தத்பர: ஸம்யதேந்த்$_3$ரிய:।
ஜ்ஞாநம் லப்$_3$த்$_4$வா பராம் ஶாந்திமசிரேணாதி$_4$க$_3$ச்ச$_2$தி॥
(கீதை : 4-39)

*(சாதனையில் முழுமையாக ஈடுபட்டுள்ள, புலன்களை வென்ற, மன ஊக்கமுடைய மனிதன் மெய்ஞானத்தை அடைகிறான்.*

*ஞானத்தைப் பெற்றவுடனேயே, கால தாமதமில்லாமல், அப்போதே பகவத் பிராப்தியாகிற பரமசாந்தியை அடைந்து விடுகிறான்).*

ஆனால், ஊக்கமும் நம்பிக்கையுமின்றி செய்யப்படும் எல்லாக் காரியமும் வீணே.

அஶ்ரத்$_3$த$_4$யா ஹுதம் த$_3$த்தம் தபஸ்தப்தம் க்ருதம் ச யத்।
அஸதி$_3$த்யுச்யதே பார்த$_2$ ந ச தத்ப்ரேத்ய நோ இஹ॥
*(கீதை : 17-28)*

*[அர்ஜுனா! சிரத்தை இல்லாமல் செய்யப்படும் வேள்வி, தானம், தவம் அல்லது இவைபோன்ற மற்ற கர்மாக்கள் எல்லாம்-அஸத் (உண்மையற்றது) என்று கூறப்பட்டுள்ளது. ஆகவே, அந்தக் கர்மாக்கள் எல்லாம் இவ்வுலகில் வாழும்போதும், மரணத்துக்குப் பின் அவ்வுலகிலும் நன்மை பயக்கக் கூடியவை அல்ல.]*

ஆதலால், எல்லா நற்கருமங்களையும் சிரத்தையுடன் செய்ய வேண்டும்.

அந்தக்கரணம் (மனம்) தூய்மையாக இருந்தால், செய்யும் கருமத்தில் சிரத்தை ஏற்படும்.

ஸத்த்வாநுரூபா ஸர்வஸ்ய ஶ்ரத்$_3$த$_4$ா ப$_4$வதி ப$_4$ாரத।
ஶ்ரத்$_3$த$_4$ாமயோऽயம் புருஷோ யோ யச்ச்$_2$ரத்$_3$த$_4$: ஸ ஏவ ஸ:॥
*(கீதை : 17-3)*

*(பாரதா! எல்லா மனிதர்களுக்கும் சிரத்தை என்பது, அவர்களுடைய அந்தக்கரணத்தை அனுசரித்தே ஏற்படுகிறது.)*

விவேக-வைராக்கியத்துடன் கூடிய பக்தி, ஞானம், யோகம் ஆகிய சாதனங்களைப் பயிற்சி செய்வதால், அந்தக்கரண சுத்தி (உள்ளத் தூய்மை) ஏற்படுகிறது. ஆகவே, பக்தி, ஞானம், யோகம் ஆகிய மூன்றில், எதனிடம் மனிதனுக்கு விருப்பம் செல்கிறதோ, அதையே லட்சியமாகக் கொண்டு, விவேக-வைராக்கியத்துடன் மிகவும் உற்சாகத்துடனும் ஈடுபாட்டுடனும் பயிற்சி செய்வது சாலச் சிறந்ததாகும்.

## 2. பக்தனாவதற்கான எளிய வழி

யோகி$_3$நாமபி ஸர்வேஷாம் மத்$_3$கதேநாந்தராத்மநா ।
ஶ்ரத்$_3$த$_4$ாவாந்ப$_4$ஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத: ॥
*(கீதை 6/47)*

***(எல்லா யோகிகளுக்குள்ளும், என்னிடமே அந்தராத்மாவைச் செலுத்தி, என்னையே எப்போதும் போற்றி வரும் சிரத்தை யுடைய யோகி எவரோ, அவரே என்னால் மிகவும் சிறந்தவராக மதிக்கப்படுகிறார்.)***

பரமாத்மாவை அடைவதற்காக, சாஸ்திரங்களில், பக்தியோகம், ஞானயோகம், கர்மயோகம், அஷ்டாங்க யோகம் முதலிய பலவித வழிகள் கூறப்பட்டுள்ளன. ஆனால், பக்தியோகம் என்பது மற்ற வழிகளைக் காட்டிலும் அனுஷ்டானம் செய்வதற்கு எளிது என்பதால் மனிதர்களால் கைக்கொள்ளத்தக்க தலைசிறந்த சாதனம் ஆகும். ஏனென்றால், பக்தியோகத்தை அனுசரிப்பதில் ஆண்-பெண்-சிறுவர்க்கும் மற்றும் எல்லா வர்ண-ஆசிரமத்தைச் சேர்ந்தவர் களுக்கும் அதிகாரம் (தகுதி) உண்டு என்பதுடன், இந்த வழி மிகவும் இயல்பானதாகவும் இருக்கிறது (கீதை 7-14). பெரிய பாவியும் கூட பக்தியின் மகிமையினால், விரைவிலேயே கடைத்தேறி விடுகிறான். ஸ்ரீபகவான் சொல்லியிருக்கிறார் -

அபி சேத்ஸுது$_3$ராசாரோ ப$_4$ஜதே மாமநந்யப$_4$ாக் ।
ஸாது$_4$ரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக்$_3$ வ்யவஸிதோ ஹி ஸ: ॥
க்ஷிப்ரம் ப$_4$வதி த$_4$ர்மாத்மா ஶஶ்வச்ச$_2$ாந்திம் நிக$_3$ச்ச$_2$தி ।
கௌந்தேய ப்ரதி ஜாநீஹி ந மே ப$_4$க்த: ப்ரணஶ்யதி ॥
*(கீதை 9-30,31)*

***[தீய நடத்தையுடைய ஒருவன், வேறிடம் செல்லாத மனத்தோடு, என்னிடம் பக்தி கொண்டு, என்னையே தொழுவானாகில், அவனும் கூட சான்றோனாக (சாதுவாக) மதிக்கத்தக்கவன்; ஏனென்றால், அவன் உண்மையை உறுதியாகத் தெரிந்து கொண்டு விட்டான். அதாவது, பகவானைப் பூஜிப்பதற்கு சமானமான உபாயம் வேறு எதுவும் இல்லை என்பதை ஐயந்திரிபற நிச்சயமாகத் தெரிந்து கொண்டு விட்டான். ஆகவே, அவன் சீக்கிரமாகவே தர்மாத்மாவாகி, நித்திய நிரந்தர***

*பரமசாந்தியை அடைந்து விடுகிறான். அர்ஜுனா! நீ உறுதியாக அறிந்து கொள்: என்னுடைய பக்தன் அழிந்து போவதில்லை.]*

இவ்வாறே மிகத் தாழ்ந்த ஜாதியில் தோன்றியவரும் கடைத்தேற முடியும். ஸ்ரீபகவான் சொல்கிறார் :

மாம் ஹி பார்த்த$_2$ வ்யபாஶ்ரித்ய யேऽபி ஸ்யு: பாபயோநய: ।
ஸ்த்ரியோ வைஶ்யாஸ்தத$_2$ா ஶூத்$_3$ராஸ்தேऽபி யாந்தி பராம் க$_3$திம் ॥
*(கீதை- 9/32)*

*(அர்ஜுனா! மகளிர், வணிகர், வேளாளர், இழிகுலத்தில் பிறந்த சண்டாளர் போன்ற யாரானாலும் சரி, என்னை அடைக்கலம் புகுந்து விட்டால், உத்தம நிலையை அடைகிறார்கள்.)*

எவருடைய மரணம் சமீபத்து விட்டதோ, அவர் கூட பக்தியின் பிரபாவத்தினால் அந்த விநாடியிலேயே பரமாத்மாவை அடையமுடியும்.

அந்தகாலே ச மாமேவ ஸ்மரந்முக்த்வா கலேவரம் ।
ய: ப்ரயாதி ஸ மத்$_3$ப$_4$ாவம் யாதி நாஸ்த்யத்ர ஸம்ஶய: ॥
*(கீதை : 8-5)*

*(எவனொருவன் கடைசி காலத்திலும் என்னையே நினைத்துக் கொண்டு உடலை உதறி விடுகிறானோ, அவன் சாட்சாத் என் வடிவத்தையே அடைந்து விடுகிறான். இதில் கொஞ்சம் கூட சந்தேகப்பட வேண்டாம்.)*

மெய்ஞானம் தோன்றாமல், ஆன்மாவுக்கு நன்மை (அதாவது ஆன்ம விடுதலை) ஏற்படாது என்று சொன்னால், அது சரிதான். ஆனால், பகவானிடம் உள்ள பக்தியின் பிரபாவத்தால், பகவானுடைய அருளினால் அவருக்கு ஞானமும் ஏற்பட்டு விடும்.

கீதையில், பகவான் தானே சொல்லியிருக்கிறார்-

தேஷாம் ஸததயுக்தாநாம் ப$_4$ஜதாம் ப்ரீதிபூர்வகம் ।
த$_3$த$_3$ாமி பு$_3$த்$_3$தி$_4$யோக$_3$ம் தம் யேந மாமுபயாந்தி தே ॥
தேஷாமேவாநுகம்பார்த்த$_2$மஹமஜ்ஞாநஜம் தம: ।
நாஶயாம்யாத்ம ப$_4$ாவஸ்தே$_2$ா ஜ்ஞாநதீ$_3$பேந ப$_4$ாஸ்வதா ॥
*(10:10,11)*

*(தியானம் முதலியவைகளால் எப்போதும் என்னிடமே ஈடுபட்டு, பிரேமையுடன் பூஜிக்கும் பக்தர்களுக்கு தத்வஞான வடிவான புத்தி யோகத்தைத் தருகிறேன்; அவர்கள் அதன்மூலம் என்னையே அடைந்து விடுகிறார்கள். அர்ஜுனா! அவர்களுக்கு அருள்புரிய வேண்டும் என்பதற்காகவே, அவர்கள் உள்ளத்தில் வீற்றிருக்கின்ற நான், அவர்களுடைய அறியாமை என்னும் இருளை ஒளிமயமான தத்வ ஞானவடிவான விளக்கைக் கொண்டு நானே போக்கி விடுகிறேன்.)*

மனிதன் தன் ஜாதி, நடத்தைகளால் எவ்வளவு கீழ்நிலையில் இருந்தாலும் சரி, எவ்வளவு பெரிய மூடனாக இருந்தாலும் சரி, பகவானை அடைவது மிகவும் எளிது என்பது மேலே சொன்னவற்றால் சந்தேகத்துக்கு இடமில் லாமல் நிச்சயமாகிறது. பகவானிடம் சிரத்தையும் பிரேமையும் ஏற்படவேண்டும்; பின், அவருடைய பக்தியின் பிரபாவத்தி னால் எளிதாகவும், விரைவாகவும் கடைத்தேறி விட முடியும்.

கீதை, ராமாயணம், பாகவதம் போன்ற நூல்களில், பகவத் பக்தியைப் பற்றி எவ்வளவு விரிவாகக் கூறப்பட்டிருக்கிறதோ, அந்த அளவுக்கு மற்ற சாதனங்களைப் பற்றிக் கூறப்படவில்லை. ஆகவே, எப்போதும் நன்மை பயக்கக் கூடிய பக்தி யோகத்தைப் பயிற்சி செய்வதற்காக, மிகவும் நல்ல முறையில் செயல்பட வேண்டும். எல்லா யுகங்களிலும் பக்தியே சிறந்த சாதனம் என்று கூறப்பட்டி ருந்தாலும், கலியுகத்தில் அதற்குத் தனியான பெருமை அளிக்கப்பட்டுள்ளது. ஸ்ரீவேதவியாசர் சொல்கிறார் -

கலிம் ஸப₄ாஜயந்த்யார்யா குணஜ்ஞா: ஸாரப₄ாகிந: ।
யத்ர ஸங்கீர்தநேநைவ ஸர்வ: ஸ்வார்த்தோ₂ऽபி₄லப்₄யதே ॥
*(பாகவதம் : 11-5-36)*

*(கலியுகத்தில் நாம சங்கீர்த்தனம் செய்தே எல்லா நலன்களை யும்-உலக வாழ்க்கைக்கான சுயதேவைகளையும் ஆன்ம லாபத் தையும்-மனிதர்கள் பெற்று விடுகிறார்கள். அதனால், அந்த யுகத் தின் பெருமையை அறிந்துள்ளவர்களும் சாரத்தைக் கிரகிப்பவர் களுமான மேன்மக்கள், கலியுகத்தை மிகவும் பாராட்டுகிறார்கள்.)*

மேற்கூறிய விஷயங்களிலிருந்து, கலியுகத்தில் பரமாத்மாவை அடைவது மிகவும் எளிது; விரைவில் நடைபெறக் கூடியது-என்பது தெள்ளத் தெளிவாகிறது.

நம் எல்லோரிடமும் ஈசுவரனுக்கு மிகவும் தயை இருக்கிறது. அதனால் தான் நம் எல்லோரையும் சிறந்த தேசத்தில், சிறந்த காலத்தில், சிறந்த ஜாதியில், சிறந்த மதத்தில் நம்மைப் பிறக்க வைத்திருக்கிறார். அத்துடன், ஈசுவரனுக்கு நம்மிடம் தனியான கிருபை இருக்கிறது என்பதால்தான், இந்தக் கலிகாலத்திலும் அவ்வப்போது சத்சங்கம், அறநூல் படித்தல் போன்றவைகளுக்கும் வாய்ப்புக் கிடைக்கிறது. ஆன்மாவைக் கடைத்தேற்றுவதற்கு, மூவுலகங் களிலும், இந்த மண்ணுலகம் சிறந்தது; மண்ணுலகிலும் இந்த பாரதநாடு மிகமிக மேலானது என்று மதிக்கப்படுகிறது. முன்காலத்தில், உலகத்தின் எல்லாப் பகுதியிலிருந்தும் மக்கள் பாரதநாட்டுக்கு வந்து கல்வி கற்றுச் சென்றார்கள். அதனால் மாமன்னர் மனு சொல்லியிருக்கிறார்.

ஏதத்தே$_3$ஶப்ரஸூதஸ்ய ஸகாஶாத$_3$க்ரஜந்மந: ।
ஸ்வம் ஸ்வம் சரித்ரம் ஶிக்ஷேரந் ப்ருதி$_2$வ்யாம் ஸர்வ மாநவா: ॥
*(2-20)*

***[இந்த நாட்டில் (பாரத வர்ஷத்தில்) தோன்றியுள்ள அந்தணர் களிடம், பூவுலகில் வசிக்கும் எல்லா மக்களும் வந்து தத்தம் ஒழுகுமுறை பற்றிக் கற்றுக் கொண்டார்கள்.}***

நமக்கெல்லாம் பிறப்பும் வாசமும் இந்தப் பாரத நாட்டிலே ஏற்பட்டிருக்கின்றன. இப்போதுள்ள காலமும் நமக் கெல்லாம் மிகச் சிறந்த காலம். எல்லா குற்றங்குறைகளுக்கும் கலியுகம் சுரங்கமாக விளங்குகிறது என்றாலும் அதில் தனியானதொரு நற்குணமும் இருக்கிறது. இந்தக் காலத்தில், (மிகவும் கஷ்டப்பட்டு செய்ய வேண்டிய கர்மாக்களைச் செய்யாமற் போனாலும்) பகவானிடம் பக்தி செலுத்தியே மனிதன் வெகு சுலபமாகக் கடைத்தேறிவிடுகிறான்.

ஸ்ரீஸ்கந்த புராணத்தில் -

கலேர்தோ$_3$ஷநிதே$_4$ஶ்சைவ ஶ்ருணு சைகம் மஹாகுணம் ।
யத$_3$ல்பேந து காலேந ஸித்$_3$தி$_4$ம் க$_3$ச்ச$_2$ந்தி மாநவா: ॥
*(35-115)*

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

*[கலியுகம் எல்லாப் பாவங்களுக்கும் பொக்கிஷம்; அத்துடன் இதில் ஓர் உயர்ந்த குணமும் இருக்கிறது. கேள்; இந்த யுகத்தில், சிறிது காலமே ஒருவன் சாதனை செய்தாலும் அவன் சித்தியைப (லட்சியத்தை) அடைந்து விடுகிறான்.]*

ஸ்ரீதுளஸீதாஸரும், 'மனித உடல் அடைந்ததன் முக்கிய நோக்கமே பரமாத்மாவை அடைவதுதான்; அதனால்தான், சாஸ்திரங்களில் ஆங்காங்கே, மனித சரீரம் வெகுவாகப் புகழ்ந்து பேசப்பட்டுள்ளது' என்று கூறியுள்ளார்.

உலகில் எத்தனையோ சமயங்கள் இருக்கின்றன. அவற்றுள் வைதிக சனாதன தர்மம், அநாதியானது; உத்தம மானது. தர்மம் என்ற பெயரில், உலகத்தில் பற்பல சமயக் கருத்துக்கள் நிலவி வருகின்றன. பல கோடி மக்கள் பின்பற்றி வரும் நான்கு தர்மங்கள் தற்சயம் விளங்கி வருகின்றன- ஹிந்து தர்மம், பௌத்த தர்மம், முஸ்லிம் தர்மம், கிறிஸ்து தர்மம். இவைகளைப் பற்றி ஆராய்ச்சி செய்யும் போது, வைதிக சனாதன தர்மம் தான், மற்றவைகளைக் காட்டிலும் காலத்தால் முற்பட்டது என்று உறுதியாகத் தெரியவருகிறது. ஸ்ரீகௌதம புத்தரால் பிரசாரம் செய்யப்பட்ட பௌத்த தர்மம், ஏறக்குறைய இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளாக இருந்து வருகிறது; ஏனென்றால், புத்த தேவர் பிறந்து இத்தனை ஆண்டுகள் தான் ஆகின்றன. கிறிஸ்து தர்மம், இரண்டாயிரம் ஆண்டுகளாகத்தான் இருந்து வருகிறது; காரணம், சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தான் ஏசு பிறந்தார். இஸ்லாம் தர்மத்தின் சமயநூலாக விளங்கும் திருக்குர்ரானை வெளியிட்ட ஹஜ்ரத் முஹம்மது தோன்றி ஏறக்குறைய பதினான்கு நூற்றாண்டுகளே ஆகின்றன. ஆனால், வைதிக சனாதன தர்மம் எப்போது தோன்றியது என்பதை யாரும் உறுதியாகக் கூறமுடியாது; ஏனென்றால், இது ஒரு தனி மனிதரால் ஏற்படுத்தப்பட்ட மதம் அல்ல என்பதுடன் மனித நினைவுக்கு முற்பட்ட காலத்திலிருந்தும் இருந்து வருகிறது. (அபௌருஷேயம், அநாதி) உலகில் உள்ள எந்தெந்த சமயக் கொள்கைகள், தர்மம் என்ற பெயரில் இருந்து வருகின்ற னவோ, அவை எல்லாம் வைதிக தர்மத்திலிருந்து எடுத்தாளப் பட்டுள்ளன. மனிதர்களுடைய சிந்தனைகள் பல்வகைப்பட்டு

இருப்பதால், பலவகையான சமயக் கருத்துக்கள்-கொள்கை கள்-சமயானுஷ்டானங்கள் தோன்றி பழக்கத்துக்கு வந்துள் ளன; ஆகவே, சுருதி-ஸ்மிருதிகளில் கூறப்பட்டுள்ள சனாதன தர்மம், இவைகளைக் காட்டிலும் மிக உயர்ந்தது என்று கூறினால், அது வெறும் புகழுரை ஆகிவிடாது. நம்முடைய இந்த தர்மத்தின் அடித்தளம் வேதம்; அதற்கு மந்த்ரம்- பிராம்மணம் என்ற கிளைகள் (பிரிவுகள், தொகுதிகள்) இருந்தன. ஆனால், பெரும்பாலான பகுதிகள் வேற்று மதத்தினரால் அழிக்கப் பட்டுவிட்டன. எனினும் ஆணிவேர் போன்ற மந்த்ர- பிராம்மணப் பகுதிகள் இன்றைக்கும் இருந்து வருகின்றன. ரிக்வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம்- இந்த நான்கு தொகுப்பினையும்-மந்திரப் பகுதி (ஸம்ஹிதை) என்கிறார்கள். அதுபோல, ஐதரேயம், தைத்ரீயம், சதபத பிராம்மணம் போன்று ஏராளமாகவுள்ள உபநிடதங்கள், பிராம்மணம் என்ற பிரிவில் வருகின்றன. இந்த வைதிக தர்மமானது மிகப் பண்டைய சனாதன காலத்திலிருந்தே இருந்து வருவதால், சனாதன தர்மம் என்று ஏற்றுக் கொள்ளப் பட்டிருக்கிறது. இப்படி சனாதன தர்மத்தை அனுஷ்டிக்கும் மக்கள் கூட்டத்தில் நாம் பிறந்திருக்கிறோம்.

இதைத் தவிர, அவ்வப்போது சான்றோர் பெருமக்களின் உறவு நமக்குக் கிடைத்து வருகிறதே, அது பகவானுடைய விசேஷமான தயை என்று தான் கூறவேண்டும். ஸ்ரீஸ்கந்த புராணத்தில்,

> ததை$_3$வ ஜீவஸ்ய ப$_4$வேத்க்ருபா விபே$_4$ா
> துரந்தஶக்தேஸ்தவ விஶ்வமூர்த்தே ।
> ஸமாக$_3$ம: ஸ்யாந்மஹதாம் ஹி பும்ஸாம்
> ப$_4$வாம்பு$_3$தி$_4$ர்யேந ஹி கோ$_3$ஷ்பத$_3$ாயதே ॥
> ஸத்ஸங்கே$_3$ மா தே$_3$வ யதை$_3$வ பூ$_4$யாத்
> தர்ஹீஶ தே$_3$வே த்வயி ஜாயதே மதி: ।
> *(16-18,19)*

என்று கூறப்பட்டிருக்கிறது.

***(பிரபோ! விசுவமூர்த்தியே! எல்லையில்லாத சக்தி படைத்த பரமேசுவரரான தங்களுடைய கிருபை ஒரு ஜீவனின்மேல்***

*விழும்போது, அதற்கு ஒரு மாமனிதரின் தரிசனம் கிடைக்கிறது; அதனால், (மகாபுருஷனுடைய தரிசனத்தால்) சம்ஸாரக் கடல், பசுவின் கால் குளம்படி அளவுக்குச் சிறுத்து விடுகிறது! தேவரே! பரமேசுவரா! சத்சங்கம் கிடைக்கும் போதெல்லாம் மேலான இறைவனான தங்களிடம் மனம் செல்கிறது.)*

ஸ்ரீதுளஸீதாஸரும், இராமனுடைய கிருபை இல்லாமல் தூயமனமுடைய மேலோரின் சந்திப்பு கிடைப்பதில்லை என்று, ராமசரித மானஸத்தில் கூறுகிறார். அதேபோல, பக்த விபீஷணன், ஆஞ்ஜநேயரிடம், 'எனக்கு இப்போது நம்பிக்கை வந்துவிட்டது-பகவானுடைய அருள் இல்லாமல் சத்புருஷர்களின் தரிசனம் கிடைக்காது!' என்று சொல்கிறார்.

இவ்விதம், பகவானுடைய பேரருளினால் சாதுக்களின் தரிசனம் கிடைத்தும் கூட, நாம் பகவானை அடையாமல் வஞ்சிக்கப்படுகிறோம்-என்பது, நமக்கு மிகவும் துக்கத்தை யும் வெட்கத்தையும் அளிக்கக்கூடிய விஷயம்.

ஆகவே, விலைமதிக்க முடியாத இந்த வாழ்க்கையை அடைந்துள்ள நாம், உடல்-உலக இன்பம் ஆகியவற்றின்பால் உள்ள கவர்ச்சியைத் தள்ளிவிட்டு, உடல்-உள்ளம்-உடைமை களால், பரமாத்மாவை அடைவதற்காக தீவிரமான தன் முனைப்புடன், கடைசி மூச்சு இருக்கும்வரை முயன்று கொண்டே இருக்க வேண்டும்; இல்லையென்றால், பின்னர் மிகவும் பச்சாதாபப்பட வேண்டியிருக்கும்.

இந்த எல்லா விஷயங்களையும் எண்ணிப் பார்த்து மிக மிக விரைவில் பரமாத்மாவை அடைவதற்கான சாதனைகளில் ஈடுபட வேண்டும். ஏனென்றால், எமன் மீது நம்பிக்கை வைக்க முடியாது; அவன் எப்போது வருவான் என்றும் சொல்ல முடியாது.

பகவான் தான் நம்முடைய வாழ்க்கைக்கு ஆதாரம்; அவரை விட்டால், உலக வாழ்வில் நம்மை முன்னேற்றுவ தற்கு வேறு வழியில்லை என்பதை நாம் அறிந்து கொள்ள வேண்டும். நாம், பகவான் இல்லாமல் வாழ முடியாது. இவ்வாறாக மிகமிக அவசியத்தை அறிந்து கொள்வதன் மூலமும் பகவானை விரைவில் அடைய முடியும். இவ்வாறு அறிந்து கொண்டு விட்டவன் மிகப் பெரிய இடையூறுகள்

நேர்ந்தாலும், பகவானை மறந்து விட மாட்டான். உத்தானபாத மன்னனுடைய குமாரன் பக்த துருவன், தியானத்தில் மூழ்கி யிருந்தார். அந்தச் சமயத்தில், ராட்சஸர்கள் பற்பல இடையூறு கள் செய்தபோதும் அவர் அசையவில்லை; பகவானுடைய தியானத்திலேயே ஆழ்ந்திருந்தார். பகவான் விரைந்து வந்து அவருக்குத் தரிசனம் கொடுத்தார். சத்யயுகத்தில் ஜபம்-தவம் -தியானம் முதலியவற்றைக் கடுமையாகப் பயின்ற, துருவ னுக்கு ஐந்தரை மாத காலத்தில் பகவான் பிரத்யட்சமானார். ஆனால், இந்தக் கலிகாலத்தில் அவ்வளவு தீவிரமாக ஜபம்-தவம்-தியானம் செய்தால் இன்னும் சீக்கிரமாகவே பகவான் வந்து விடுவார்!

ஸ்ரீஸ்கந்தபுராணத்தில்,

த$_3$ஶவர்ஷைஸ்து யத்புண்யம் க்ரியதே து க்ருதே யுகே$_3$।
த்ரேதாயாமேக வர்ஷேண தத்புண்யம் ஸாத்$_4$யதே ந்ருபி:॥
த்$_3$வாபரே தச்ச மாஸேந தத்$_3$தி$_3$நேந கலௌ யுகே$_3$।
*(35-117)*

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

*(கிருதயுகத்தில் பத்தாண்டுக்காலம்; திரேதாயுகத்தில் ஓர் ஆண்டுக்காலம்; துவாபரயுகத்தில் ஒரு மாதகாலம்; கஷ்டங்களை சகித்துக் கொண்டு, தர்மானுஷ்டானம் செய்து வருபவர் அடையும் நற்பலன்கள் எல்லாம், கலியுகத்தில் ஒருநாள் அனுஷ்டானம் செய்பவருக்குக் கிடைத்து விடுகிறது.)*

இந்தப் பிரகாரம் கணக்குப் போட்டுப் பார்த்தால், இந்தக் கலியுகத்தில் துருவனைப் போல் சாதனை செய்தால், கிட்டத்தட்ட மூன்று மணி நேரத்துக்குள்ளாகவே பகவான் நேரில் வந்தாக வேண்டும்! 'அவரைப் போல் எங்களால் மூச்சை அடக்கி வைத்திருக்க முடியாது' என்று சொன்னால், சரி என்று ஏற்றுக் கொள்கிறோம். ஆனால், மூச்சை அடக்கி மூன்று மணிநேரம் தியானம் செய்ய முடியாவிட்டால், மூச்சை அடக்காமல் மூன்று நாட்கள் சாதனை செய்தாலாவது பகவான் வந்தாக வேண்டுமே? 'எங்களால் மூன்று நாட்களுக்கு ஒற்றைக் காலில் நிற்க முடியாது' என்றால், அதுவும் சரிதான். இம்மாதிரி நிற்க முடியாத நிலையில், உட்கார்ந்து கொண்டு சாதனை செய்யும்போது, மூன்று நாட்களுக்குப் பதிலாக ஆறு

நாட்களிலேனும் பகவான் தரிசனம் கொடுத்தாக வேண்டும். மல-மூத்திரங்களை கட்டுப்படுத்தி, பசி-தாகம்-தூக்கம் ஆகியவற்றை முற்றிலுமாக ஒழித்து விடமுடியாது என்றால், எட்டு ஜாமத்தில் ஒரே ஒரு தடவை பால்-பழம் அருந்தி, துருவனைப் போல் நாமஜபம்-ஸ்வரூபதியானம் எப்போதும் செய்து வந்தால், துருவனுக்கு எவ்வளவு காலம் கழிந்து பகவத் தரிசனம் கிடைத்ததோ, அதே கால அளவிலாவது நமக்குக் கிடைத்தாக வேண்டும். இல்லையென்றால், கலியுகத்தின் தனிப்பெருமை என்னவாச்சு? இந்தக் கலியுகத்தில் (கடுமையான சட்ட திட்டங்களிலிருந்து) இவ்வளவு தள்ளுபடி இருக்கிறது!

'ஆறு மாதங்களுக்கு பால் அல்லது பழம் மட்டும் உணவாகக் கொண்டு ராமநாமஜபம் செய். நான் உறுதியாகச் சொல்கிறேன்-இப்படிச் செய்து வந்தால் எல்லாவிதமான மங்களமும், எல்லா சித்திகளும் உன் கைப்பிடியில் வந்து விடும்; அதாவது, தாமாகவே உன்னை வந்தடைந்து விடும்' என்று ஸ்ரீதுளஸீதாஸர் கூறுகிறார்.

இதில் நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால், வேறெதுவும் செய்ய முடியவில்லை என்றாலும், ஆறு மாத காலம் தொடர்ந்தாற்போல் பஜன்-தியானம் என்ற சங்கிலித் தொடர் அறுந்து போகாமல் இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும்; அந்த பஜன்-தியானமும் நம்முடைய குறிப்பிட்ட ஆசையை நிறைவேற்றிக் கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தோடு இல்லாமல், அதாவது உலகாயத பொருட்களை அடைவதற்காக அல்லாமல், பகவானை அடைவதற்காகவே நம்பிக்கையோடு, நிஷ்காம பிரேமபாவத்தோடு செய்து வரவேண்டும்.

ஆறுமாத காலம் என்ற விஷயம், நம்முடைய சிரத்தை-பிரேமையின் குறைவைக் குறிப்பதாகும். இல்லையென்றால், பகவானிடம் தூய, உறுதியான பிரேமை ஏற்பட்டு விட்டால், பசி-தாகம் எதுவும் தோன்றாது; பகவானைத் தவிர வேறு எந்தப் பொருளிலும் நாட்டம் செல்லாது; ஏன், தன்னுடைய சரீர உணர்வு கூட இருக்காது. இவ்வித நெருக்கடியான நிலை ஏற்பட்டுவிட்டால் பகவான் காலம் தாழ்த்த முடியாது; அப்போதே தரிசனம் கொடுத்தாக வேண்டும். ஏனென்றால்

பகவான் தோற்றமளிப்பதற்குக் காலகெடு ஏதும் இல்லை; சந்திக்க (தரிசிக்க) வேண்டும் என்ற தீவிர ஈடுபாடும் பெருவிருப்பமும் இருந்தால் போதும்.

ஸகர வம்சத்து மன்னன் விசுவஸஹனுடைய குமாரன் கட்வாங்கனின் கதை ஸ்ரீமத் பாகவதத்தில் வருகிறது. அவர், 'எனக்கு இன்னும் எத்தனை ஆயுட்காலம் பாக்கி இருக்கிறது?' என்று தேவதைகளைப் பார்த்துக் கேட்டார்.

'இரண்டு நாழிகைப் பொழுது பாக்கி இருக்கிறது' என்று பதில் வந்தது.

இதைக் கேட்டதும், அவர் எல்லா செயல்களையும் விட்டு விட்டு, பரமாத்மாவை தியானிப்பதில் ஒன்றிப் போனார். இவ்விதம் அவர் தீவிரமாக ஈடுபட்டதால் இரண்டு நாழிகைப் பொழுதிலேயே பகவான் ஸ்ரீஹரியை அடைந்து விட்டார்.

பகவானை அடைவதற்கு நீண்டகாலம் தேவை யில்லை; 'பரமாத்மாவைப் பார்த்து விட வேண்டும்' என்ற வெகு ஆழமான விருப்பம் இருந்தால் மட்டும் போதும்; ஆழமான விருப்பம் ஏற்பட்டவுடனேயே பகவான் கிடைத்து விடுவார்; தாமதம் செய்ய மாட்டார். ஓர் உதாரணம் பார்ப்போம். ஒரு மனிதன் கால் தடுமாறி, ஆற்று வெள்ளத்தில் மூழ்கிக் கொண்டிருக்கிறான். அவனுக்கு நீந்தவும் தெரியாது. ஆனால், தண்ணீருக்கு மேலே வந்துவிட வேண்டும் என்று தவியாய்த் தவிக்கிறான்; கைகால்களை அடித்துக் கொள்கிறான். அந்த நேரத்தில் அவனுக்குத் தண்ணீருக்கு மேலே வந்துவிட வேண்டும் என்ற லட்சியம் தான் மேலே நிற்கிறது. அவன் வெளியே வந்துவிட வேண்டும் என்ற அவனுடைய தவிப்பு இருக்கிறதே, அதற்குப் பெயர்தான் ஆழமான விருப்பம். இவ்விதமே, சம்சாரக் கடலிலிருந்து வெளியே வந்துவிட வேண்டும் என்ற ஆழமான விருப்பமும், பரமாத்மாவே நிரந்தர லட்சியமாகவும் கொண்டவரை, பகவான் தானே விரைவில் சம்சாரக் கடலிலிருந்து கரையேற்றிவிடுகிறார். கீதையில்,

> தேஷாமஹம் ஸமுத்$_3$த$_4$ர்தா ம்ருத்யுஸம்ஸாரஸாகராத் ।
> ப$_4$வாமி நசிராத்பார்த்த$_2$ மய்யாவேஶிதசேதஸாம் ॥
>
> *(12-7)*

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

*(அர்ஜுனா! என்னிடமே மனத்தை நிலைநிறுத்தி பேரன்புடன் வழிபடும் பக்தர்களை விரைவாகவே மரணவடிவான சம்சாரக் கடலிலிருந்து கரையேற்றி விடுகிறேன்.)*

மேலே சொல்லப்பட்ட தீவிரமான ஈடுபாடும் ஆழமான விருப்பமும், சிரத்தையோடு கூடிய தூயதான பிரேமையிலிருந்து தான் உண்டாகின்றன. சாதகனுக்குப் பகவானிடம் தூய பிரேமை ஏற்படுங்கால், அவனுக்கு விரைவிலேயே பகவானின் தரிசனம் கிடைத்து விடுகிறது. வேறிடம் செல்லாத பிரேமையின் லட்சணம் என்னவென்றால், அவன் தன் பிரேமைக்குரிய வஸ்துவின் பிரிவை சகித்துக் கொள்ள முடியாது; பகவானைப் பிரிந்திருப்பதில் (ராமபிரானைப் பிரிந்திருந்த காலத்தில்) பரதனைப் போல வேதனையை அடைவான்; பகவானுடைய பிரிவைப் பொறுக்க முடியாமல், உயிரை விடவும் ஆயத்தமாகிவிடுவான்.

பிரேமைக்குரிய வஸ்துவின் பிரிவில் இவ்விதம் பிரிவாற்றாமையும் வேதனையும் ஏற்பட்டதும் பகவான் நேரில் வந்து காட்சி தருவதில் கால தாமதம் ஏற்படாது. தண்ணீரிலிருந்து வெளியே போடப்பட்ட மீன், எவ்வாறு தண்ணீருக்காகத் தவித்துப் போகிறதோ, அவ்வாறே பகவானுக்காக நாம் தவியாய்த் தவிக்க வேண்டும். 'தண்ணீருக்கு வெளியே விடப்பட்ட மீன், தண்ணீருக்காகத் தவித்து செத்துப் போகிறது. பின்னர், தண்ணீரில் போட்டாலும் அது பிழைத்துக் கொள்வதில்லை' என்று சொன்னால் அதுவும் சரிதான். தண்ணீர் என்பது ஜடப் பொருள்; பகவான் தண்ணீரைப் போல ஜடப்பொருள் (அசேதன வஸ்து) அல்லர்; அவர், உயிர்ப்பு உடையவர்; பிரேமையும் கருணையும் உடையவர்; அவர், எப்படி, வராமல் தடைபட்டு நிற்க முடியும்? 'ஒருவன் என்னை எவ்வாறு வழிபடுகிறானோ, நான் அவனை அவ்வாறே வழிபடுகிறேன்' என்று, அவரே உறுதிமொழி கூறியுள்ளார். (கீதை 4-11)

எவ்விதம் சகோர பட்சி, பௌர்ணமி நாளில், முழு நிலவை, அது மறைந்து போகும் வரையில், கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டேயிருக்கிறதோ, அவ்விதமே, பகவானை நித்திய நிரந்தரமாகத் தியானம் செய்தால், பகவான் தானாகவே காட்சி தந்து விடுகிறார். பகவான் சொல்கிறார் -

அநந்யசேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ:।
தஸ்யாஹம் ஸுலப$_4$: பார்த்த$_2$ நித்யயுக்தஸ்ய யோகி$_3$ந:॥
*(கீதை 8-14)*

*(அர்ஜுனா! வேறிடம் செல்லாத மனத்தோடு நித்திய நிரந்தரமாக புருஷோத்தமனான என்னை எவர் தியானம் செய்கிறாரோ, நித்திய நிரந்தரமாக என்னுடன் இணைந்துள்ள அப்படிப்பட்ட யோகிக்கு நான் எளிதில் அடையத் தக்கவன்; அதாவது, நானாகவே அவனை அடைந்து விடுகிறேன்.)*

'சகோர பட்சி, சந்திரனைக் கண்ணெதிரில் பார்த்துக் கொண்டிருக்கிறது; ஆகவே (சந்திரனைப் பற்றிய ஒரே நினை வாக சிந்தித்துக் கொண்டிருப்பது) அது எளிய செயலாகிறது' என்றீர்களானால், அது சரிதான். ஆனால், நம்பிக்கையும் பக்தி யும் இருக்குமேயானால் நமக்கும் கூட பகவான் கண்ணுக்கு நேரில் உள்ளார்; நம்பிக்கை-பக்தி இல்லை என்றால் கண்ணெ திரிலும் அருகிலும் இருந்தாலும், தொலைவு தான்! பாருங் கள். கிருஷ்ணன் பிரத்யட்சமாக இருந்தார்; அவரிடம் நம்பிக் கை-பக்தி இல்லாத துரியோதனன் முதலியோருக்கு அவர் கண்ணால் காணப் பட்டும் அருகில் இருந்தும் கூட, வெகு தூரத்தில் தான் இருந்தார்; அடையப்பட்டவராக இருந்தாலும் அடைய முடியாதவராக இருந்தார். ஆனால், துருவன் முதலி யோர்க்கு அடையமுடியாதவராகவும் வெகு தொலைவிலும் இருந்தாலும், பகவானிடம் அசைக்க முடியாத நம்பிக்கையும் அவரிடமே ஒன்றிவிட்ட பிரேமையும் இருந்ததால், அண்மை யிலேயே இருந்தார்! தேவரிஷி நாரதருடைய உபதேசத்தை லட்சியமாகக் கொண்டு துருவன் தியானம் செய்ததைப் போலவே, நாமும் கீதை-ராமாயணம்-பாகவதம் முதலிய நூல் கள் மற்றும் மகாத்மாக்களுடைய நல்லுரைகளுக்கு ஏற்ப லட்சியத்தை ஏற்படுத்திக் கொண்டு நம்பிக்கை-பிரேமை யுடன் தியானம் பயில வேண்டும்; அந்த லட்சியத்தை அடை வதில் பெரிய பெரிய கஷ்டங்கள் ஏற்பட்டாலும், பகவானு டைய தியான ஸ்வரூபத்தை, சாதகப் பட்சி கண் இமைக்காது சந்திரனையே பார்த்துக் கொண்டிருப்பதைப் போன்று நாமும் சாதனையை விட்டு விடாமல் இருக்க வேண்டும். ஆகாயத் தில் உலாவும் எல்லா மேகங்களும் மழை பொழிவதில்லை;

என்றாலும், ஒரு சாதாரண மேகத்தைப் பார்த்தாலும் சாதகப் பறவை (மழைநீர் வேண்டும்-என்று வேண்டிக் கொள்வதைப் போல) பிவு, பிவு என்று குரல் கொடுக்கிறது; அப்போது, அந்த மேகக் கூட்டத்திலிருந்து சிறிது மழையும் பெய்கிறது. இதே போல, பகவானுடைய அடியார் திருக்கூட்டத்தைக் காணும் போதெல்லாம், பகவானைத் தரிசிக்க வேண்டும் என்ற விருப்பமும் துடிப்பும் நமக்கு ஏற்பட வேண்டும். ஆலங் கட்டி மழை பெய்யும்போது, சாதகப் பட்சியின் சிறகு ஆலங் கட்டியால் தாக்கப்பட்டு சேதமடைந்து போனாலும் அது தன்னுடைய பிடிவாதத்தை (குரல் கொடுப்பதை) விட்டு விடாமல், 'மழைத் துளிகள் கிடைக்கும்' என்ற நம்பிக்கை யைத் தொடர்ந்து வைத்துக் கொண்டிருக்கிறது. இவ்விதமே, நமக்குப் பெரிய துன்பங்கள் வந்தாலும், லட்சியமாகக் கொண் டுள்ள பகவத் ஸ்வரூபத்தை விட்டு விடாமல், பகவானை அடைதல் என்ற மழைத்துளி நம்பிக்கையைத் தொடர்ந்து வைத்துக் கொண்டிருக்க வேண்டும். சாதகப் பறவை ஒரு கட்டுப்பாடு வைத்துக் கொண்டிருக்கிறது; தாகத்தால் அதனு டைய உயிரே போவதாக இருந்தாலும் சரி, மேகத்திலிருந்து பொழிந்து கொண்டிருக்கும் மழைத் துளியைத் தவிர, வேறு நீரை அது பருகுவதில்லை. இவ்விதமே, நாமும், பகவானை அடைதல் என்பதைத் தவிர உலகத்தின் பிற போகங்களில் விருப்பம் கூட கொள்ளக்கூடாது. இவ்வாறாக, தீவிரமான விருப்பமும், தேவையும் ஏற்பட்டாலும் கூட சாதகப் பட்சிக்கு, ஒருக்கால், தண்ணீர் கிடைக்காமல் கூடப் போகலாம்; ஆனால் பகவானோ, மிகத் தீவிரமாக விருப்பம் கொண்டுள்ள சாதகனுக்கு நிச்சயமாகக் கிடைப்பார்! ஏனென்றால், சாதகப் பறவைக்கு நீர் தேவைப்படுகிறது; ஆனால், நீர் அசேதனப் பொருள் ஆனதால், அதற்கு சாதகப்பறவை தேவைப்பட வில்லை. ஆனால், பக்தன் பகவானுக்காக ஏங்குவதைப் போலவே, பகவானும் பக்தனுக்காக ஏங்குகிறார்! பகவான் சொல்கிறார்-

யே யத$_2$ா மாம் ப்ரபத்$_3$யந்தே தாம்ஸ்ததை$_2$வ ப$_4$ஜாம்யஹம் ।

*(கீதை 4-11)*

பகவான், மேலும் இவ்வாறு கூறியிருக்கிறார் -

ஸமோऽஹம் ஸர்வபூ₄தேஷு ந மே த்₃வேஷ்யோऽஸ்தி ந ப்ரிய:।
யே ப₄ஜந்தி து மாம் ப₄க்த்யா மயி தே தேஷு சாப்யஹம்॥
(கீதை 9-29)

*(நான் எல்லா உயிர்களிடத்தும் சமநோக்குடன் நிறைந்திருக்கிறேன். எனக்குப் பிரியமானவன், பிரியமில்லாதவன் என்று யாரும் இல்லை. ஆனால், பிரேமையோடு என்னை வழிபடும் பக்தர்கள், என்னிடம் உள்ளார்கள்; நானும் அவர்களிடம் பிரத்யட்சமாக வெளிப்படுகிறேன்.)*

நிஷ்காம பிரேம பாவத்தோடு பகவானிடம் ஈடுபட்டு பகவானையே தன்னுடைய மிகவும் அன்புக்குரியவராகக் கருதும் ஞானியான பக்தன் எவனோ, அவன் பகவானுக்கும் மிகவும் அன்புக்குரியவன். இது பகவானுடைய பிரகடனம்!

தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த ஏகப₄க்திர்விசிஷ்யதே।
ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த₂மஹம் ஸ ச மம ப்ரிய:॥
(கீதை : 7-17)

*(அவர்களுள், என்னிடமே நிலைத்து நின்று, ஒன்றிய பிரேமையுடன் பக்தி செலுத்தும் ஞானியான பக்தன் மிகவும் உத்தமமானவன். ஏனென்றால், என்னை உண்மையாக அறிந்து கொண்ட ஞானிக்கு நான் மிகவும் பிரியமானவன்; அந்த ஞானியும் எனக்கு மிகவும் பிரியமானவர்.)*

ஆகவே, பகவானிடம் ஒன்றிய-தூய அன்பு ஏற்படுவதற்கு, சிரத்தை-பக்தியோடு, நித்திய நிரந்தரமாக, பலனில் விருப்பமில்லாமல், பகவத் தியானத்தைப் பயின்று வரவேண்டும்.

'அப்பு, வாயு, தேயு, மண் ஆகியவற்றினூடே ஆகாயம் நிறைந்திருப்பதைப் போலவே, எல்லாப் பிராணிகளிடமும் பகவான் விளங்குகிறார்; எல்லாமும் பகவானுடைய ஒரு சிறுபகுதியே ஆகும்' என்று, ஒவ்வொரு நாளும் நாம் தியானம் செய்ய வேண்டும். கீதையில்,

யோ மாம் பஶ்யதி ஸர்வத்ர ஸர்வம் ச மயி பஶ்யதி।
தஸ்யாஹம் ந ப்ரணஶ்யாமி ஸ ச மே ந ப்ரணஶ்யதி॥
(கீதை : 6-30)

**(எல்லாப் பிராணிகளிடமும் ஆன்மாவாக வாசுதேவனான நான் விளங்குவதைக் காண்பவன்; அதேபோல, எல்லாப் பிராணிகளையும் என்னுள்ளே காண்பவன் எவனோ, அவனால் நான் கண்ணால் பார்க்கப்படாமல் இருக்க மாட்டேன்; அவனும் என்னால் காணப்படாமல் இருக்க மாட்டான்.)**

பகவானால் மேலே சொல்லப்பட்ட சாதனையை எப்போதும் ஆர்வத்துடன் செய்து வரவேண்டும். அல்லது, வஸ்துக்களையெல்லாம் பகவானின் திருவடிவங்களாகவும், செயல்களையெல்லாம் பகவானுடைய லீலையாகவும் எண்ணி எண்ணி எப்போதும் ஆனந்தத்தில் அழுந்தியிருக்க வேண்டும். ஏனென்றால், பகவானே உலகில் காணப்படும் அந்தந்தப் பொருட்களாக உருவெடுத்திருக்கிறார். உபநிடதங்களில், 'முதலில், ஒரு பகவான் தான் இருந்தார்; பின்னர், அவரிடம் 'நான் ஏராளமாக ஆகிவிட வேண்டும்' என்ற இச்சை உண்டாயிற்று -

ஸோ஽காமயத। பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி।

*(தைத்ரீயம்-2/6)*

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

அப்போது பகவானே பல உருவங்கள் ஆனார். துவாபர யுகத்தில், பிரும்ம தேவர் இடைச் சிறுவர்களையும் கன்றுக் குட்டிகளையும் எடுத்துச் சென்று குகையில் ஒளித்து வைத்தபோது, பகவான் ஸ்ரீகிருஷ்ணனே மாடு மேய்க்கும் சிறுவர்களாகவும் கன்றுக்குட்டிகளாகவும் தோற்றம் எடுத்து லீலை புரிய ஆரம்பித்தார். ஸ்ரீமத் பாகவதத்தில், 'எத்தனை கன்றுக்குட்டிகள், இடைச் சிறுவர்கள் இருந்தார்களோ, அத்தனை! அவர்களுடையதைப் போன்றே கை-கால் முதலிய உறுப்புகள்; அதே போன்று, அதே எண்ணிக்கையில் தடிகள், கொம்புகள், புல்லாங்குழல்கள் (உணவு அருந்துவதற்கான)இலைகள், உணவுச் சம்புடங்கள்; அப்படியே, அதே எண்ணிக்கையில் உடை, அணிகள், அவர்களுடையதைப் போன்றே சீலம், இயல்பு, குணம், பெயர், உடற்கட்டு, வயது; அவர்களைப் போன்றே நடை-ஓட்டம் முதலியன இருந்தன. கொஞ்சங்கூட மாறுதல் இல்லாமல், சரியாக அவர்களைப் போன்றே, அதே எண்ணிக்கைக்கு, பிறப்பில்லாதவரான பகவான், உருவங்கள் ஏற்று அழகாக விளங்கினார். அந்த நேரத்தில், 'ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்'-என்ற வேத

வாக்கியமே உருக் கொண்டு வந்தாற் போலிருந்தது!' என்று கூறப்பட்டிருக்கிறது.

இவ்விதமாக, ஒவ்வொரு வஸ்துவையும் பகவானுடைய வடிவமாகவும், ஒவ்வொரு செயலையும் பகவானுடைய லீலையாகவும் கருதி, ஒவ்வொரு நொடியிலும் ஆனந்தத்தில் அழுந்தியிருக்க வேண்டும். பக்தர்களுக்கு இந்த சாதனை மிகவும் மேலானது; எளிதானது.

கண்களில் பச்சை நிற மூக்குக் கண்ணாடி போட்டுக் கொண்டு பார்த்தால், உலகமே பச்சை நிறமாகத் தோன்று கிறது. அதேபோல, நமது உள்ளம் என்ற உருவங் கொண்ட கண்களின் மேல், ஸ்ரீஹரி என்ற பாவனையாகிற மூக்குக் கண்ணாடியைப் பொருத்திக் கொண்டு விட்டால், உலகம் முழுவதும் உண்மையில் பகவான் ஸ்ரீஹரியாகவே தோற்ற மளிக்கும். இந்த விநோதமான மூக்குக் கண்ணாடியின் தனிச் சிறப்பு என்னவென்றால், வெவ்வேறு நிறங்களைக் கொண்ட உலகம், பச்சைக் கண்ணாடியின் பிரபாவத்தால், நமக்குப் பச்சையாகத் தோன்றுகிறது; ஆனால், உண்மையில், இவ்வுல கம் ஸ்ரீஹரியின் திவ்வியத் தோற்றமே; அறியாமை காரணமாக இந்த ரகசியத்தை நாம் உணர்வதில்லை; அதனால் தான், நமக்கு ஸ்ரீஹரி உலகமாகத் தென்படுகிறார்; உண்மையில், எல்லாம் பகவானாகவே இருந்தன; பகவானாகவே இருக்கின்றன.

கீதையிலும் எல்லாவற்றிலும் பரமாத்மாவைக் காண்பதன் அளவிலாத பெருமை புகழப்பட்டிருக்கிறது. பகவான் சொல்கிறார் -

ப$_3$ஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந்மாம் ப்ரபத்$_3$யதே।
வாஸுதே$_3$வ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுது$_3$ர்லப$_4$: ॥
(கீதை 7/19)

*(பல பிறவிகளுக்குப் பின்னர், கடைசிப் பிறவியில் தத்துவஞானத்தை அடைந்துவிட்ட ஒருவர், 'எல்லாமே வாசுதேவன் தான்' என்று உறுதியோடு என்னைப் போற்று கிறார்; ஆனால், அத்தகைய மகாத்மா கிடைத்தற்கரியர்.)*

இந்த சாதனை மிகவும் உயர்வானது. அதனால், நாமெல்லாம் எல்லாப் பிராணிகளிலும் பகவானைக் காண

வேண்டும். இத்தகைய பயிற்சியினால், பகவான் விரைவிலேயே கிடைத்து விடுவார்.

சாந்தோக்ய உபநிஷத்தில் ஒரு கதை வருகிறது.

உத்தாலக மாமுனிவர், தன்னுடைய மைந்தன் சுவேதகேதுவைப் பார்த்து, 'எந்த ஒரு பொருளைப் பற்றிய ஞானம் ஏற்பட்டால், எல்லாப் பொருட்களைப் பற்றிய ஞானமும் ஏற்பட்டுவிடுமோ, அந்த வித்தையை நீ கற்றுக் கொண்டாயா, இல்லையா?' என்று கேட்டார்.

'அந்த வித்தை என் ஆசாரியருக்கே தெரியாது. தெரிந்திருந்தால், எனக்கு அவசியம் கற்பித்திருப்பாரே? சரி, இப்போது நீங்கள் எனக்கு சொல்லிக் கொடுங்கள்'.

தங்கத்தைப் பற்றி அறிந்து கொண்டு விட்டாலே, தங்கத்தால் செய்யப்பட்ட எல்லா அணிகலன்களைப் பற்றிய ஞானமும் உண்டாகிவிடுகிறது. வேறு வேறு பெயர்கள், வடிவங்கள், அமைப்புகள் கொண்ட ஆபரணங்கள் எல்லாமே, தங்கம் தான். இவ்வாறே, பரமாத்மாவைப் பற்றிய தத்துவஞானம் ஏற்பட்டுவிட்டவருக்கு, உலகப் பொருட்கள் அனைத்துமே பகவானின் வடிவமாகவே தோன்றத் தொடங்கு கின்றன. தண்ணீரைப் பற்றிய தத்துவ அறிவு ஏற்பட்டுவிட்டால், மேகம்-நீராவி-நீர்குமிழி-நீர்த்துளி-பனிக் கட்டி ஆகிய எல்லாவற்றிலும் நீர் தான் உள்ளது என்ற உண்மை புலனாகிவிடுவதைப் போல பரமாத்மாவைப் பற்றிய தத்துவஞானம் ஏற்பட்டு விட்டால், உலகத்திலுள்ள அனைத்துப் பொருட்களிலும் பரமாத்மாவே காட்சி கொடுக்கத் தொடங்குவார்.

(பகவான், உலகம் இவற்றிடையே) பேதம்-அபேதம் கற்பிக்கும் இரண்டு கொள்கைவாதிகளும், இந்த விஷயத்தை முற்றிலுமாக ஏற்றுக் கொள்கிறார்கள். இவ்விரண்டு கொள்கை வாதிகளுக்குமிடையே என்ன வித்தியாசம்? அபேதம் (வேற்றுமை இன்மை) பேசும் சாரார், 'உலகமே பிரம்மமயம், நானும் பிரம்மமே' என்று கூறுகிறார்கள். பேதம் (வேற்றுமை) பேசும் கூட்டத்தினர், 'உலகம் பிரம்மமயம்; நான் அதன் சேவகன்' என்று சொல்கிறார்கள். இந்த விஷயத்தில், அவர்களிடையே உள்ள வித்தியாசம் இவ்வளவு தான். தகுதி

அடிப்படையில், இவ்விரண்டு விதமான சாதனைகளும் உயர்ந்தவை தான்.

பக்தி மார்க்கம் என்பது எளிதாகவும், சுலபமாகவும் இருப்பதால், சாமான்ய மக்களுக்கு மிகவும் ஏற்றது. பக்தி வழியை, எல்லோருமே-இழிந்த ஜாதி, மூடன், பாபிகளும் கூட-பின்பற்றலாம். ஏனென்றால், பகவானுக்கு வேண்டிய தெல்லாம், தூய அன்பு. பகவான், அன்பை மட்டும் தான் பார்க்கிறார். சபரி ஒன்றும் ரொம்பப் படித்த மேதை அல்லள்; பிறப்பினாலும் தாழ்ந்தவள். ஆனால், பகவான் ஸ்ரீராமசந்திர மூர்த்தி அவளுடைய எல்லையற்ற பக்தியைக் கண்டு, அவளுடைய குடிசைக்குள் சென்று, அவள் கையால் கொடுத்த கனிகளை உண்டார்! ஆகா! ஸ்ரீராமப்பிரபுவின் அபாரமான இந்தக் கருணையை எவ்வாறு பாராட்டுவது!

ஆழ்ந்த நம்பிக்கையும் பிரேமையும் இல்லாதவர், உண்மையான சாதனைகளைச் செய்ய முடியாது; பகவான் அவருக்கு விரைவில் தரிசனம் கொடுக்க மாட்டார். ஆகவே, பகவானுடைய குணம்-இயல்பின் பக்கம் பார்வையைச் செலுத்தி, பகவான் தரிசனம் கொடுப்பார் என்று நிச்சயமாக நம்பிக்கை வைத்து, ஒவ்வொரு விநாடியும் அவர் வருகையை நாம் எதிர்பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும். 'பகவான் இருக்கிறார்; பலருக்கு தரிசனம் கொடுத்திருக்கிறார்; கொடுத்து வருகிறார்; நமக்கும் கட்டாயம் கொடுப்பார்' என்ற உறுதியான நம்பிக்கை மனத்தில் இருக்க வேண்டும். அவர் நம்முடைய குற்றங்குறைகளைக் கண்ணெடுத்தும் பார்க்க மாட்டார்; அவருடைய இதயம் மிகவும் மிருதுவானது; எளிமை-தயவு-பிரேமை நிறைந்தது. அவர் அனைவருள்ளும் அந்தர்யாமியாக உள்ளார்; எல்லாம் வல்ல பரமாத்மா, எல்லா இடங்களிலும் விளங்குகிறார். பக்தனுக்கு ஆழ்ந்த நம்பிக்கையும் பிரேமையும் ஏற்பட்டவுடனேயே அவர் வெளிப்பட்டு விடுகிறார்.

எனவே, சபரியைப் போல ஒவ்வொரு விநாடியும் பகவானுடைய வருகையை நம்பிக்கையுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். இவ்விதம் எதிர்பார்த்துக் கொண் டிருந்தால், பகவான் விரைவிலேயே வந்துவிடுவார். ஆனால், இதற்கு மாறாக, 'பகவான் இருக்கிறாரா, இல்லையா?-என்றே

தெரியவில்லை; 'இதற்கு முன் யாருக்காவது தரிசனம் கொடுத்திருக்கிறாரா, இல்லையா?'; 'இப்போது வருவாரா, மாட்டாரா?; 'எனக்குத் தரிசனம் கொடுப்பாரோ, மாட்டாரோ?' - என்றெல்லாம் சந்தேகம் கொள்ள ஆரம்பித்தால், பகவானை அடைவது மிகவும் கடினம். ஏனென்றால், இத்தகைய அவ நம்பிக்கையுடைய, சந்தேகப் பிராணியான மதியீனனுக்கு, பகவான் வெகு தூரத்தில் இருக்கிறார்; இப்படிப்பட்டவனுக்கு சுகம் இவ்வுலகிலும் இல்லை; அவ்வுலகிலும் இல்லை. பகவான் சொல்கிறார்-

அஜ்ஞஶ்சாஶ்ரத்$_3$த$_3$த$_4$ாநஶ்ச ஸம்ஶயாத்மா விநஶ்யதி ।
நாயம் லோகோ஽ஸ்தி ந பரோ ந ஸுக$_2$ம் ஸம்ஶயாத்மந: ॥

*(கீதை 4/40)*

*(விவேகமும் சிரத்தையும் இல்லாத, சந்தேகப் பிராணியான மனிதன் பரமார்த்த விஷயங்களிலிருந்து நிச்சயமாக விலகிப் போய் விடுகிறான். இவ்விதம் சந்தேகப்படும் மனிதனுக்கு இவ்வுலகம் இல்லை; மேலுலகம் இல்லை; சௌக்கியமும் இல்லை.)*

பகவானை அடைவதில் எவனுக்கு சந்தேகம் இருக்கிறதோ, அவன் பகவானை அடைவதற்காக எவ்வித முயற்சியும் செய்வதில்லை; எதிர்பார்ப்பும் இல்லை-என்னும் போது, அவன் மனம் பகவானிடம் எப்படி ஒன்றிப் போகும்? ஆகவே தான், நாம் எவ்வளவு இழிந்தவனாக, பாவியாக, அறிவிலியாக, அஞ்ஞானியாக இருந்தாலும் சரி, பகவானிடம் உறுதியான சிரத்தை-விசுவாசத்தோடு அவரை அடைவதற்கான முயற்சிகளில் ஈடுபட்டே ஆக வேண்டும். அளவில்லா அன்பும் கருணையும் கொண்ட பகவான், நம்முடைய குற்றங்குறைகள் பக்கம் பார்வையைச் செலுத்துவதில்லை.

அந்தண பக்தனான பத்மநாபன், பகவானுடைய அருங் குணங்களையே நினைத்து நினைத்து உணர்ச்சிவசமாகி, மனத்துக்குள்ளேயே, 'பகவான் நிச்சயமாக எனக்குத் தரிசனம் கொடுப்பார்; நான் அவர் பாதங்களில் வீழ்ந்து வணங்குவேன்; பிரேமானந்தக் கண்ணீரால் அவர் திருவடிகளைக் கழுவு வேன்; அவர் என்னைத் தூக்கி நிறுத்தி, மார்புறத் தழுவிக் கொள்வார்; அப்போது நான் ஆனந்தக் கடலில் மூழ்கி மூழ்கி எழுந்திருப்பேன்; 'உனக்கு வேண்டிய வரம் கேள்!' என்று

அவர் சொல்லியதும், ‘பகவானே, எனக்கு வரம் எதுவும் வேண்டாம்; நான் தங்களுக்குத் தொண்டு செய்வேன்; தங்களைப் பார்த்துக் கொண்டே இருப்பேன்!-என்று பதில் கூறுவேன்!’-என்றெல்லாம் அடிக்கடி. நினைத்துப் பார்த்து மகிழ்வார்; ஆனந்தக் கடலில் மூழ்கித் திளைப்பார். அப்போது அவர் உடலில் மயிர்க்கூச்சம் ஏற்படும்; கண்களில் நீர் பெருகும். இவ்விதமான பிரேமானந்த நிலை வெகுகாலம் நீடித்தது. அவருடைய இத்தகைய உன்னத உணர்வுகளையும் அபரிமிதமான பிரேமையையும் பார்த்த பகவான், சாட்சாத் தாகத் தரிசனம் கொடுத்தார். அந்தச் சமயத்தில், எல்லாத் திசைகளும் பகவானுடைய திவ்விய ஒளியினால் பிரகாசம் அடைந்தன. பக்த பத்மநாபனுக்கு, ஆயிரக்கணக்கான சூரியர் களின் ஒளிக் குவியலிடையே, சங்க-சக்ர-கதை-பத்மம் தாங்கிய நான்கு கைகளுடன் ஸ்ரீவிஷ்ணு தரிசனம் அளித்தார். பத்மநாபனுடைய இதயம் குளிர்ந்தது. அவருடைய கண்கள் இமையாமல், அனைத்துச் சுவைகளின் அமுத வாரியான பகவானுடைய காட்சி ரஸத்தைப் பருகத் தொடங்கின. பக்திவழியைப் பின்பற்றும் சாதகர்களுக்கு, இது மிகவும் சரளமான, ரகசியமயமான சாதனையாகும். ஆகவே, அன்புவழியைக் கடைப்பிடிக்கும் பக்தர்கள், பக்த பத்மநாபனைப் பின்பற்றவேண்டும்.

பகவானை உபாசிப்பதற்காக, நாம் பணிவோடு போற்றத்தக்க பல வஸ்துக்கள் சொல்லப்பட்டிருந்தாலும், அவைகளில் நான்கு விஷயங்கள் முக்கியமானவையாகும்- பகவானுடைய திவ்விய நாமம், உருவம், லீலை, இருப்பிடம். இந்நான்கிலும் ஒவ்வொன்றினுடைய குணம், பிரபாவம், தத்துவம், ரகசியம் ஆகியவற்றைத் தெரிந்து கொள்ள வேண்டும். குறைந்த பட்சம், செவி-கண்-மனம்-வாக்கு ஆகிய நான்கு முக்கிய வாயில்கள் வழியாக, மேலே சொன்ன நான்கையும் போற்றிப் பணி செய்ய வேண்டும். அதாவது, பகவானுடைய நாமம்-உருவம்- லீலை-இருப்பிடம் ஆகிய வற்றின் குணம்-பிரபாவம்-தத்துவம்-ரகசியம் முதலிய வற்றை, சிரத்தா-பக்தியோடு செவிகளின் வழியாக பகவத் பக்தர்களிடமிருந்து கேட்டல்; கண்களால் நல்ல நல்ல அறநூல்களைப் படித்தல்; படித்தபின் மனத்தால் சிந்தித்துப்

பார்த்தல்; வாக்கினால் பகவானுடைய புகழ்பாடுதல்; பக்தர் களுடன் கூடிப் பகவானின் சரித்திரங்களைப் பேசி மகிழ்தல் - ஆகியவற்றைத் தவறாமல், கைக்கொள்ள வேண்டும் என்பது கருத்து. இவ்விதம், சிரத்தை-பிரேமையுடன் இந்த நான்கையும் அனுகி உபாசித்தால், பரமாத்மாவின் நேரடி தரி சனம் ஏற்பட்டுப் பேரானந்தமும், பேரமைதியும் எல்லை யில்லாத சமத்துவ பாவனையும், பரமாத்ம ஸ்வரூப ஞானமும் ஏற்பட்டு விடுகின்றன.

பொறுமை, தயை, சாந்தி, பிரேமை, ஞானம், எளிமை முதலிய பகவானுடைய அருங்குணங்கள் எல்லாம் அவரு டைய திருநாமத்தில் நிறைந்துள்ளன. ஆலம் விதையைப் பூமியில் விதைத்துத் தண்ணீர் ஊற்றி வந்தால் ஆலமரம் உண்டாவதைப் போல, பகவானுடைய நாமம் என்ற விதையை இதயம் என்ற பூமியில் விதைத்து, சத்சங்கம், நூல்களில் படித்தவற்றைச் சிந்தித்தல் என்ற நீரை ஊற்றி வந்தால் பகவத்குண வடிவமான மரம் முளைத்துத் தோன்றும். அதாவது ஜபம்-கீர்த்தனம்-சிரவணம்-ஸ்மரணம் முதலிய வற்றால் உபாசகனுடைய இதயத்தில் பகவானுடைய திவ்விய குணங்கள் தாமாகவே தோன்றுகின்றன. இவ்வாறு, நாமத்தின் பெருமை விளக்கப்பட்டது.

திருநாமஜபம்-கீர்த்தனம்-சிரவணம்-ஸ்மரணம் செய்வ தால் அனைத்துப் பாவங்கள்-நான், எனது என்ற தன் முனைப்பு, ராக-த்வேஷம், காம-க்ரோதம், லோப- மோஹம் முதலிய எல்லா தீய குணங்கள், பொய், வஞ்சனை, களவு, ஹிம்ஸை, ஒழுக்கக்கேடு, மதுபானம், சூதாட்டம் முதலிய தீய நடவடிக்கைகள், துக்கம்-இவையெல்லாம் இல்லாமற் போய் விடுகின்றன; இதனால், உபாசகனிடம் தாமாகவே ஸத்குண- ஸதாசாரம் ஏற்பட்டு, பகவத் தரிசனம் கிடைத்து விடுகிறது. இது, நாம பிரபாவத்தின் விளக்கம்.

பகவானுடைய நாமம், பகவானிடமிருந்து வேறு படா தது. பகவானுடைய ஸ்வரூபம், அவரைப் பற்றிய ஞானம், அவருடைய நாமம்-இவையெல்லாம் ஒன்றே. உண்மையில், பகவானே நாம வடிவில் காட்சி தருகிறார். இவ்வாறு அறிந்து கொள்வது தான், நாமத்தின் தத்துவத்தை அறிந்து கொள்வதாகும்.

வாக்கினால் நாமத்தைக் கூறி ஜபம் செய்வதைக் காட்டிலும் மனத்தால் (மௌனமாக) ஜபம் செய்வது நூறு மடங்கு அதிக பலனைத் தரும். மானஸ ஜபம், சிரத்தை-பிரேமையுடன் செய்யப்பட்டால், எல்லையில்லாத பலன் கிடைக்கும். அதுவும் கூட, மறைவாகவும் நிஷ்காம பாவத்துடனும் செய்யப்பட்டால் விரைவிலேயே பகவானைக் கொண்டுவந்து நிறுத்திவிடும். இந்த ரகசியத்தைத் தெரிந்து கொண்டவன், பகவன்நாமஜபம் என்ற மறைவுக்குள்ளிருந்து பாவம் செய்ய மாட்டன். இது, பகவன் நாமத்தின் ரகசியம்.

பகவானின் வண்ணம், வடிவம், உடலமைப்பு மிகவும் மிருதுவானது; அழகானது; சுவைச் செறிவானது; மிகவும் வசீகரமானது; ஒளிமிக்கது; உலகுக்குப் புறம்பானது; மினுமினுப்பானது; வனப்பும் ஆச்சரியமும் கொண்டது. அவரிடம் உலகெங்கும் காணக் கிடைக்காத, மிகவும் வேறான தன்மை கொண்ட பொறுமை, தயை, சாந்தி, பிரேமை, நீதி, சமத்துவம், இனிமை, எளிமை, வள்ளல்தன்மை முதலிய அநேக திவ்விய குணங்கள் குடிகொண்டுள்ளன. இவை, பகவத் ஸ்வரூபத்தின் குணங்கள் ஆகும்.

பேராற்றல், மேலாண்மை, தேஜஸ், சக்தி, மஹிமை, நடைபெறப் போவதை நடக்காதிருக்கச் செய்தல்; நடைபெற முடியாததை நடைபெறச் செய்தல் முதலியன-பகவானுடைய எல்லையில்லாதப் பிரபாவம் ஆகும். பகவானுடைய ஸ்வரூப தரிசனம், ஸ்பர்சம், சம்பாஷணை மற்றும் ஸ்மரணத்தினா லேயே அனைத்துப் பாவங்கள், துக்கங்கள், துர்குண-துரா சாரங்கள் முற்றிலுமாக அழிந்து போய்விடுகின்றன; அத்துடன், அந்தப் பக்தனிடம், எல்லா நற்குண-நல்லொழுக்கங்களும் தாமாகவே தோன்றி வருகின்றன; அதனால், அவன் பகவானை அடைகிறான். இது, பகவானுடைய பிரபாவ விளக்கம்.

உண்மையில், பரமாணு-நீராவி-நீர்க்குமிழி-மேகம்-நீர்த்துளி- ஆலங்கட்டி-பனிக்கட்டி ஆகிய எல்லாம் தண்ணீர் தான்-என்பதைப் போல, ஸகுண-நிர்குணம்; ஸாகார்-நிராகார்; வ்யக்தம்-அவ்யக்தம் (வெளியில் தோன்றுவது- கண்ணுக்குப் புலப்படாமல் இருப்பது); உயிர்ப்பு உடையது-உயிர்ப்பு இல்லாதது; நிலைத்திருப்பது-அலைந்து கொண்டிருப்பது

(ஸ்தாவர-ஜங்கமம்); ஸத்-அஸத்; ஸ்தூல-சூக்ஷமம், கார்ய-காரணம் ஆகிய இவையெல்லாமும், இவைகளைத் தவிர உள்ளனவும், உண்மையில் ஒரே பகவான் தான்! இது பகவானுடைய ஸ்வரூப தத்துவம்.

நிர்குண-நிராகார பரமாத்மாவே, ஸகுண-ஸாகாரத் துடன் வெளிப்படுகிறார். இந்த ரகசியத்தை, பகவானுடைய அருள் இல்லாமல் முனிவர்களும் தேவர்களும் கூட அறிய மாட்டார்கள்; ஏனென்றால், அவர் தன்னுடைய யோகமாயை யால் இதை மறைத்து வைத்திருக்கிறார். அவருடைய ஸ்வரூபம் சிந்தனைக்கு எட்டாதது; எல்லையற்றது; தெய்விக மானது; அவர் தன்னைத்தானே தான் மட்டுமே அறிந்துள்ளார். அதுபோல, அவர் யாருக்குத் தன்னை அறிவிக்க வேண்டும் என்று எண்ணம் கொண்டு அருள் பாலிக்கிறாரோ, அவரே அறிந்து கொள்ள முடியும்; துவாபர யுகத்தில், பிரும்மதேவர் மாடுமேய்க்கும் சிறுவர்களையும், கன்று-காலிகளையும் அபகரித்துக் கொண்டு சென்றபோது, பகவான் ஸ்ரீகிருஷ்ணர் அந்த இடைச் சிறுவர்களாகவும் கன்றுக்குட்டிகளாகவும் உருவமெடுத்தார். இந்த ரகசியத்தை பலராமர் கூட அறிய வில்லை! பகவான் தானே சொன்னபோது தான் பலராமர் தெரிந்து கொண்டார். அந்தச் சமயத்தில் இடைச் சிறுவர்கள் கன்றுகள் வடிவத்தில் பகவானே இருந்தார்; இதை யாருமே அறிந்திருக்கவில்லை. இது, பகவானுடைய ஸ்வரூப ரகசியம்.

இராவணனால் விரட்டியடிக்கப்பட்ட விபீஷணன் ஸ்ரீராமசந்திர மூர்த்தியை சரண் அடைந்தான். அப்போது, பகவான், சரணமடைந்தவனை ஏற்றுப் பாது காப்பு அளித்தல், விசால மனம், பேரருள், பிரேமையோடு கூடிய தன்னுடைய நல்லியல்புகளை வெளிப்படுத்தும் வகையில், செயல் பட்டார். பகவானுடைய செயல்பாடுகளில் இவ்விதம் உன் னத குணங்களைக் காண்பது என்பது தான் பகவானுடைய லீலையில் குணங்களை சுட்டிக்காட்டுவதாகும்.

மிதிலையிலிருந்து ஸ்ரீராமன் முதலியோர் திரும்பி வந்து கொண்டிருந்தபோது, பரசுராமர் எதிர்ப்பட்டு, விற்போருக்கு அழைத்து, தோற்றுப் போனார். ஸ்ரீஇராமபிரானின் அவதார உண்மையை அறிந்து கொண்டு வாயாரப் போற்றினார்.

பரசுராமரின் வில்லை முறிப்பதற்காக, ஸ்ரீஇராமன் பெரு முயற்சி ஏதும் செய்யவில்லை. பரசுராமர் சொன்னவுடனேயே, அந்த வில் தானாகவே, ஸ்ரீராமனிடம் சென்றுவிட்டது. இது, பகவத் லீலையின் பிரபாவம். இவ்விதமே, பகவானுடைய லீலையின் குணம், பிரபாவம், தத்துவம், ரகசியத்தை அறிந்து கொண்டு, அவருடைய லீலைகளைக் காண்பது, சிந்திப்பது, படிப்பது, கேட்பது, கீர்த்தனம் செய்வது, பின்பற்றி நடப்பது முதலியவற்றால், மனிதன் கடைத்தேறி விடுகிறான்-இதுவும் பகவானுடைய லீலையின் பிரபாவம் தான்.

மாடுமேய்க்கும் சிறுவர்களையும், கன்றுகளையும் பிரும்மா அபகரித்துக் கொண்டு சென்றுவிட்ட போது, சாட்சாத் பகவானே அத்தனை சிறுவர்களாகவும் கன்று களாகவும் உருவம் ஏற்று, ஓர் ஆண்டுக்காலம் லீலை செய்தார். இந்த லீலை புரிவதற்காக, ஒரு நொடிப் பொழுதில், பகவான் பல வடிவங்கள் ஆனார். பல வடிவங்களை ஏற்ற இந்த லீலையை, பகவானுடைய ஸ்வரூபம் என்று உணர்ந்து கொள்வதுதான், பகவத் லீலையின் தத்துவத்தை அறிந்து கொள்வதாகும். ஏனென்றால், செய்பவன்-செயல்-செயப்படு பொருள்-இவையெல்லாமே, உண்மையில் பகவானே. இதே போலத்தான், இப்போதுள்ள உலகில் தாமாக நடந்து கொண்டிருக்கும் எல்லாச் செயல்களும் பகவானுடைய லீலைகளே! அந்த லீலைகள் அவரிடமிருந்து பிரிக்க முடியாதவையாகையால், அவருடைய ஸ்வரூபமே-என்பதைப் புரிந்து கொள்வதுதான், பகவானுடைய லீலையின் தத்துவத்தைப் புரிந்து கொள்வதாகும்.

பதிநான்கு ஆண்டுகள் வனவாசம் செய்துவிட்டு, ஸ்ரீராமசந்திர மூர்த்தி அயோத்திக்குத் திரும்பி வந்த போது, அயோத்தி மக்கள் எல்லோருமே அவரை உடனே பார்ப்பதற்குத் துடித்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிந்து கொண்ட ஸ்ரீராமன், கணக்கில்லாத உருவங்களை ஏற்று, அவர்கள் அனைவருக்கும் ஒரே நேரத்தில் தரிசனம் கொடுத்தார்-என்று, ஸ்ரீராமசரித மானஸத்தில் சொல்லப் பட்டிருக்கிறது.

பகவான், நொடிப் போதில், எல்லோருக்கும் காட்சி தந்தார்! ஆனால், இந்த விஷயம், வேறு எவருக்கும் தெரியாது!

ஒவ்வொருவரும் 'பகவான் எனக்குத்தான் காட்சி தந்து கொண்டிருக்கிறார்' என்று எண்ணிக் கொண்டிருந்தனர். இந்தச் சந்திப்பு லீலையில், ஒருவரோடு அவர் பேசிக் கொண்டிருந்தது, அடுத்தவருக்குத் தெரியாது - இது, பகவானுடைய லீலையின் ரகசியம்.

பகவானுடைய ஞானமயமான, தெய்விகமான அனைத்திலும் மேம்பட்டதான, அனைத்துக்கும் மேலே, என்றைக்கும் அழியாத சத்தியமான வாசஸ்தலம் விளங்குகிறது. அங்கு மனம்-புத்தி-வாக்கு முதலியன சென்றடையமாட்டா. பொறுமை, தயை, சாந்தி, பிரேமை, சமத்துவம், நீதி முதலிய பகவானுடைய தெய்விக நற்குணங்கள், அவ்விடத்தில் தாமாகவே இருந்து வருகின்றன; ஏனென்றால், பகவான் தானே பரமபதம் என்ற உருவை ஏற்றுக் கொண்டுள்ளார். இது, பகவானின் பரமபதமாகிய வாசஸ்தலத்தின் குணம் என்று சொல்லப்படுகிறது.

பஜனை-தியானம்-சத்சங்கம்-ஸ்வாத்யாயம் முதலிய சாதனைகளைச் செய்து, (அதன் பயனாக) பகவானுடைய உலகுக்குச் செல்பவர்களுக்கு, மேலே சொல்லப்பட்ட எல்லா நற்குணங்களும் முன்னதாகவே இயல்பாக வந்திருக்க வேண்டும்; ஆனால், யாருக்கேனும் ஏதேனும் ஒரு சிறுகுறை இருந்து கொண்டிருந்தாலும், அவர்கள் வைகுண்டத்தில் நுழைந்த கணத்திலேயே அந்தக் குறை நீங்கி அவர்கள் பூரண நற்குணம் கொண்டவர்களாகி விடுகிறார்கள். அங்கே சென்ற எவரும் திரும்பி வருவதில்லை. அங்கே வசிக்கின்றவர்களுடைய சரீரம், பிறப்பு-இறப்பு-மூப்பு-நோய் மற்றும் பிற விகாரங்களிலிருந்து விடுபட்டு மிகவும் புனிதமானதாக ஆகிவிடுகிறது; அவர்கள், பகவானைப் போலவே தெய்விக, ஞானமய, உலகத்தில் காணப்படாத அனைத்து நற்குணங்களும் நிரம்பியவர்களாக ஆகிவிடுகிறார்கள். அந்த உலகில் உள்ள பொருட்கள் எல்லாம் திவ்வியமானவை; அறிவு வடிவானவை; உலகப் பொருட்களின் தன்மையிலிருந்து மாறான, மேம்பட்ட இயல்புடையவை. இவ்வாறு, பகவானுடைய இருப்பிடத்தின் பிரபாவம் விளக்கப்படுகிறது.

சச்சிதானந்தத் திரட்சியான பரப்பிரம்ம பரமாத்மாவே பரமபத வடிவில் தோற்றமளிக்கிறார் என்பதால் அந்தத்

திருநாடு பரமாத்ம வடிவமே. இவ்வாறு அறிந்து கொள்வது தான், பகவானுடைய இருப்பிடத்தின் தத்துவத்தை அறிந்து கொள்வதாகும்.

பகவானுடைய பரமபதத்தில், (அதுவரையில்) அறியப் படாத வஸ்துக்கள் அறியப்படுகின்றன; அனுபவிக்கப்படாத வைகள் அனுபவிக்கப்படுகின்றன; பார்க்கப்படாத பொருட் கள் பார்வைக்கு வருகின்றன; ஏனென்றால், அவ்விடத்தை அடைந்ததும் புத்தி-மனம்-புலன்கள் எல்லாம் தெய்வத் தன்மை அடைந்து விடுகின்றன. இவ்வுலகில், பகவான் மற்றும் அவர் இருப்பிடத்தின் குணம், பிரபாவம், தத்துவம், ரகசியம், லீலை குறித்துப் பேசப்பட்டும் கேட்கப்பட்டும் தெரிந்து கொண்ட விவரங்களிலிருந்து அவை மிகவும் வேறு பட்டிருக்கின்றன. அங்கே சென்றடைந்ததுமே, பகவானும் பகவானின் வாசஸ்தலமும் எப்பேர்ப்பட்டவை என்ற ரகசியம் முழுமையாகத் தெரிந்து விடுகிறது. இது, பகவானுடைய இருப்பிடத்தைப் பற்றிய ரகசியத்தின் விளக்கம்.

இவ்விதம் குண-பிரபாவ-தத்துவ-ரகசியங்களை அறிந்து கொண்டு சாதனை புரியும் சாதகருக்கு, அவருடைய இஷ்டதேவதை தரிசனம் கிடைக்கிறது. அப்போது, அவருக்கு முற்றிலும் மாறான நிலை உண்டாகிறது; பிரேமை, ஆனந்தம், ஆச்சரியத்தில் மூழ்கிப் போகிறார். அவருக்கு பகவானைத் தவிர, வேறு எதுவும்-ஏன், தன்னைப் பற்றியும் கூட-லட்சியமில்லை.

அவர் பகவானை மட்டுமே பார்க்கிறார்; இமைகள் கொட்டாமல் பார்க்கிறார்; அவருடைய மனத்தில் நிலவும் அமைதிக்கு எல்லையே இல்லை; அவரிடம் விசேஷமான சமத்துவம் வந்து விடுகிறது. ஸகுண-நிர்குண, ஸாகார-நிராகார, வ்யக்த-அவ்யக்த வடிவமான பரப்பிரம்ம பரமாத்மா எவ்வளவு, எப்படிப்பட்ட பிரபாவம் உடையவர் என்பதை அவர் அப்படியே, அவ்வாறே, உண்மையாகத் தெரிந்து கொண்டு விடுகிறார். பின்னர், அவர் எல்லா ஐயப்பாடுகள், மனமயக்கங்கள், அறியாமை, பாவங்கள், மன வேறுபாடு களிலிருந்து நிரந்தரமாக விடுதலை பெறுகிறார்; அவர் செய்ய வேண்டியதோ, அறிந்து கொள்ள வேண்டியதோ மீதம் இருப்பதில்லை.

ஆகவே, பகவானை அடைவதற்காக வேறிடம் செல்லாத பக்திவழியை சிரத்தை-நிஷ்காமம்-ஒன்றிய தன்மையோடு கடைசி மூச்சு உள்ளவரையில் நாம் பின்பற்றி வரவேண்டும்.

## 3. பகவானின் அருள்

'பகவானுடைய அருளுக்கு ஏதேனும் காரணம் வேண்டுமா? அல்லது, காரணம் ஏதும் இல்லாமலே பகவான் அருள்புரிவாரா?' என்று ஓர் அன்பர் கேள்வி கேட்டுள்ளார். 'மனிதன், எல்லாச் சூழ்நிலையிலும் பகவானுடைய அருளைக் காண்பது எப்படி?'

பகவானுடைய பேரருளின் அளவற்ற மேன்மையை வெறும் வார்த்தைகளால் முழுமையாக எடுத்துக் கூறுவது சாத்தியமில்லை-என்பது தான் என்னுடைய பதில். ஏனென்றால், பகவானுடைய கருணை எல்லை காண முடியாத ஒரு விஷயம்; சொற்களால் கூற முடிவதோ மிகக் குறைவு தான். அத்துடன், பகவானுடைய அனுக்கிரஹத்தின் ரகசியத்தை ஓரளவு தெரிந்து கொண்டுள்ள மகான்கள் கூட, அவர்கள் தெரிந்து கொண்டிருக்கிற அளவு கூட, வாய்ச் சொற்களால் சொல்ல முடிவதில்லை. பகவானுடைய கிருபை எல்லாப் பிராணிகளிடமும் எக்காலமும் எல்லையற்றதாக விளங்கிக் கொண்டிருக்கிறது. மக்களுக்கு இது விஷயமாக என்னென்ன அனுமானங்கள் உண்டோ, அதைக் காட்டிலும் பகவானுடைய கருணை மிகவும் அதிகம்.

உண்மையில், பகவானுடைய அருள், எல்லாப் பிராணி களிடமும் எந்த ஒரு காரணமுமின்றி சமமாக எப்போதும் இயல்பாகவே இருந்து கொண்டிருக்கிறது; ஆகவே, அதனை காரணமில்லாத கருணை என்றே சொல்ல வேண்டி யிருக்கிறது. ஆனால், மனிதன், பகவானுடைய கருணையில் எந்த அளவுக்கு நம்பிக்கை வைக்கிறானோ, தன்னிடம் இவ்வளவு தான் கருணை என்று கருதுகிறானோ, அந்த

அளவுக்கே பகவான் தன்னுடைய கருணையின் தத்துவத்தை அவனுக்கு உணர்த்துகிறார்; அப்படியே, அவனுக்கும் அந்த அளவு லாபமே பிரத்யட்சமாகக் கிடைக்கிறது-என்பதால், பகவானுடைய கருணை, ஒரு காரணத்தைக் கொண்டே நிகழ்கிறது என்றும் சொல்லலாம். ஆனால், பகவானுக்கோ, இதில் தனக்கு என்று காரணம் ஏதும் இல்லை.

பகவான், எப்போதும் எல்லா வகையிலும் நிறைவு செய்யப்பட்ட விருப்பங்களை உடையவர், அனைத்துச் சக்தி களும் நிறைந்தவர், மிகப் பெரிய செல்வங்களும் மேலாண் மையும் கொண்டவர். அவரிடம், ஏதோ ஒரு விருப்பம்-ஆசை என்று வெறுமே கூட கற்பனை செய்து பார்க்க முடியுமா? அப்படி ஏதேனும் இருந்தால்தானே, ஏதோ ஒரு தன்னல நோக்குக்கு இடம் இருப்பதாகக் கூற முடியும்? அவர், தன் இயல்பாகவே, காரணம் ஏதுமின்றியே பரம தயாளு; எல்லோ ருக்கும் நல்ல நண்பர்; அவருடைய எல்லாச் செயல்களும் அனைத்துப் பிராணிகளின் நலனை முன்னிட்டே செய்யப் படுகின்றன. உண்மையில் அவர் அகர்த்தா (செயல் புரியாத வர்) என்றாலும், கருணையின் வசப்பட்டு பிராணிகளின் நலனுக்காக இயங்குபவர். அவர் பிறப்பில்லாதவர் என்ற போதிலும். சாதுக்களை மேல் தூக்கி விடுதல், தர்மத்தைப் பரப்புதல், தீயவர்களை அழித்தல், மற்றும், உலகில் தன்னு டைய திவ்விய லீலைகளை விரிவு படுத்தி மக்களிடையே பிரேமை-சிரத்தைகளைப் புகுத்துதல் என்பதற்காகவும், அவ்வப்போது, அவதாரம் எடுக்கிறார். குணங்கள் அற்றவர்; உருவமற்றவர்; விகாரம் இல்லாதவர்- என்றாலும், தன் பக்தர் களின் பிரேமைக்கு வசப்பட்டு, குணங்களும் உருவமும் கொண்டு தரிசனம் கொடுப்பதற்கும் தன் நிலையிலிருந்து இறங்கி வருகிறார். அனைத்துக்கும் தலைவர், சர்வ வல்லமை படைத்தவர், எந்நிலையிலும் சுதந்தரமானவர்-என்றாலும், பிரேமையில் உருகிப் போய் பக்தர்கள் வசப்பட்டு விடுகிறார்! இவை எல்லாவற்றுக்கும், காரணமில்லாத அவருடைய அளவற்ற கருணைதான், காரணம்.

பகவானைத் தரிசித்துவிட்ட பக்தர்கள்; பகவானுடைய தயவின் மகத்தான பெருமையை உணர்ந்துகொண்டு

விட்டவர்கள்; பகவானுடைய தயவின் ஒரு திவலையால் திக்குமுக்காடிப் போனவர்கள்-இந்த மகாபுருஷர்களுக்கும் கூட, மற்றப் பிராணிகளிடம் எவ்விதமான சுயநல உறவும் இருக்காது. அவர்களுடைய எல்லாக் காரியங்களும், சுயநலம் என்னும் காரணம் இல்லாமல், மக்கள் நலன் என்ற ஒன்றினையே நோக்கமாகக் கொண்டுள்ளன. இது இவ்வாறு இருக்கும்போது (மகாபுருஷர்களின் உன்னத நிலையே இப்படி என்னும்போது) பகவானுடைய கருணைக்குக் காரணம் வேண்டியதேயில்லை என்பதைச் சொல்லவா வேண்டும்? மகாபுருஷர்களுக்கு எந்த ஒரு பிராணியுடனும், தன்னல நோக்கான உறவு இருக்கவே இருக்காது-என்னும் விஷயம் பற்றி பகவானே கூறுகிறார் -

நைவ தஸ்ய க்ருதேநார்தே₂ா நாக்ருதேநேஹ கஶ்சந।
ந சாஸ்ய ஸர்வபூ₄தேஷு கஶ்சித₃ர்த₂வ்யபாஶ்ரய:॥
(கீதை : 3/18)

இத்தகைய மகாபுருஷர்களுக்கு இவ்வுலகில் கர்மாக் களைச் செய்வதால் எவ்விதப் பிரயோஜனமும் இல்லை; கர்மாக்களைச் செய்யாமல் இருப்பதாலும் எவ்விதப் பிரயோஜனமும் இல்லை. அதே மாதிரி, எல்லாப் பிராணி களிடமும், சிறிதளவு கூட, தன்னல நோக்கத்துடனான உறவும் இல்லை.

அப்படியிருந்தும், மக்கள் நலனை முன்னிட்டே, அவர் மூலமாகக் காரியங்கள் செய்யப்படுகின்றன.

இதே போல, தன் விஷயமாகவும் பகவான் சொல்கிறார்-

ந மே பார்₂தாஸ்தி கர்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந।
நாநவாப்தமவாப்தவ்யம் வர்த ஏவ ச கர்மணி॥
(கீதை : 3/22)

*(அர்ஜுனா! இம்மூன்று உலகிலும் என்னால் செய்யப்பட வேண்டிய கடமைகள் ஏதும் இல்லை; அடைய முடியாத ஒரு பொருள் அடையப்பட வேண்டியதும் இல்லை என்றாலும், நான் கர்மாவைச் செய்து கொண்டேயிருக்கிறேன்).*

மேலே சொல்லப்பட்டவைகளால், மகாபுருஷர்களுக் கும் பகவானுக்கும் கடமைகளும் அதன்வழி பிரயோஜனமும்

இல்லை என்ற போதும், மக்களைத் தீய வழியிலிருந்து காப்பாற்றுவதற்காகவும், அவர்களை நீதி-அறம்-பகவத்பக்தி என்ற நல்ல வழிக்குக் கொண்டு வரவேண்டும்; மக்கள் நலம் பெற வேண்டும் என்பதற்காகவும், மகாபுருஷர்கள் மூலம் எல்லாக் காரியங்களையும் பகவான் நடப்பித்துக் கொள்கிறார் என்பதும் தெளிவாகத் தெரிய வருகிறது. இதற்குக் காரணமாக இருப்பது, அவருடைய பெருங்கருணை தான்.

பகவான் மிகவும் இரக்கம் கொண்டவர்; சர்வ வல்லமை படைத்தவர்; அத்துடன், சமநோக்கும் பற்றின்மையும் உடைய வர் என்பதால், அவரால், தானாகவே எந்தச் செயலும் செய்யப் படுவதில்லை. பேரன்பும் பெருநம்பிக்கையும் கொண்டு தஞ்சம் அடையும் பக்தனின் நலனுக்காகவே அவரிடம் செயல் கள் உண்டாகின்றன; அவருடைய தயவும் விரிவடைகிறது.

இந்த இடத்தில் ஒரு கேள்வி எழக்கூடும். அதாவது, பகவானுக்கு எல்லாப் பிராணிகளிடமும் சமமான கருணை இருக்கிறது என்றால், எல்லாப் பிராணிகளுக்கும் ஒரே மாதிரியாக உயர்வான நலன்கள் ஏன் ஏற்படுவதில்லை? இது பற்றித் தீவிரமாக அலசிப் பார்த்தால், தயவின் தத்துவத்தை மக்கள் உணராத காரணத்தால், அவருடைய தயவிலிருந்து சிறப்பான நன்மைகளை நாம் அடைவதில்லை-என்பது புலனாகும். உலகத்தை உய்விக்கும் கங்கை, மக்களின் நலனை முன்னிட்டு நிரந்தரமாகப் பெருகிக் கொண்டிருக் கிறது; ஆனால், கங்கையின் மகத்தான புனிதத்தை உணராத வர்கள்; குறைந்த பக்தியும் நம்பிக்கையும் உடையவர்கள்; ஸ்நான-பானம் செய்யாமல் விலகிப் போகிறவர்கள், கங்கையினால் விசேஷமான லாபத்தைப் பெறமாட்டார்கள். இதே போல, பகவானுடைய தயை என்னும் பிரவாகம். கங்கையின் பிரவாகத்தைக் காட்டிலும் அதிகமாக, இரவு பகலாக, எல்லா இடங்களிலும் பெருகிக் கொண்டிருக்கிறது; என்றாலும், மனிதன், அதன் பிரபாவத்தை அறியாத காரணத்தால், பகவானைச் சரண் புகுந்து, அவருடைய தயவிலிருந்து சிறப்பான நன்மைகளைப் பெறுவதில்லை.

சமமான நோக்கு என்ற வகையில், பகவானுடைய தயவின் சாதாரண லாபம் எல்லாப் பிராணிகளுக்கும்

கிடைக்கத் தான் செய்கிறது; ஆனால், அவருடைய தயவுக்குப் பாத்திரமாகிறவர், அதன்மூலம் மேலான நன்மைகளைப் பெற முடியும். சூரியனுடைய வெய்யிலும் வெளிச்சமும் எல்லா இடங்களிலும், எல்லோருக்கும் சமமாகவே கிடைக்கின்றன. அதாவது, சமமான நோக்கு என்ற கோணத்தில் சூரியனிடமிருந்து கிடைக்கக் கூடிய பயன் எல்லோருக்கும் கிடைக்கிறது. ஆனால், சூரியகாந்தக் கல்லின் மேல் சூரிய ஒளி பட்டால், அந்தக் கல்லில் மறைந்திருக்கும் விசேஷ சக்தி வெளிப்படுகிறது; அதிலிருந்து அக்னி எழும்புகிறது. சூரிய காந்தக் கல்லைப் போல, எவருடைய அந்தக்கரணம் தூயதாக ஆகியிருக்கிறதோ, எவருடைய அந்தக்கரணத்தில் பகவானிடம் சிறப்பான சிரத்தையும் பக்தியும் ஏற்படுகிறதோ, அவர் பகவானுடைய கருணையிலிருந்து விசேஷமான லாபத்தை அடையமுடியும்.

மனிதனுடைய சஞ்சிதம், பிராரப்தம், மற்றும் ஆகாமி என்பதான மூவகையான கர்மாக்களுடனும் பகவானுடைய கருணை சம்பந்தப்பட்டிருக்கிறது; முன்பு செய்த புண்ணிய கர்மாக்களின் சேமிப்பு பகவானுடைய தயவினாலேயே ஏற்பட்டது; அந்த சேமிப்புக் கர்மாக்களுக்கு ஏற்றபடி, பிராரப்தத்தை அனுபவிக்கும் முறையை, ஜீவர்களின் நன்மைக்காக, பகவான் கருணையோடு செய்து வருகிறார். ஆகவே, பகவானுடைய அருளின் ரகசியத்தை அறிந்து கொண்டவன், பலனைக் கொடுக்கத் தொடங்கிவிட்ட (பிராரப்த) வினைப் பயன்களை அனுபவிக்கும்போது, ஒவ்வொரு நிலையிலும் பகவானுடைய தயவையே காண்கிறான். இப்பொழுது செய்து கொண்டிருக்கும் நற்கருமங்களும் பகவானுடைய தயையினாலேயே நிகழ்ந்து வருகின்றன; அவருடைய தயையினாலேயே, மனிதன் நல்வழியில் அடியெடுத்து வைக்க முடியும். ஆகவே, எல்லாக் கருமங்களுடனும் பகவானுடைய தயை, எப்போதும் சம்பந்தப்பட்டிருக்கிறது.

ஆழ்ந்த பக்தி-சிரத்தையோடு ஆலோசித்துப் பார்த்தோமேயானால் ஒவ்வொரு விநாடியும் ஒவ்வோர் அடியிலும், ஒவ்வொரு நிலையிலும் பகவானுடைய தயையின் தரிசனம் மனிதனுக்குக் கிடைத்துக் கொண்டு தான் இருக்கிறது.

எல்லாப் பிராணிகளுக்கும் தண்ணீர், காற்று, ஒளி முதலிய தத்துவங்களிலிருந்து சுகானுபவம் கிடைத்துக் கொண்டிருக் கிறது; அவைகளுடைய வாழ்க்கை நடந்து கொண்டிருக் கிறது; உண்ண உணவு, பருக நீர் கிடைத்துக் கொண்டிருக் கின்றன-இவை எல்லாவற்றிலும் பகவானுடைய சமமான தயை நிறைந்திருக்கிறது.

மனிதனுடைய சுப-அசுப கர்மங்களுக்கு ஏற்ப, பயனை அனுபவிக்கும் ஏற்பாட்டைச் செய்வதிலும் பகவானின் அருட்கரம் இருக்கிறது.

கொஞ்சம் போல ஜபம்-தியானம்-சத்சங்கம் செய்வ தாலேயே மனிதனுடைய முந்தைய பல பிறவிகளில் செய்த பாவங்கள் அழிந்து போகும் என்று, பகவான் சட்டம் இயற்றியிருக்கிறாரே, இது பகவானுடைய பெருங்கருணை இல்லாமல் வேறு என்னவாம்?

பகவானைச் சரணடைந்து, பக்தியுடனும் கெஞ்சும் பாவனையிலும் பிரார்த்தித்தால் கண்ணுக்கெதிரே காட்சி கொடுத்தல்; பக்தர்களுடைய ஒவ்வொரு துயரத்தையும் இன்னல்களையும் போக்குதல், சரணாகதி செய்தவனை எல்லா விதத்திலும் காப்பாற்றுதல்; ஒவ்வொரு பாவச் செயலி லிருந்தும் அவனை விலக்குதல்-இவை, அவருடைய விசேஷ மான தயையைக் காட்டுவனவாகும். எவ்வித விருப்பமோ, வேண்டுகோளோ இல்லாதபோதும், பக்த பிரகலாதனைப் போல உறுதியான நம்பிக்கையுடன் பக்தி செலுத்தும் பக்தர் களின் நன்மைக்காக, தானே வெளிப்பட்டு அவர்களுக்குத் தரிசனம் அளித்து, எல்லா இன்னல்களிலிருந்தும் பாதுகாப்பது - இது, பகவானுடைய தயையின் விசித்திரமான சிறப்புச் செயலாகும்.

மகாத்மாக்கள் அல்லது சாஸ்திரங்கள் மூலமாகவோ, அல்லது, மக்களுடைய மனத்தில் தானாகவே பிரேரணை ஏற்படுத்தியோ, அல்லது, தானே அவதாரம் எடுத்தோ, தீய செயல்களிலிருந்து மக்களைத் திருப்பி, நற்செயல்களில் ஈடுபடுத்துதல் - இதுவும் பகவானுடைய விசேஷமான தயையைக் குறிப்பதாகும்.

மனைவி-மக்கள்-செல்வம்-வீடு முதலிய உலகாயதப் பொருட்களை அடைந்தாலும் இழந்தாலும், உடல்நலம் சரியாக இருந்தாலும் இல்லாவிட்டாலும், நோய்கள்-இன்னல் கள் வந்தாலும் போனாலும், சுகம்-துக்கம் ஏற்பட்டாலும், அந்தந்த நிலையிலும் பகவானுடைய தயையைக் காண மனிதன் மனப் பயிற்சி செய்ய வேண்டும்.

மனைவி-மக்கள்-செல்வம்-வீடு முதலிய உலகாயதப் பொருட்கள் மேன்மேலும் வளரும்போது, நாம் முன்பு செய்த புண்ணிய கருமங்களின் பயனாக இப்பொருட்களையெல் லாம், பிறருக்கு உதவ வேண்டும் என்பதற்காக, உத்தமமான கர்மாக்கள் செய்வதற்காக, பகவானிடம் பக்தி அதிகரிக்க வேண்டும் என்பதற்காக, ஈசுவரபக்தி சம்பந்தத்திலேயே இப்பொருட்கள் பயன்படுத்தப்பட வேண்டும் என்பதற்காகப் பகவான் கொடுத்திருக்கிறார் என்று எண்ணிக்கொள்ள வேண்டும். இவ்வாறு எண்ணிக்கொண்டு, (அந்த உலகாயதப் பொருட்களுடன்), தன்னுடைய சரீரப் பராமரிப்புக்குத் தேவை யான அளவு மட்டுமே உறவுவைத்துக் கொண்டு, அப்பொருட் களையெல்லாம் ஈசுவரனுக்கு அர்ப்பணமாகச் செலுத்துபவன் தான், ஈசுவரனுடைய தயையின் ரகசியத்தை நன்றாகப் புரிந்து கொள்கிறான்; அந்த வஸ்துக்களையெல்லாம், புலனுகர் இன்பங் களில் சிலவழிப்பவன், பகவத் தயையின் தத்துவத்தை அறியமாட்டான்.

இந்த உலகாயத போகப் பொருட்கள் அழிந்து போகும் போது, 'இவைகள் புலன் இன்ப இச்சை, பற்று ஆகிய வற்றுக்குக் காரணமாக இருந்ததால், என்னுடைய ஈசுவர பக்திக்கு இடைஞ்சலாக இருந்தன; அதனால், பரம தயாளுவான பகவான் மிக்க கருணை கூர்ந்து, என்னைத் தன் பக்கம் இழுப்பதற்காக இவைகளையெல்லாம் திரும்ப எடுத்துக் கொண்டு விட்டார்! ஆகா, பகவானுக்குத் தான் எவ்வளவு கருணை!' என்று நினைத்துக் கொள்ளவேண்டும். உலகிலே நாம் சாதாரணமாகப் பார்க்கிறோம்; மின்மினி அல்லது அது போன்ற சிறு பூச்சிகள் விளக்கின் ஒளியால் கவரப்பட்டு, மனம் மயங்கி, அதில் குதித்து விழுந்து சாம்பலாகிப் போகின்றன. அவைகளின் இந்தக் கஷ்டத்தைப் பார்த்து, இரக்கம் கொண்ட ஒரு மனிதன், அந்த விளக்கை

அங்கிருந்து எடுத்துச் சென்று விடுகிறான்; அல்லது, அணைத்து விடுகிறான். ஏன், இப்படிச் செய்கிறான்? அந்தப் பூச்சிகளிடம் அவனுக்குப் பெரும் கருணை இருப்பதால் இப்படிச் செய்கிறான். அந்தப் பூச்சிகளுக்கு இந்த ரகசிய விஷயம் தெரியாது. அவைகள், 'விளக்கை அப்புறப் படுத்தியவன் கொஞ்சமும் இரக்கம் இல்லாதவன்; மாபெரும் விரோதி' என்று எண்ணிக் கொள்கின்றன. ஆனால், இப்படி எண்ணுவது அவைகளுடைய அறியாமை; குற்றம். இவ் விதமே நம்முடைய பாமர சகோதரருக்கு பகவானுடைய தயவின் ரகசியம் தெரியாததால், தன்வசமிருந்த உலகாயதப் பொருட்கள் அழிந்து போவதைக் கண்டு, பலவிதமாகப் பகவானைப் பழிக்கிறார்! ஆனால், இளகிய மனம் படைத்த பகவான், அவருடைய குற்றங்குறைகளைக் கண்டுகொள்வ தில்லை. 'என்னிடம் பகவானுக்கு மிகவும் கருணை! முன்பு செய்த பாபவினைகளின் கடன் சுமையிலிருந்து என்னை விடுவிப்பதற்காக; எதிர்காலத்தில் நான் பாவங்களில் ஈடுபடா மல் இருப்பதற்காக; எல்லா போகப் பொருட்களும் நொடிப் பொழுதில் நாசமடைந்து விடும் என்று காட்டி அவைகளிடம் வைராக்கியம் தோன்றுவதற்காக, இப்பொருட்களையெல் லாம் அகற்றியிருக்கிறார்!' என்று எண்ணிக் கொண்டு, உலகா யத போகப் பொருட்களின் அழிவில் கூட பகவானுடைய தயையைக் கண்டு, மலர்ச்சியோடு இருப்பவன் தான், அவருடைய தயையின் ரகசியத்தை நன்றாக உணர்ந்தவன்.

உடல்நிலை ஆரோக்கியமாக இருக்கிறது. ஏன்? 'பகவான் எங்கும் நிறைந்தவர் என்பதை உணர்ந்து, எல்லோரிடமும் பகவானையே தரிசித்து, பிறருக்குத் தொண்டு செய்வதற்காக; உத்தம புருஷர்களுடன் சேர்ந்து பகவானுடைய குணம்-பிரபாவம்-தத்துவம்-ரகசியங்களை அறிந்து கொள்வதற்காக; நாம சங்கீர்த்தனம்-தியானம் ஆகியவற்றை எப்போதும் செய்து வருவதற்காகவே, பகவான் மிக்க கருணையுடன், என்னை நோயற்றவனாக வைத்திருக் கிறார்.' இம்மாதிரியான சிந்தனைகளுடன், நொடிப்பொழுதில் அழியக்கூடிய இந்த உடலை, கருணாமூர்த்தியான பகவானை அடைவதற்கான வேலைகளிலேயே, மேலே சொன்ன உத்தேசங்களுக்கு ஏற்ப ஈடுபடுத்திக் கொள்பவன்,

அவருடைய தயையின் ரகசியத்தை நன்றாக அறிந்து கொண்டவன் ஆவான்.

சரீரத்திற்கு நோய் வந்துவிட்டது. ஏன்? 'முன்னர் செய்த பாப வினைகளின் கடன் சுமையை நீக்குவதற்காக; எதிர் காலத்தில் பாவம் செய்வதிலிருந்து தடுத்து நிறுத்துவதற்காக; உடலில் வைராக்கியம் தோன்றுவதற்காக; நோய்களை அனுபவிப்பது கூட ஒரு வகையான தவம் என்று கருதி, அந்தத் தவத்தின் பயனை அவனுக்குக் கொடுப்பதற்காக; அடிக்கடி தன்னைப் பற்றிய நினைவு ஏற்படுவதற்காக, பகவான் மிக்க கருணையுடன் ஒரு பரிசு போல, இந்த நிலையைத் தந்திருக்கிறார்.' இவ்வாறு எண்ணிக்கொண்டு, நோய்நொடிகள் வந்தபோதும் எவன் எவ்விதக் கவலையும் அடையாமல், ஆனந்தமாக தன்னுடைய மனத்தை எப்போதும் பகவானின் நினைவிலேயே ஈர்த்துக் கொள்கிறானோ; பகவா னுடைய மேற்சொன்ன நோக்கங்களை எண்ணி எண்ணி எப் போதும் மகிழ்ந்து கொண்டிருக்கிறானோ, அவனே பகவானு டைய தயையின் ரகசியத்தைச் சரியாகப் புரிந்து கொள்கிறான்.

இவ்விதமே, சுகப்படுகிறவன்-துயரப்படுகிறவன், மகாத்மா-பாவி ஆகிய ஜீவர்களுடன் சந்திப்பு அல்லது பிரிவு ஏற்படும்போது, அல்லது, இப்படி ஏதேனும் உறவு ஏற்படும் போது, எப்போதும் பகவானுடைய தயையைக் காண வேண்டும்.

சான்றோர்களுடன் சந்திப்பு ஏற்படும்போது, 'இவர் களுடைய குணங்களையும் நடத்தைகளையும் பின்பற்ற வேண்டும் என்பதற்காக; இவர்களுடைய உபதேசங்களைக் கடைப்பிடித்து பகவானிடம் பக்தியை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்பதற்காக, பகவான் மிக்க கருணையுடன் இவர்களுடன் சந்திப்பை ஏற்பாடு செய்திருக்கிறார்' என்று எண்ணிக் கொள்ள வேண்டும்.

அவர்களைப் பிரிய நேரும்போது, 'இத்தகைய பெரியோர்களுடனே எப்போதும் இருப்பது என்பது சாத்தியமல்ல-என்ற பேருண்மையை உணரச் செய்வதற்காக; மீண்டும் துடிப்பான ஆவலை உண்டாக்க வேண்டும் என்பதற்காக; அவரிடம் பிரேமையைப் பெருக்க வேண்டும்

என்பதற்காக, பகவான், மிக்க தயவோடு, அவர்களைப் பிரிய வைத்திருக்கிறார்' என்று எண்ணிக் கொள்ள வேண்டும்.

தீய நடவடிக்கையுடைய கயவர்களுடன் சந்திப்பு ஏற்படும்போது, 'தீய பழக்கங்களால் ஏற்படக்கூடிய குற்றங் குறைகளைக் கண்ணுக்கு நேராகக் காட்டி, துர்குண-துராசாரங்களில் வெறுப்பு ஏற்படுவதற்காக, பகவான் இத்தகைய கீழ்மக்களுடன் சந்திப்பை ஏற்படுத்தியிருக்கிறார்' என்று அறிந்து கொள்ள வேண்டும்.

இவர்களுடன் பிரிவு ஏற்படும்போது, 'கெட்ட சகவாசத் திலிருந்து காப்பதற்காகவே, பகவான் தயவு காட்டி, தீயவர் களிடமிருந்து பிரித்து விட்டார்' என்று புரிந்து கொள்ள வேண்டும்.

துயரப்படும் மனிதர்கள் மற்றும் பிராணிகளைக் காணும் போது, 'என் அந்தக்கரணத்தில் இரக்கம் வளர வேண்டும்; இவர்களுக்குத் தொண்டு செய்வதற்கு வாய்ப்புக் கொடுக்க வேண்டும்; உலக வாழ்க்கையில் வைராக்கியம் ஏற்பட வேண் டும் என்பதற்காகவே, கருணையே உருவெடுத்த பகவான், தயை கொண்டு, இப்படிப்பட்ட ஜீவர்களைச் சந்திக்கச் செய்திருக்கிறார்' என்று எண்ணிக் கொள்ள வேண்டும்.

சௌக்கியமாக இருக்கும் மனிதர்கள்-பிராணிகளைப் பார்க்கும் போது, 'இவர்கள் எல்லாம் சௌக்கியமாக இருப்பதைப் பார்த்து நான் மகிழ்ச்சியடைய வேண்டும் என்ற பாடத்தைக் கற்பிப்பதற்காக, பகவான் மிக்க தயையுடன், இவர்களைக் காண வைத்திருக்கிறார்' என்று எண்ணிக் கொள்ள வேண்டும்.

இவர்களுடன் பிரிவு ஏற்படுங்கால், 'மக்கள் கூட்டத் துடன் உள்ள பற்றுதலை விலக்குவதற்காகவும், உலக வாழ்க்கையில் தீவிர வைராக்கியத்தைத் தோற்றுவிக்கவும், தனிமையில் இருந்து பஜனை-தியானம் ஆகியவற்றைப் பலமாகப் பயிற்சி செய்ய வேண்டும் என்பதற்காகவும், பகவான் அருள்கூர்ந்து இந்த வாய்ப்பைத் தந்துள்ளார்' என்று அறிந்துகொள்ள வேண்டும்.

இது போலவே, எந்த ஒரு நிலையிலும், எப்போதும், எல்லா நிகழ்ச்சிகளிலும் பகவானுடைய தயையைக் காண வேண்டும்.

இவ்விதம் பயிற்சி செய்வதன்மூலம், எல்லாப் பிராணிகளிடமும் பகவான் எல்லையற்ற கருணையைப் பெருக்கிக் கொண்டிருக் கிறார் என்ற ரகசியத்தைப் புரிந்து கொண்ட மனிதர், அதனால் விசேஷமான லாபத்தை அடைகிறார்.

கருணாமூர்த்தியான பரமேசுவரருக்கு, எல்லாப் பிராணிகளிடத்தும் உள்ள பெருங்கருணையை முழுமையாக மனிதன் அறிந்து கொள்ள முடியாது. மனிதன், தன் அறிவைக் கொண்டு, தன்மேல் பகவானுக்கு அளவற்ற கருணை இருக்கிறது என்று எண்ணிக் கொண்டால், அதுவே அதிகம் தான்! மனிதன் பகவானுடைய உண்மைத் தோற்றத்தைக் கற்பனை கூட செய்து பார்க்க முடியாது.

மக்கள், பகவானை, கருணைக்கடல் என்கிறார்கள். ஆனால், ஆராய்ந்து பார்த்தால், இந்த உபமானம் போது மானதல்ல; அவருடைய எல்லை காணமுடியாத தயையை ஓரளவுக்கே புரியவைக்கிறது என்பது தெரியவரும். கடல் என்பது அளவுக்கு உட்பட்டது; எல்லை வகுக்கப்பட்டது. பகவானுடைய கருணையோவென்றால், எல்லை வகுக்கப் பட முடியாதது; கடந்து செல்ல முடியாதது. என்றாலும், உலகத்தில் கடலைக் காட்டிலும் கண்ணால் காணத் தக்க பெரிய பொருள் ஏதும் இல்லாத காரணத்தால், மக்கள் அந்த உபமானத்தைக் கூறி, பகவானுடைய கருணையின் அளவற்ற தன்மையை உணர்த்த முயல்கிறார்கள்.

எல்லாப் பிராணிகளிடமும் பகவானுடைய பெருங் கருணை இருந்து வருகிறது என்றாலும், இந்த ரகசியத்தை அறியாத காரணத்தால், மனிதர்கள் அதன் சிறப்பான பலன்களை அடைய முடிவதில்லை; தம்முடைய அறியாமை காரணமாக எப்போதும் துக்கத்திலேயே மூழ்கியிருக்கிறார்கள்.

பகவானுடைய தயைக்கு அளவே இல்லை. அதிலிருந்து மனிதன் எவ்வளவு லாபம் அடைய விரும்பு கிறானோ, அவ்வளவு தான் அடைய முடியும். பகவானுடைய தயையின் ரகசியம்-தத்துவத்தை அறியாத வரையில், அந்த தயை, சமமான நிலையில் சாதாரணப் பலன்களையே கொடுத்து வரும்; எவ்வளவு அதிகமாக அறிகிறானோ அவ்வளவு அதிக பலனைப் பெறுகிறான்; தத்துவ-

ரகசியங்களை அறிந்துகொண்டு அதைப் பின்பற்றி நடப்பவன் மிக அதிகமான பலன்களைப் பெறுகிறான்.

பகவானுடைய தயையின் ரகசியத்தையும் தத்துவத்தையும் அறிந்து கொண்டு விட்டவர்களை, பாரஸ மணியைப் போல, தாமே கருமங்களை நடத்திச் செல்லும் தன்மையை அளிக்கும் பிரபாவம், பகவானுடைய தயைக்கு இருக்கிறது.

ஒரு வறியவன் வீட்டில் பாரஸமணி இருக்கிறது; ஆனால், அது பாரஸமணி என்று அவனுக்குத் தெரியாது; ஏதோ ஒரு கல் என்று நினைத்துக் கொண்டிருக்கிறான்- என்றால், அவனால், அதன்மூலம் பெரிய லாபம் எதையும் பெற முடியாது; வெறும் கல்லிலிருந்து அடையக் கூடிய பயனையே அடைவான். ஆனால், அப்படி-இப்படி ஆகி, தற்செயலாக, ஓர் இரும்புத் துண்டின்மேல் அந்த மணி உரச நேர்ந்தது என்றால், அப்போது அது விசேஷமான பலனைக் கொடுக்கிறது. (அதாவது, அது இரும்பை மாற்றிவிடுகிறது). இந்த அதிசயமான மாற்றத்தைக் கண்ணால் பார்த்து, அல்லது, அதன் சிறப்புத் தன்மை தெரிந்த ஒருவர் வந்து எடுத்துக் கூறினால், அவன் அந்தப் பாரஸமணியை உண்மையாகவே அறிந்து கொள்கிறான். உடனே, அவனுக்கு அந்த மணியின் குணம், பிரபாவம் பற்றிய சரியான அறிவு ஏற்பட்டுவிடுகிறது. இந்த ஞானம் ஏற்பட்டவுடன், அந்த மணியின் விசேஷத் தன்மையை உபயோகப்படுத்தி, அதன்மூலம் முழுமையான பலனைப் பெறுகிறான். இவ்விதமே, ஏதேனும் ஒரு சம்பவம், அல்லது, யாரோ ஒரு மகாபுருஷரின் சந்திப்பின் விளைவாக, பகவானுடைய தயையின் ரகசியம், தத்துவம், பிரபாவம் பற்றி சிறிது ஞானம் ஏற்பட்டால், அவன், தானே செயலாற்றி (சாதனைகளைச் செய்து) அதன்மூலம் பரிபூரணமான பலனைப் பெறுகிறான்.

பகவான் மிகவும் தயாளகுணம் உடையவர் என்றும் எல்லோருக்கும் நண்பர் என்றும் ரகசியத்தை அறிந்து கொள்பவனுக்குப் பரமசாந்தி கிடைத்து விடுகிறது. பகவானே சொல்லியிருக்கிறார் -

ஸுஹ்ருத$_3$ம் ஸர்வபூ$_4$தாநாம் ஜ்ஞாத்வா மாம் ஶாந்திம்ருச்ச$_2$தி ॥

*(கீதை : 5/29)*

*(அர்ஜுனா! என்னுடைய பக்தன், என்னை, எல்லா பூதப் பிராணிகளின் நண்பனாக, அதாவது, தன்னலம் கருதாத தயையும் அன்பும் உடையவனாக, உண்மையில் அறிந்துகொண்டு சாந்தியை அடைகிறான்).*

ஏன் அடைய மாட்டான்? நாம் நேரில் சில விஷயங்களைப் பார்க்கிறோமே?

ஒரு சாதாரண மன்னன், அல்லது, மிகப் பெரிய பணக் காரர்; மிகவும் நல்லவர்; கருணை மிக்கவர்; எல்லோரிடமும் பரிவுடன் நடந்து கொள்கிறவர். அவர் என்னைப் பார்க்க விரும்புகிறார்; என்னோடு நட்புக் கொள்ள விரும்புகிறார்- என்றால், நமக்கு எவ்வளவு ஆனந்தம் ஏற்படுகிறது? எவ்வளவு ஆறுதல் கிடைக்கிறது! எவ்வளவு சாந்தி கிடைக் கிறது! அவரை எவ்வாறு சந்திப்பது என்றும் அதன்மூலம், அவருடைய கருணையினால் எவ்வாறு பலன் அடைவது என்றும் முயற்சி செய்யத் தொடங்குகிறோம். அப்படியிருக் கும்போது, (ஒரு சாதாரண மன்னன், செல்வந்தன் விஷயத் திலேயே நாம் இவ்வளவு துடிப்பாக இருக்கும்போது) மகா ஆற்றல் படைத்த, எண்ணித் தொலையாத கோடி கோடி பிரும் மாண்டங்களுக்குச் சொந்தக்காரரான பகவான் விஷயத்தில், 'அவர் பரம தயாளு; எல்லோருக்கும் நண்பர்; அவர் என்னை நேசிக்கிறார்; என்னிடம் அவருக்கு ஏராளமாக தயை இருக் கிறது; தன்னைச் சந்திக்க விரும்புவர்களை, அவர், தானே சந்திக்க விரும்புகிறார்' என்ற நம்பிக்கை ஏற்பட்டு விட்டால், பேரார்வம் கொண்ட அந்த பக்தர், பகவானுடைய கருணையி லிருந்து நிறைய லாபத்தை அடைய வேண்டிய முயற்சிகளை மேற்கொண்டு, பரம சாந்தியை அடைகிறார்- என்பது ஆச்சரி யமா, என்ன? இவ்விதம், பகவானுடைய தயையின் ரகசியத் தை அறிந்துகொண்டு விட்டவன், தானே பரம தயாளுவாக வும் எல்லோருக்கும் நண்பனாகவும் ஆகி விடுகிறான்; அவனை, பகவானே நேரில் வந்து சந்திக்கிறார்; அவன் பகவானுக்கு மிகவும் வேண்டப்பட்ட அன்பன் ஆகிவிடு கிறான்; அவனும் பகவானும் ஒன்றிப் போய் விடுகிறார்கள்.

பரம தயாளு, எல்லோருக்கும் நண்பர், எல்லா சக்தி களும் படைத்த பரமேசுவரனுடைய அளவிடமுடியாத

கருணை நம் எல்லோர் மேலும் இயல்பாகவே இருக்கிறது. நொடிதோறும், அவருடைய கருணையின் சாமானிய லாபம் நமக்குக் கிடைத்துக் கொண்டிருக்கிறது; அவர் தானே அவதாரம் செய்து தன்னுடைய பேரருளைப் பிரத்யட்சமாகக் காட்டிச் சென்றிருக்கிறார். எனவே, அவரையே இலக்காகக் கொண்டு, பகவானுடைய தயையின் ரகசியம், பிரபாவம், தத்துவத்தை அறிந்து கொள்வதற்காக நாம் முனைப்புடன் செயல்பட வேண்டும். ஏனென்றால், இந்த மனித உடல், பகவானுடைய, காரணமில்லாத தயையின்மூலம் கிடைத்திருக்கிறது. இந்தப் பிறவியே பகவானின் கருணையினால் வாய்க்கப் பெற்றது என்பதை ஜீவன் உணர்ந்து, அவருடைய பேரன்புக்கு உரியதாக ஆக முடியும். நொடிதோறும் ஆயுள் குறைந்து கொண்டேயிருக்கிறது; இனிமேல், இத்தகைய அரிய வாய்ப்புக் கிடைப்பது அரிது. சென்று கழிந்த காலம், இனி திரும்பக் கிடைக்கப் போவதில்லை. ஆகவே, விலை மதிக்க முடியாத மனித வாழ்க்கையை விஷயசுகங்களை அனுபவிப்பதிலும், மோஹ-மாயை, சோம்பேறித்தனம், தவறுதல் ஆகியவைகளில் வீணாக்கித் தொலைத்து விடக்கூடாது.



## 4. சரணாகதியும், அதன் பயனும்

சரணாகதி என்பது ஆரம்பத்தில் எப்படித் தோன்றுகிறது? பின்னர், எவ்வாறு முழு உருவம் பெறுகிறது?- என்பதைப் பற்றி இக்கட்டுரையில் ஆராய்வோம். இந்த விஷயம் மிகவும் ஆழமானது; ரகசியமானது. இந்த ரகசியத்தை மனத்தில் வாங்கிக் கொள்பவன், நிச்சயமாக கிருதார்த்தனாகி விடுகிறான். மகரிஷி பதஞ்சலி, அவருடைய யோகசூத்ரம் என்ற நூலில், மனத்தைக் கட்டுப்படுத்துவதற்காக, பயிற்சியும் வைராக்கியமும் தேவை என்று முதலில் கூறிவிட்டுப் பின்னர், 'ஈஶ்வர ப்ரணித$_4$ானாத்$_3$வா' என்று கூறி சரணாகதியின் பெருமையை நிலைநாட்டிவிட்டார். ராமாயணம், கீதை முதலியவைகளிலும், ஈசுவரனைத் தஞ்சம் அடைவதுதான், பகவானை அடைவதற்கான முக்கிய சாதனை என்று சொல்லப்பட்டிருக்கிறது. சரணாகதி, பக்தி-

இரண்டுக்கும் உட்பொருள் ஒன்றேதான். இச்சொற்களின் முன்னால், 'அநன்ய' (வேறிடம் செல்லாத, ஒன்றிய) என்ற சொல்லைச் சேர்த்துவிட்டால், பக்தி மற்றும் சரணாகதியில் முழுமை ஏற்பட்டு விடுகிறது. (அநன்ய பக்தி, அநன்ய சரணாகதி என்று சொன்னால், முழுமையான பக்தியையும் முழுமையான சரணாகதியையும் குறிப்பதாகும்.)

'ஹே பிரபோ! நான் தங்களுடையவன்' என்று சொல்வதுதான் சரணாகதியின் துவக்க நிலை. இப்படி வாயால் சொல்வதே, படிப்படியாக முன்னேறி, முறையான சரணாகதியாக உருவெடுக்கிறது.

மார்வார் பகுதியில், கியாமக்யானீ என்ற பெயரில் முஸ்லிம்களின் ஒரு பிரிவு இருக்கிறது. முதலில் இவர்கள் ஹிந்துக்களாக இருந்ததாகச் சொல்லப்படுகிறது. இவர்கள் அதிகமாக வசித்துவந்த பிரதேசத்தின் முஸ்லிம் ஆட்சி யாளன், இவர்களை இஸ்லாமியர்களாக ஆக்கிவிட வேண்டும் என்ற உத்தேசத்துடன், 'நீங்கள் உண்மையில் முஸ்லிமாக மாற வேண்டாம். ஆனால், யாராவது கேட்டால் மட்டும் உங்களை இஸ்லாமியராக சொல்லிக் கொள்ளுங்கள். இவ் வளவு தான் நான் உங்களிடம் எதிர்பார்க்கிறேன்' என்றான். மன்னனின் கட்டளை; ஏற்றுக் கொள்வதில் ஒருவித சிரமமும் இல்லை. அவர்களுடைய வீட்டு விவகாரங்களும், நடை யுடை பாவனைகளும் ஹிந்துக்களைப் போலவே தொடர்ந்து இருந்து வந்தன. ஆனால், யாரேனும் விசாரிக்கும்போது மட்டும் 'நாங்கள் முஸ்லிம்கள்' என்று சொல்லி வந்தார்கள். முஸல்மான் மன்னனின் தொலைதூரப் பார்வையோடு கூடிய இந்தத் திட்டம், வெகு விரைவிலேயே பலனைக் கொடுக்க ஆரம்பித்து விட்டது. இன்றைய தினம், அவர்களுடைய உணவுப் பழக்கம், நடை-உடை, பழக்க- வழக்கம் எல்லாமே முழுமையாக முஸல்மான்கள் முறையிலேயே மாறிவிட்டது. இப்போது, அவர்கள் தங்களை உண்மையில் முஸல்மான் களாகவே கருதத் தொடங்கி விட்டனர். இந்த உதாரணத்தின் படி பார்த்தால், ஈசுவரன் என்ற மன்னரின் பரந்த ராஜ்யத்தில் இருக்கும் நாம் 'ஹே பிரபோ! நான் உங்களுடையவன்' என்பதை ஏற்றுக் கொண்டால், நம்மிடம் உண்மையான பக்தி

தோன்றுவதற்கு அதிக காலம் பிடிக்காது. ஏனென்றால், பரம தயாளுவான ஸ்ரீராமன் முரசு கொட்டி அறிவித்திருக்கிறான் -

ஸக்ருதே₃வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே।
அப₄யம் ஸர்வபூ₄தேப்₄யோ ததாம்யேதத்₃வ்ரதம் மம॥
*(வால்மீகி ராமாயணம் : யுத்த-18/33)*

***(என் திருவடிகளை அடைந்து, ஒரு தடவையேனும் 'ஹே பிரபோ! நான் தங்களுடையவன்' என்று சொல்லி என்னிடம் எவன் அடைக் கலம் கோருகிறானோ, அவனை நான் அனைத்துப் பிராணிகளி டமிருந்தும் காப்பாற்றுகிறேன்; இது என்னுடைய விரதம்)***

மகாபாரத யுத்த தொடக்க வேளையில், அர்ஜுனனும் இதே மாதிரி சரணாகதி அடைந்த காட்சியைக் காண்கிறோம். அவன் மனக்கொதிப்பினால் கலவரமடைந்து, தன்னுடைய நெடுநாளைய நண்பரான பகவான் ஸ்ரீகிருஷ்ணனிடம் கோழைத்தனமாகக் கூறுகிறான்-

கார்பண்யதோ₃ஷோபஹதஸ்வப₄ாவ:
ப்ருச்ச₂ாமி த்வாம் த₄ர்மஸம்மூட₄ சேதா:।
யச்ச்₂ரேய: ஸ்யாந்நிஶ்சிதம் ப்ரூஹி தந்மே
ஶிஷ்யஸ்தேऽஹம் ஶாதி₄ மாம் த்வாம் ப்ரபந்நம்॥
*(கீதை-2/7)*

***(கோழைத்தனத்தால் மனம் குழம்பி, அறவழியைப் பற்றி நிர்ணயிக்க முடியாமல், மோகமடைந்துள்ள நான் தங்களைக் கேட்கிறேன்: எந்த சாதனை நிச்சயமாக நன்மையை விளைவிக்குமோ, அதனை எனக்குக் கூறுங்கள்; நான் தங்களுடைய சிஷ்யன்; அதனால், தங்களைச் சரண் அடைந்துள்ள எனக்குப் பாடம் புகட்டுங்கள்)***

இதற்கு முன்னால், கீதையில், சரணாகதியைப் பற்றியே குறிப்பு வரவில்லை என்பதால், இந்த சரணாகதி தான் முதலில் துவக்கப்பட்டது என்று எண்ண வேண்டியிருக்கிறது; ஏனென்றால், (இப்படி சரணாகதி செய்தபின்பு தான்)-'நான் யுத்தம் செய்ய மாட்டேன்' என்றெல்லாம் அர்ஜுனன் பேசத் தொடங்குகிறான்.

சஞ்ஜயன் சொல்கிறார் -

ஏவமுக்த்வா ஹ்ருஷீகேஶம் கு₃டா₄கேஶ: பரந்தப ।
ந யோத்ஸ்ய இதி கோ₃விந்தமுக்த்வா தூஷ்ணீம் ப₃பூ₄வ ஹ ॥
(கீதை-2/9)

*(மன்னா! உறக்கத்தை வென்றவனான அர்ஜுனன், உயிர்களின் அந்தர்யாமியாக விளங்கும் கிருஷ்ணனைப் பார்த்து இவ்வாறு கூறி 'போர் செய்ய மாட்டேன்' என்று தெளிவாகச் சொல்லிவிட்டு மௌனமானான்.)*

'போர் செய்ய மாட்டேன்' என்ற வார்த்தையைக் கேட்டதும் பகவானுக்குத் தன் சிரிப்பை அடக்க முடியவில்லை; காரணம், 'நான் தங்களைச் சரண் அடைந்து விட்டேன், எனக்கு உபதேசம் செய்யுங்கள்' என்று ஒருபுறம் கூறுகிறான்; இன்னொரு பக்கத்தில், தன் இஷ்டம் போல், 'நான் போர் செய்ய மாட்டேன்' என்கிறான்.

இப்படித்தான் ஒரு கதை இருக்கிறது. ஒரு விவசாயிக் குத் தன் அண்டை நிலத்துக்காரனுடன் வாய்க்கால் சம்பந்த மாகத் தகராறு; வாய்ச்சண்டை. விவசாயி, தனக்குச் சாதகமான ஒரு தலைவனிடம் போனான். 'பாரப்பா, எனக்கும் அவனுக் கும், வாய்க்கால் தண்ணீர் பிரச்னை. நீ தான் இதை தீர்த்துக் கொடுக்கணும். நீ என்ன சொல்றயோ, அதை அப்படியே ஏத்துக்கிறேன். ஆனா, பாரு, வாய்க்கால் தண்ணி இப்போ பாய்கிற மாதிரியே தான் பாயணும், ஞாபகம் வெச்சுக்கோ' என்றான். இதைக் கேட்டதும், அந்தத் தலைவன், அவனு டைய பிடிவாதத்தை உணர்ந்து, மனத்துக்குள்ளேயே சிரித்துக் கொண்டு, நியாயமான தீர்ப்பு வேண்டுமானால் வேறொரு வரிடம் போய்க் கேட்கும்படி ஆலோசனை கூறினானாம்.

இங்கே, அர்ஜுனனுடைய நிலையும் அதுபோலவே தான் இருக்கிறது! 'நான் தங்களை அடைக்கலம் புகுந்து விட்டேன்; நீங்கள் சொல்கிறபடி செய்கிறேன்; ஆனால், போர் செய்ய மாட்டேன்!' என்கிறான். இந்த நிலையிலும் கூட கருணாமூர்த்தியான பகவான், அர்ஜுனனின் சொற்களைக் கேட்டு அவனை வெறுக்கவில்லை; நிராகரிக்கவில்லை. ஆனால், பற்பலவிதமாகப் பேசிப் பேசி அறிவுறுத்தி, அவனை சரியான பாதைக்குக் கொண்டுவரும் பயனுள்ள முயற்சியை மேற்கொண்டார். ஏனென்றால், 'த்வாம் ப்ரபன்னம்'-'நான்

தங்களைத் தஞ்சம் அடைகிறேன்'-என்று, ஒரு தடவை சொல்லிவிட்டானே!

அர்ஜுனனுடைய முரண்பாடான பேச்சிலிருந்து, அவனுக்குப் பகவானிடம் குறைந்த பக்தியே இருந்தது என்று எண்ணிவிடக் கூடாது. அவனிடம் பக்தி குறைவாக இருந்திருந்தால், பகவான், அவனுடைய தேர்க் குதிரைகளின் லகானை ஏன் பிடிக்கிறார்?

பகவான் தன்னுடைய லீலையை இங்கே காட்டுகிறார். அர்ஜுனனுக்கு மனமயக்கம் வந்ததாகக் காட்டி, உலக மக்களுக்கு உபதேச ரீதியில், சரணாகதியின் ஆரம்ப நிலையைக் காட்டியிருக்கிறார்.

இது, சரணாகதியின் துவக்க நிலை. சரணாகதியின் முழுத் தோற்றத்தை நாம் அறிந்து கொள்ள வேண்டும். புலன்கள், மனம், உடல், ஆத்மா ஆகிய எல்லாவற்றாலும் முற்றிலும் நிஷ்காம பக்தியுடன் பகவானைத் தஞ்சம் அடைவது தான், அநன்ய சரணாகதி (ஒன்றிய சரணாகதி) எனப் படுகிறது. பரமேசுவரனுடைய நாம-ரூப-குண- பிரபாவ-லீலா-ரகசியங்களை எப்போதும் சிந்தித்துக் கொண்டிருப்பது தான், மனத்தால் பகவானை சரணாகதி அடைவது; வாக்கினால் பகவானுடைய திருநாமத்தை உச்சரிப்பது; கால்களால் பகவானுடைய திருக்கோவில்களுக்குச் செல்வது; கண்களால் பகவானுடைய சிலா மூர்த்தங்களை தரிசிப்பது; அறநூல்கள் படிப்பது; செவிகளால் அவருடைய கல்யாண குண விசேஷங்களைக் கேட்பது; கைகளால் அவருடைய விக்ரஹங்களை அர்ச்சிப்பது; எல்லாப் பிராணிகளிடமும் பகவானையே கண்டு தொண்டு செய்வது; ஸ்ரீஹரியின் கட்டளைப்படி நடப்பது-இவையெல்லாம் புலன்களால் அவரைச் சரணடைவதாகும்; அவருடைய திருவடிகளில் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்வது முதலியன, சரீரத்தால் சரணாகதி செய்வதாகும்; பகவானிடம் பக்தியைத் தவிர வேறு எதற்கும், எவருக்கும் உள்ளத்தில் இடம் கொடுக்காமல் பகவானையே சார்ந்திருந்து, தன்னைத் தானே பகவானுக்கு அர்ப்பணித்து விடுவது-இது, அநன்ய சரணாகதி ஆகும். சாஸ்திரங்களில், பரம கருணா மூர்த்தியான பரமாத்மாவை ஒரே ஒரு தடவை நமஸ்காரம்

செய்வது கூட மிகவும் பலனை அளிக்கக் கூடியதாக கூறப்பட்டிருக்கிறது.

ஏகோऽபி க்ருஷ்ணஸ்ய க்ருத: ப்ரணாமோ தஶாஶ்வமேதா₄வப்₄ருதே₂ந துல்ய: ।
தஶாஶ்வமேதீ₄ புநரேதி ஜந்ம க்ருஷ்ணப்ரணாமீ ந புநர்ப₄வாய ॥
*(மகாபாரதம்: சாந்தி-47/92)*

*[பகவான் ஸ்ரீகிருஷ்ணனுக்கு செய்யப்படும் ஒரே ஒரு நமஸ்காரம், பத்து அசுவமேத யாகங்களின் முடிவில் நிகழும் அவப்ருத ஸ்நான பலனுக்கு இணையானது, (இன்னும் ஒரு படி மேலே சென்று) பத்து அசுவமேதயாகம் செய்தவன் (வானுலகில் அதன் முழுப்பலன்களையும் அனுபவித்து விட்டு, புண்ணியம் தீர்ந்துபோனதும்) மறுபடியும் பிறவி எடுக்க வேண்டும்; ஆனால், பகவான் ஸ்ரீகிருஷ்ணனை நமஸ்கரித்தவன், பின்னர் பூமியில் பிறப்பதில்லை.]*

இவ்விதமே, ஸ்ரீஹரியின் புனிதமான நாமத்தை ஒரே ஒரு தடவை உச்சரிப்பதாலேயே, எல்லாப் பாவங்களும் அழிந்துபோய், சொல்ல முடியாத அளவுக்கு நற்பயன் விளைகிறது. இந்த நற்பயன்களை நேரில் கண்ணால் காண முடியவில்லையே?-என்றால், அதற்கு முக்கிய காரணம், நமது அசிரத்தை தான்.

வாக்கினால் சரணாகதி செய்வது சுலபம்; ஆனால், உடலால் சரணாகதி செய்வது அவ்வளவு சுலபமானது அல்ல. ஒருவன், இன்னொருவருக்குத் தவறிழைத்துவிட்டான். அதைத் தெரிந்து கொண்டதும் அவரிடம் சென்று மன்னிப்புக் கேட்பதற்காக அவரிடம் செல்கிறான். சென்றதும், தன் வாயைத் திறந்து, தன்னை மன்னிக்கும்படி கேட்டுக் கொள் கிறான். ஆனால், அவர் காலில் விழுவது போன்றவற்றில் தயக்கம் ஏற்படுகிறது. என்றாலும், அவன் தன் வார்த்தைகள் மூலமே தன் குற்றங்குறைகளைப் பொறுத்தருளுமாறு கேட்டு, மன்னிப்பைப் பெறுகிறான். சொற்களாலும், உடலாலும் சரணாகதி அடைவதைக் காட்டிலும், புலன் களோடு கூட அந்தக்கரணத்தால் சரணாகதி அடைவது, மிகக் கடினம். ஏனென்றால், 'நான் தங்களைச் சரணடைகிறேன்' என்று வாயினால் சொல்லிவிடுகிறான்; அவருடைய பாதங்களில் விழுந்து, சரீரத்தால் அடைக்கலம் புகுந்து

விடுகிறான்; ஆனால், மனத்தால் சரண் அடைவதன் பயன் என்னவென்றால், பகவானைத் தவிர வேறு எந்தப் பொருளைப் பற்றிய சிந்தனையும் மனத்தில் தோன்றுவ தில்லை-என்பது தான். தன்னுடைய பேரன்புக்குரிய வாசுதேவனே, எல்லா இடத்திலும் எல்லாக் காலத்திலும் காட்சி கொடுப்பதைக் காண்கிறான்.

வாஸுதே$_3$வ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப$_4$: ॥
*(கீதை-7/19)*

மேலே சொன்னபடி பரமாத்மாவை சரணடைந்து விட்டால், சிற்சில சாதகர்களுக்குத் தங்கள் உடலைப் பற்றிய உணர்வு கூட இருப்பதில்லை. அவர், பகவானுக்கு முன்னே-பின்னே வேறு எவரையும் அறியமாட்டார்; பகவானிடம் ஒன்றிய பக்தியில் மூழ்கி விடுகிறார். இத்தகைய சரணாகதியில், முன் சொல்லப்பட்ட எல்லா வகையான சரணாகதிகளும் அடங்கியுள்ளன.

இப்போது, இன்னொரு பிரச்னை தோன்றக் கூடும்.

நாம் பகவானிடம் சரணாகதி செய்வதற்காக, எங்கே போவது? கோவிலுக்குச் சென்று அங்குள்ள சிலையிடம் தஞ்சமடையலாமா? அல்லது, எல்லா இடத்திலும் வியாபித்து விளங்கும் சர்வவியாபியிடம் அடைக்கலம் புகலாமா?-என்று கேட்பவர்களுக்கு, 'யார் யாருக்கு எப்படி எப்படி விருப்பமோ, அப்படிச் செய்யலாம்' என்றுதான் பதில் கூறமுடியும். ஏதேனும் ஒரு காரணத்தால் கோவிலுக்குச் செல்ல வசதிப் படவில்லை என்றாலோ, ஆசை ஏற்படவில்லை என்றாலோ, தாங்கள் இருக்குமிடத்தில் இருந்தவாறே பகவானைச் சரண் அடையலாம். ஏனென்றால், பகவான் எங்கும் நிறைந்தவர்; அவர் இல்லாத இடம் என்று எதுவுமே இல்லை. நாம் அவருக்கு ஏதேனும் ஒரு பொருளை அர்ப்பணித்தால், அவர் அப்போதே அதை ஏற்றுக் கொள்ள முடியும்; ஏனென்றால், அவர் 'ஸர்வத: பாணி'-எல்லாப் பக்கத்திலும் கைகளை உடையவர். அவர் திருவடிகளில் நாம் வணங்க விரும்பினால், நம்முடைய நமஸ்காரத்தை அவர் எந்த இடத்தில் இருந்தும் ஏற்றுக் கொள்ள முடியும்; காரணம் அவர், 'ஸர்வ:

பாத₃'-எல்லா இடத்திலும் திருவடிகள் உடையவர். நாம் பக்தி பூர்வமாகச் செய்யும் வழிபாட்டுச் சடங்குகளை அவருக்குக் காட்ட விரும்பினால், அவர் அதைக் காணவும் முடியும்; காரணம், அவர் 'ஸர்வதோऽக்ஷி'-எல்லா இடங்களிலும் கண்கள் உடையவர். நாம் அவருடைய சிரசில் அன்போடு புஷ்பாஞ்சலி செய்ய விரும்பினால், அவர் அதை மகிழ்ச்சியோடு அங்கீகரிக்க முடியும்; காரணம், அவர் 'ஸர்வத: ஶிர:'-எல்லா இடங்களிலும் தலைகள் உடையவர். நாம் அவருடைய கல்யாண குணங்களைப் பற்றிப் பேசி மகிழ்வதை, அவரால் கேட்க முடியும். ஏனென்றால், அவர் 'ஸர்வத: ஶ்ருதிமத்'-எல்லா இடங்களிலும் செவிகளை உடையவர். இதே போல, நாம் அன்போடு படைக்கும் நிவேதனப் பொருட்களையும், அவர் 'ஸர்வதோமுக₂:'-என்பதால், தடையில்லாமல் உண்ணமுடியும்!

பத்ரம் புஷ்பம் ப₂லம் தோயம் யோ மே ப₄க்த்யா ப்ரயச்ச₂தி ।
தத₃ஹம் ப₄க்த்யுபஹ்ருதமஶ்நாமி ப்ரயதாத்மந: ॥
*(கீதை 9/26)*

*(பக்தியோடு எனக்கு அர்ப்பணம் செய்யப்பட்ட இலை, புஷ்பம், பழம், தண்ணீர் ஆகிய எதுவாக இருந்தாலும் சரி, அன்போடு அளிக்கப்பட்ட அவைகளை நான் ஸகுண உருவத்தில் தோன்றி மகிழ்ச்சியோடு உண்கிறேன்.)*

விசேஷ காலங்களில் சிறப்பு வழிபாடுகள் செய்ய வேண்டும் என்ற நியமத்தை மேலே கண்ட வரிகள் நிரூபிக்கின்றன.

இனி, எங்கும் நிறைந்துள்ள நிராகார பகவான் விஷ்ணுவின் ஆக்ஞைகளை எவ்வாறு பெறுவது?-என்பது பற்றி சிறிது ஆராய்வோம்.

கீதையின் உபதேசங்களை, பகவானுடைய ஆணையாகக் கருதி அர்ஜுனனைப் போல நாம் பின்பற்ற வேண்டும். ஆனால், சந்தேகத்தைக் கிளப்பி விடுகிற ஒரு விஷயத்தை (கீதையின் துணை கொண்டு) நாம் தெளிவாக அறிய முடியவில்லை என்றால், அந்த நிலைமையில், நாம் எவ்வாறு சரியான பதிலைப் பெறுவது?-என்ற ஐயம் தோன்றக்கூடும்.

இதற்கு பதில், இதுதான்-ஏகாந்தமான ஓர் இடத்தில் அமர்ந்து கொண்டு எல்லா உயிர்ப் பிராணிகளின் இதயத்தில் உறைகின்ற பகவானிடம், நம்முடைய மனத்தில் எழும் சந்தேகங்களை எல்லாம் தெரிவிப்போம்; இப்படிச் செய்தால், அவர் தானாகவே, நம் இதயத்தில் ஒரு விடையைத் தூண்டி விடுவார். மாசுபடிந்த நம்முடைய மனத்தில் எந்தத் தெளிவான பதிலும் தோன்றவில்லையென்றால், பகவானுடைய பக்தர்களைக் கேட்க வேண்டும்.

எவர்களுடைய உள்ளத்தை (நமது ஐயங்களுக்கான விடைகளைக் கூறும்படி) பகவான் தூண்டி விடுகிறாரோ, அவர்கள் தான் நம்மைப் பொறுத்தவரையில் பக்தர்கள் ஆவார்கள்.

'நாம் முழுமையாகப் பகவானிடம் சரணடைந்து விட்டோம்'-என்பதை எப்படி நிச்சயப்படுத்திக் கொள்வது? இந்த சந்தேகத்துக்குத் தீர்வு காணும்வகையில், அர்ஜுனனை உபமானமாகக் கூறுகிறார்கள். அர்ஜுனனிடம் பகவான் கூறுகிறார் -

மந்மநா ப₄வ மத்₃ப₄க்த்தோ மத்₃யாஜீ மாம் நமஸ்குரு ।
மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜாநே ப்ரியோऽஸி மே ॥
*(கீதை 18/65)*

***(அர்ஜுனா! நீ என்னையே நினைத்துக் கொண்டிரு; என்னுடைய பக்தனாக ஆகிவிடு; என்னையே வழிபடு; என்னை வணங்கு. இப்படிச் செய்தால், நீ என்னையே அடைவாய்-என்று, நான் உனக்கு வாக்குறுதி அளிக்கிறேன். நீ என்னுடைய அத்யந்த நண்பன் அல்லவா?)***

இந்தச் செய்யுளில்-சரணாகதியின் நான்கு அம்சங்கள் வந்துள்ளன. 'மன்மனா:'-என்னிடமே மனத்தைச் செலுத்து; 'மத்₃ப₄க்த:'-மனைவி, மக்கள் மீது அல்லாமல் என்னையே நேசிப்பவனாக ஆகு; 'மத்₃யாஜீ'-என்றால், பகவானைப் பூசித்தல், அவருடைய கட்டளைப்படி நடத்தல் என்று கொள்ள வேண்டும். 'நமஸ்குரு'-என்னுடைய திருவடிகளில் விழுந்து வணங்கு. தரையில் விழுந்து வணங்குவதன் சிறப்பை, உலக வழக்கிலேயே கண்ணாரக் காண்கிறோம்.

குற்றம் செய்த ஒருவன், காலில் விழுந்து வணங்கினானே யானால், எவ்வளவு கடினமான இதயம் கொண்டவனாக இருந்தாலும், அவனை மன்னிக்கத்தான் வேண்டியிருக்கிறது. சிறுபையன் குற்றம் செய்து விட்டுத் தாயாரின் மடியில் போய் உட்கார்ந்துவிடுகிறான்; பெரியவன் அவர்களின் கால்களில் விழுகிறான். இதைப் போலவே, பக்தன் தன்னுடைய மிக நண்பரான பரமாத்மாவின் பாத கமலங்களில் விழுந்து விட வேண்டும். அப்புறம் அவர் அடித்தாலும் சரி, கொஞ்சினாலும் சரி, பரவாயில்லை; பகவான் மூலமாக செய்யப்பட்ட ஏற் பாடுகளை ஏற்று எப்போதும் மலர்ச்சியுடன் இருக்க வேண் டும். பெரிய பெரிய கஷ்டங்கள் வந்தாலும், ஆடிப் போய் விடக் கூடாது. குழந்தையின் உடம்பில் ஏற்பட்ட கொப்புளத் தைக் கரைக்க ரணசிகிச்சை செய்யும்போது, அது அம்மா மடியில் சுகமாக அமர்ந்து கொண்டு விடுகிறது; பயப்படுவ தில்லை! அது அழுதுகொண்டே தான் இருக்கிறது; என்றா லும், அதற்குத் தெரியும்-'எங்கம்மாவுக்கு எங்கிட்ட ரொம்பப் பிரியம்! கனவுலே கூட எனக்குக் கெடுதல் பண்ண மாட்டா... அவளுடைய ஒவ்வொரு ஏற்பாடும் என்னோட நல்லதுக்குத் தான்!'

பக்தனும், இவ்விதமே சந்தேகத்தை நீக்கி, நம்பிக்கையோடு பகவானுடைய திருவடிகளில் விழுந்து கிடக்கிறான். பெரிய பெரிய துயரங்கள் வந்தபோதும், அவன் தன் புத்தியினால் ஆலோசித்து, அந்தத் துன்ப நிகழ்ச்சி யினுள்ளே தன்னுடைய நலனையே காண்கிறான்; ஆனால், அவ்வப்போது ஊடல்கொண்டு உட்கார்ந்து விடுகிறான்! பகவான் அவனுடைய குழந்தைத்தனத்தைப் புரிந்து கொண்டு, அவனுடைய துயரம்-அழுகையை லட்சியம் செய்யாமலிருந்து விடுகிறார். கடைசியில், அவன் ஒவ்வொரு சூழ்நிலையிலும் சந்துஷ்டியுடன் இருக்கும்படி செய்து விடுகிறார். அவன், இடம் அற்றவனாக ஆகிவிடுகிறான்- வீடும் உடலும் அவன் தங்கும் இடங்களாக இல்லாமற் போய் விடுகின்றன. அவனுடைய சரீரப்பற்று விலகி விடுகிறது. வீட்டு(குடும்ப)ப் பற்று மறைந்து விடுகிறது.

பகவானும் சொல்கிறார் -

துல்ய நிந்த$_3$ாஸ்துதிர்மௌநீ ஸந்துஷ்டோ யேந கேநசித்।
அநிகேத: ஸ்த்தி$_2$ரமதிர்ப$_4$க்திமாந்மே ப்ரியோ நர:॥
*(கீதை-12/19)*

*(புகழ்ச்சி-இகழ்ச்சிகளை சமமாகக் கருதுபவன்; மௌனமாக இருந்து, ரொம்பவும் அக்கறை காட்டாமல், எப்படியோ ஒருவிதமாக உடலைப் பேணுவதில் திருப்தி காண்பவன், தான் வசிக்கும் இடத்தில் 'தனது' என்ற உரிமையும் பற்றுதலும் இல்லாதவன்-இப்படிப்பட்ட நிலையான அறிவுடைய பக்தன் எனக்குப் பிரியமானவன்.)*

இவ்விதம் நிலையான அறிவு ஏற்பட்டு விட்டால் அவன் எல்லாச் சூழ்நிலையிலும் மலர்ச்சியாகவே இருக்கிறான். கீதை பன்னிரெண்டாம் அத்தியாயத்தில் பகவானால் விவரிக்கப்பட்டுள்ள, பக்தனின் லட்சணங்கள் நமக்குப் பொருந்துமேயானால், 'நாம் பகவானை முழுமையாகச் சரண் அடைந்து விட்டோம்' என்று அறிந்து கொள்ளலாம்.

இதுவரை, சரணாகதியின் ஆரம்ப நிலையையும் நிறைவு நிலையையும் கண்டோம். இந்த இரண்டு நிலைகளுக்கும் இடையேயுள்ள படிக்கட்டுகள் பற்றியும் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும். ஆஞ்ஜநேயர் ஒரே பாய்ச்சலில் சமுத்திரத்தைக் கடந்து சென்றதைப் போல, பக்தனும் கூட நடுவிலுள்ள படிகளில் ஏறிச் செல்லாமலும் கூட சம்சார சாகரத்தைத் தாண்டி, பரமாத்மாவின் அருளினால், தான் விரும்பிய பரமபதத்தை அடையமுடியும்.

கீதை பதினாறாம் அத்தியாயத்தில், தெய்விக இயல்புகள் என்று கூறப்பட்டுள்ள இருபத்தியாறு குணங்களை, தன் உள்ளத்தில் பதித்துக் கொள்வது தான் சரணாகதிக்கு இடையேயுள்ள நிலை; இதன் பயன், பகவத் ப்ராப்தி.

அது சரி; தெய்விக இயல்புகளின் லட்சணங்கள் பக்திமார்க்க சாதனை என்று ஏன் மதிக்கப்பட வேண்டும்?-என்று கேட்டால், ஒன்பதாம் அத்தியாயத்தில் பகவான் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்-

மஹாத்மாநஸ்து மாம் பார்த்த$_2$ தை$_3$வீம் ப்ரக்ருதிமாஶ்ரிதா:।
ப$_4$ஜந்த்யநந்யமநஸோ க்ஞாத்வா பூ$_4$தாதி$_3$மவ்யயம்॥
*(கீதை 9/13)*

*(ஏ, பார்த்தா! தெய்விக இயல்புகளைக் கொண்ட மகாத்மாக்கள், படைக்கப்பட்டுள்ள எல்லா பொருட்களுக்கும் நானே ஆதி காரணன்; நான் அழிவில்லாத அக்ஷரவடிவினன் என்பதை உணர்ந்து கொண்டு, நிலையான மனத்துடன் எப்போதும் என்னை வழிபடுகிறார்கள்.)*

ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தஶ்ச த்ருட₄வ்ரதா:।
நமஸ்யந்தஶ்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே ॥
*(கீதை-9/14)*

*(உறுதியான நிலை கொண்ட பக்தர்கள், எப்போதும் என் நாம-குண சங்கீர்த்தனம் செய்து வருகிறார்கள்; என்னை அடைவதற்காகப் பாடுபடுகிறார்கள்; என்னை அடிக்கடி வணங்கி, எப்போதும் என்னை தியானித்துக் கொண்டிருந்து, ஒன்றிய நேசத்துடன் என்னை உபாசிக்கிறார்கள்.)*

இந்தச் செய்யுளில் பக்தி (சரணாகதி)யின் லட்சணம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது; ஆகவே, பக்தியைப் பற்றிப் பேசும்போது, தெய்விக இயல்புகளை பற்றிக் குறிப்பிடுவது சரியானது தான்.

சரணாகதி வழியில் செல்லும் சாதகனுடைய உள்ளத்திலிருந்து தீய குணங்களும், தீய ஒழுக்கங்களும் தாமாகவே மறைந்து விடுகின்றன; நற்குண-நல்லொழுக்கம், இறைவன் திருவருளால், தாமாகவே வளர்கின்றன. தெய்விக இயல்புகள் வளர்ச்சி; அசுர இயல்புகள் அழிவு-ஆகிய இரண்டுக்கும் முக்கிய காரணம், பகவானின் கருணை தான். நல்ல குணங்களில் வளர்ச்சி தென்படவில்லையென்றால், சரணாகதியில் இன்னமும் குறை இருக்கிறது என்று புரிந்து கொள்ள வேண்டும். சூரியனை அடைக்கலம் புகுந்து விட்டால், எங்கேயும் இருளுக்கு இடம் இல்லாமற் போய்விடுவதைப் போல, பகவானிடம் சரண் அடைந்த பின்னர், உள்ளத்தில் எவ்விதமான மாசுகளும் இருக்கவே முடியாது. சரணாகதியை உறுதியாக நிலைநிறுத்தி வைப்பதற்காக, சாதகன் ஆத்மபரிசோதனை செய்து கொண்டேயிருக்க வேண்டும். தன் உள்ளத்தில் நற்குணங்கள் குடி கொண்டுள்ளனவா? பகவான் இடம் பெற்றுள்ளாரா? அல்லது, உலக இன்பப் பொருட்கள் நிரம்பியுள்ளனவா?-

என்று, எப்போதும் மனத்தை அலசிப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். அவருடைய பேச்சில், பகவானுடைய குணங் களை சுவைத்து மகிழும் அனுபவமும் ஆர்வமும் இருக்கிறதா, இல்லையா? - என்பதையும் கவனிக்க வேண்டும். அவருடைய செயல்கள் பகவானைக் குறித்ததாக இல்லாமல், புலனுகர் இன்பங்களைக் குறித்ததாக இருக்கின்றனவா? சரீரத்தை இறைவனிடம் ஒப்படைத்த பின்னர், அது சம்பந்த மான சுக-துக்கங்களில் பகவானுடைய அருள்தான் சாதக னுக்கு தெளிவாகத் தெரியும். (உடல்நலம் இறைவனின் அருள் என்பது போல, உடற்கேடும் இறைவனின் அருள் தான்-என்ற திடபுத்தி) பகவானிடம் பக்தி பெருகப் பெருக, போகப் பொருட்களில் ஆனந்தம் குறையத் தொடங்குகிறது; பகவானிடம் ஆனந்தம் பெருகத் தொடங்குகிறது. இதுதான் பக்தியின் உரைகல். பகவானிடம் பக்தி பெருகும் அளவுக்கு, பகவானைப் பற்றிய ஞானம் ஏற்படும்; அந்த அளவு உலக போகங்களில் வைராக்கியம் ஏற்பட்டு தானாகவே அவை களிலிருந்து கிடைக்கும் இன்பம் குறைந்து வருவது போல் தோன்றும். மெல்ல மெல்ல பகவானிடம் பக்தி பெருகிவரும். அப்போது கிடைக்கும் பேரானந்தத்துக்கு முன்னால் மூன்று உலக மொத்த ஆனந்தமும் துச்சமாகப் போய்விடும்.

பகவானைச் சரண் அடைகிறவன் 'பகவான் எது செய்தாலும் அது நல்லதற்கே' என்று எண்ணிக் கொள்ள வேண்டும். அவருடைய ஒவ்வொரு செயல் திட்டத்திலும் அருளும், நியாயமும் உள்ளன என்று எண்ணி ஆனந்தமாக இருக்க வேண்டும். பகவானை மகிழ்விக்கும் புதிய கர்மாக்களைச் செய்ய வேண்டும். பகவானை எப்போதும் நினைத்துக் கொண்டிருக்க வேண்டும். மனைவி-மக்கள் கிடைக்கும்போது, 'பகவானை அடைவதற்கான என் முயற்சி களில் உதவி செய்வதற்காக இவர்கள் கிடைத்திருக்கிறார்கள்' என்று எண்ணிக் கொள்ள வேண்டும்; அவர்கள் பிரிந்து போய்விட்டால், 'இவர்களிடம் பற்றுக் கொண்டு சம்சாரத்தில் சிக்கியிருந்தேன்; அதனால், பகவான் என் மீது அருள்பாலித்து அவர்களை இழுத்துக் கொண்டு விட்டார்' என்று எண்ணிக் கொள்ள வேண்டும். மற்றப் பொருட்களை அடைந்தாலும், இழந்தாலும் இதுபோலவே நினைத்துக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு மேன்மேலும் உறுதியாக உணர உணர, மனத்தின் விகாரங்கள் குறையத் தொடங்குகின்றன; அவன் அந்த அளவுக்குப் பிரபுவின் அருகில் போய்க் கொண்டிருக் கிறான்-என்பதாகக் கருத வேண்டும். பிரபுவின் கருணை யினால், அவனிடம் நற்குணங்கள் வளர்ந்து கொண்டே இருக் கின்றன. அவன் யாரிடம் பணி செய்தாலும், 'நான் பகவானி டம் பணி செய்து கொண்டிருக்கிறேன்' என்று எண்ணிக் கொள்கிறான். ஒவ்வொரு வேலையிலும், அவனுடைய சுயநலமின்மை வெளிப்படுகிறது. கற்புக்கரசியான ஒரு பெண்மணி, விருந்தினர்களுக்குப் பணிவிடை செய்கிறார்; ஆனால், அதிலேயே ஒட்டிக் கொண்டிருப்பதில்லை-என்பது போல, பக்தனும் சம்சார வேலைகளைச் செய்து கொண்டிருந்தாலும், அதில் பற்றுக் கொண்டு விடுவதில்லை.

சில பக்தர்களுக்கு இன்னொருவிதமான அனுபவமும் ஏற்படுகிறது. தொண்டு செய்து விடுவதால் அவருக்கு சமூக அந்தஸ்து கிடைக்கிறது. தொடக்கத்தில், இந்த மரியாதையால் அவருக்குக் கொஞ்சம் மகிழ்ச்சியும் ஏற்படுகிறது. அதனால், மிகவும் அக்கறையுடன் நன்றாகத் தொண்டு செய்கிறார். ஆனால், சிறிது காலம் சென்றபின், 'அடடா! நான் மாலை-மரியாதைக்காக அல்லவா, தொண்டு செய்கிறேன்; பகவானுக்காக இல்லை போலிருக்கிறதே?' என்று சிந்திக்கத் தொடங்குகிறார். மெள்ள மெள்ள மாலை மரியாதை மீது இருந்த ஆசை குறையத் தொடங்குகிறது; அவர் தானாகவே சமூக மரியாதையை மனத்தளவில் புறக்கணிக்கத் தொடங்கு கிறார். என்றாலும், பிறரால் கொடுக்கப்படும் கௌரவத்தை ஏற்றுக் கொள்கிறார். பிறகு, (இந்த நிலையையும் கடந்து) மரியாதை காட்டப்படும்போது, இவர் கூச்சப்படத் தொடங்கு கிறார். 'இந்தப் பூமி பிளந்து, அந்தப் பள்ளத்தில் நான் புதைந்துவிட மாட்டேனா?' என்று எண்ணுகிறார். (கௌரவத்தை ஏற்பதில் அவ்வளவு வெறுப்பு வந்து விடுகிறது, அவருக்கு) அப்புறம், இப்படி எங்காவது மரியாதை கொடுப்பார்கள் என்றால், அந்த இடத்துக்கே போக மாட்டார்!-கற்புடைய பெண்மணி, கெட்ட சூழ்நிலையுள்ள இடத்துக்குப் போக விரும்ப மாட்டாளே?-அது மாதிரி! இந்த

நிலையில், அவருக்கு மரியாதை-கௌரவங்களில் துக்கமும், அவமானமும், இகழ்ச்சியில் சுகம் தோன்றுவது போலவும் ஆகிவிடுகிறது. 'என்னிடம் இருந்த 'நான்', பகவானிடம் சரணடைந்து விட்டது; இப்போது நான், பகவானின் கைப்பாவை மட்டுமே!' என்று எண்ணத் தொடங்குகிறார். இந்த நிலை குறித்து, பகவான் சொல்கிறார் -

யே து ஸர்வாணி கர்மாணி மயி ஸந்யஸ்ய மத்பரா:।
அநந்யேநைவ யோகே$_3$ந மாம் த்$_4$யாயந்த உபாஸதே ॥
தேஷாமஹம் ஸமுத்$_3$த$_4$ர்த்தா ம்ருத்யுஸம்ஸாரஸாக$_3$ராத்।
ப$_4$வாமி நசிராத் பார்த்த$_2$ மய்யாவேஶிதசேதஸாம் ॥
*(கீதை 12/6,7)*

*(அர்ஜுனா! என்னிலேயே ஈடுபட்டுள்ள பக்தர்கள் எல்லாச் செயல்களையும் எனக்கு அர்ப்பணம் செய்து, என்னுடைய ஸகுண வடிவத்தை ஒன்றிய பக்தியோடு எப்போதும் சிந்தித்துக் கொண்டு வழிபடுகிறார்கள். என்னிடமே சித்தத்தை லயிக்கச் செய்துள்ள பேரன்புக்குரிய பக்தர்களை நான் விரைவிலேயே பிறப்பு-இறப்பு என்னும் சம்சாரக் கடலிலிருந்து கடைத்தேற்றுகிறேன்.)*

கைப்பாவையின் கயிறுகளைத் தன் கையில் பற்றியுள்ள சூத்ரதாரி, தன் விருப்பப்படி பாவையை ஆட்டுவிப்பதைப் போல, பகவானும் பாவையாகிவிட்ட பக்தர்களை தன் விருப்பப்படி ஆட்டிப் படைக்கிறார் என்பது தான் இதன் கருத்து. பாவைகள் தாங்களாக எதுவும் செய்வதில்லை. அது போலவே, பக்தனும் தன் அஹங்காரத்தால் எதுவும் செய்வ தில்லை. அவன் மூலமாக நடப்பதை எல்லாம், பகவானே செய்கிறார். அதனால், அவனைப் பொறுத்தமட்டில், ஒவ்வொரு செயலும் புனிதமானது தான். பகவானுடைய ஆணைக்கும் விருப்பத்திற்கும் எதிராக எந்த ஒரு செயலும் அவனால் செய்யப்பட மாட்டாது. இதுதான், 'கர்மாக்களை அர்ப்பணம் செய்வது' என்ற தத்துவம். அவனுடைய மனம், உடல், புலன்கள் எல்லாமே பகவானுக்கு அர்ப்பணம். அவன், சுகதுக்கங்கள் ஏற்படும்போது, தன் உறுதியிலிருந்து நழுவி விடுவதில்லை. மாறாக, 'இது பகவானின் செயல் திட்டம்'

என்று எண்ணிக் கொண்டு, ஒவ்வொரு அடியிலும் பகவானின் அருளைக் கண்டபடியே மகிழ்ச்சியில் மூழ்கு கிறான். அவனுடைய சித்தம், வேறு எங்கும் செல்லாமல், பகவானைப் பற்றி மட்டுமே சிந்தித்துக் கொண்டிருக்கிறது; (உலகத்தில்) வேறு பல பொருள்கள் இருக்கின்றன என்ற எண்ணம் கூட அவன் மனத்தில் தோன்றுவதில்லை. இவ் விதம், கர்மம்-சரீரம்-இந்திரியங்கள்-மனம்-புத்தி ஆகியவற் றைப் பகவானிடம் முற்றிலுமாக ஒப்படைத்து விடுகிறவனை பகவான் தானாகவே விரைவில் சம்சாரக் கடலிலிருந்து கரையேற்றி, தன்னுடைய மிக்க நேசத்துக்குரியவனாக ஆக்கிக் கொள்கிறார்; தானும் அவனுடைய மிக்க நேசத்துக் குரியவராக ஆகிவிடுகிறார். இந்த நிலையில், அவனுக்கு எங்கே திரும்பினாலும் பகவானின் தோற்றம் தான் தென் படுகிறது. அவன் தன்னையே மறந்து பிரேமமயமாகி விடுகிறான். அந்த நிலையில் அவனுக்கு நீதி, நியாயம் பற்றிய ஞானம் இருப்பதில்லை; பித்துப் பிடித்தவன் போல் ஆகிவிடுகிறான். இதுவே முழுமையான சரணாகதி; இதைத்தான் ஒன்றிய பக்தி, ஒன்றிய சரண் என்கிறார்கள்; இதுதான் தன்னைத் தானே, முழுமையாக பகவானிடம் ஒப்படைப்பதாகும்.



## 5. ஒன்றிய பக்தியின் இலக்கணம்

காலம் என்பது விலைமதிக்க முடியாதது; எனவே, ஒரு நொடியைக் கூட நாம் வீணாக இழக்கக் கூடாது. இரவில் தூங்கும்போது, பகவானுடைய நாமஜபம்-தியானம் செய்த படியே தான் தூங்க வேண்டும். இவ்விதம் செய்வதால், இரவு படுக்கை நேரமும் (ஆன்மிகப்) பயிற்சி நேரமாகி விடும்.

பகற்போதில் நடந்தும் திரிந்தும், உண்டும் குடித்தும் நின்றும் அமர்ந்தும் இருந்தபோதும் கூட கோபிகைகள் எவ்வாறு தம் நேரத்தைச் சிலவழித்தார்களோ, அவ்வாறே நாமும் நம் நேரத்தைச் சிலவழிக்க வேண்டும்.

ஸ்ரீமத் பாகவதத்தில் சொல்லியிருக்கிறது -

யா தோ$_3$ஹநேऽவஹநநே மத$_2$நோபலேப -
ப்ரேங்க்$_2$கேங்க$_2$நார்ப$_4$ருதி$_3$தோக்ஷண மார்ஜநாதெ$_3$ள।
கா$_3$யந்தி சைநமநுரக்ததி$_4$யோऽஸ்ரு கண்ட$_2$யோ
த$_4$ந்யா வ்ரஜஸ்த்ரிய உருக்ரம சித்தயாநா:॥
*(10-44-15)*

*(பசுக்களிடமிருந்து பால் கறக்கும்போதும், தானியங்களை புடைக்கும்போதும், தயிர் கடையும் போதும், முற்றத்தைக் கழுவும் போதும், குழந்தைகளைத் தூளியில் போட்டு ஆட்டும் போதும், அழுது கொண்டிருக்கும் குழந்தைகளைக் கொஞ்சிக் குலாவும் போதும், வீட்டைத் தண்ணீர் தெளித்து கழுவும் போதும், துடைப்பத்தால் பெருக்கும்போதும், அன்புநிறைந்த உள்ளத்துடன், கண்ணீர் நிறைந்த கண்களுடன், தழுதழுக்கும் குரலில் ஸ்ரீகிருஷ்ணனைப் பாடி வந்தார்களே, கோபிகைகள்!-ஆகா, எப்போதும் ஸ்ரீகிருஷ்ணனிடமே சித்தத்தைச் செலுத்தி வந்த அந்த விரஜபூமியின் கோபிகைகள் தாம் எவ்வளவு பாக்கியசாலிகள்!)*

இவ்விதமே, நாமும், எல்லாக் காலத்திலும், வாயால் பகவானுடைய நாமம்-குணம் ஆகியவற்றை இசைத்துக் கொண்டும், மனத்தால் பகவானைத் தியானம் செய்து கொண்டும் இருக்க வேண்டும். இதில் கொஞ்சமும் குறை ஏற்பட்டுவிடக் கூடாது.

காலை-மாலை ஆகிய இரு வேளைகளிலும், ஆன்மிகப் பயிற்சிக்காக நேரம் ஒதுக்கி வைத்துக் கொள்ள வேண்டும். குறிப்பிட்ட காலத்தை ஒதுக்கி வைப்பதுடன், அதை மிக்க மதிப்புடையதாகவும் ஆக்கவேண்டும். பகவானுடைய நாமஜபத்தோடு கூட, கீழே சொல்லப்போகிற ஆறு விஷயங்களிலும் விசேஷ கவனம் செலுத்தினால், நாமஜபம் மிகவும் விலைமதிக்க முடியாததாகி விடும்-

1) முடிந்தால், நாமஜபத்தை, மனத்தால் செய்ய வேண்டும்; முடியாவிட்டால், மூச்சுக்காற்றுடன் சேர்ந்து செய்ய வேண்டும். அதுவும் முடியாவிட்டால், நாக்கினால் (உச்சரித்தவாறே) செய்ய வேண்டும்.
2) நாமஜபம் செய்யும்போது, அந்தப் பெயருக்குரிய பகவானைச் சிந்தித்தவாறு இருக்கவேண்டும்.

3) ரகசியமாக நாமஜபம் செய்யவும். 'நான் இவ்வளவு ஜபம் செய்கிறேன்' என்று எவரிடமும் கூறலாகாது.

4) சிரத்தை-விசுவாசத்துடன் நாமஜபம் செய்ய வேண்டும்.

5) பிரேமையில் உருகி, நாமஜபம் செய்ய வேண்டும்.

6) நிஷ்காமபாவனையுடன் நாமஜபம் செய்ய வேண்டும்.

இவைகளில் ஒவ்வொன்றும் விலை மதிக்க முடியாதது. சிரத்தை, பேரன்பு, நிஷ்காமபாவம்-இவைகளில் ஏதேனும் ஒன்று கூட இருந்தாலும் போதும், நாம் சம்சார சாகரத்தைக் கடந்து விடலாம்.

பகவானைத் தியானம் செய்யும்போது, கீழ்க்கண்ட ஆறு விஷயங்களும், கூடவே இருக்க வேண்டும்-

1) பகவானுடைய நாமஜபம்.

2) உலக வாழ்க்கையிலிருந்து வைராக்கியம்.

3) பகவானுடைய குணம், பிரபாவம், லீலைகளின் நினைவு.

4) இவை எல்லாவற்றிலும் பகவானுடைய தத்வ-ரகசியத்தை அறிந்து கொள்ளுதல்.

5) தொடர்ந்திருத்தல் (இடையிடையே விட்டு விடாமல் இருப்பது).

6) நிஷ்காமபாவம் (பயனில் பற்றின்மை)

இவ்விதம் தியானம் செய்யப்பட்டால்-அது ஒரு நொடி நேரமே இருந்தாலும்-அதற்கு ஈடான தவம் இல்லை; தீர்த்தம் இல்லை; விரதம் இல்லை; தானம் இல்லை; யக்ஞம் இல்லை-ஏன், எதுவுமே இல்லை!

இவ்விதம், நாம் நம்முடைய நேரத்தை மிக்க மதிப்புடையதாக ஆக்க வேண்டும்.

கீதை பாராயணம் செய்யும் முறையைப் பார்ப்போம். ஒருவன், பதினெட்டு அத்தியாயங்களின் மூல சுலோகங் களைப் பாராயணம் செய்கிறான்; மற்றொருவன், ஒரு அத்தி யாயத்தை மட்டும் - பொருள், பாவம் புரிந்து கொண்டு- பாராயணம் செய்கிறான் என்றால், முதலாவது மனிதனைக் காட்டிலும் ஒரு அத்தியாயத்தை மட்டும் படிப்பவன் மேலான வன். அர்த்தத்தையும் பாவத்தையும் உணர்ந்து கொண்டு,

உள்ளத்தில் பதித்து வைத்து, பின், அதனை நடைமுறைக்குக் கொண்டுவந்தால் அதுவே மிகச் சிறந்தது. இது, ராமாயணம் முதலிய மற்ற பாராயணங்களுக்கும் பொருந்தும்.

நாம், மானசிகமாகப் பூஜை செய்ய வேண்டும்-பிரத்யட்சமாகவே செய்வதைப் போல. பகவானைத் தியானம் செய்தபின் பூஜை செய்து, நிவேதனம் படைத்து, ஆரத்தி காட்டி, தோத்திரம்-பிரார்த்தனை செய்ய வேண்டும். இந்தச் சடங்குகளையும் உணர்வுபூர்வமாக மந்திரங்களின் அர்த்தத்தை உணர்ந்து கொண்டு, சிரத்தா-பக்தியுடன், பலனில் பற்றில்லாமலும் பிரேமையால் உருகியும் செய்ய வேண்டும். தியானம் செய்வதற்கு, தனக்கு எதிரில் படங்கள் வைத்துக் கொண்டால், அந்தப் படங்கள் அல்லது சிலைகளை நினைத்துக் கொண்டிராமல், சாட்சாத் பகவானையே தியானிக்க வேண்டும். இவ்விதம் செய்யப்படும் தியானம்-பூஜையும் மிகவும் சிறப்பானது; இந்த பூஜையில், மனம் வேறு எங்கோ போய் விடுவதற்கு வாய்ப்பு இல்லை; ஏனென்றால், மானசிக பூஜையில், பகவானுடைய வடிவம் மனத்திலேயே இருக்கிறது. எந்த உடலைக் கொண்டு நாம் பூஜை செய்கிறோமோ, அதுவும் மனத்தில் தான் இருக்கிறது. பூஜைப் பொருட்களும், பூஜைச் சடங்குகளும் மனோகல்பிதம் தான். ஆகவே, பூஜையின் போது மனம் இங்குமங்கும் போவதற்குச் சாத்தியமே இல்லை.

பகவானைத் தோத்திரம்-பிரார்த்தனை செய்வதும், உணர்ச்சி பூர்வமாகவும், சிரத்தை, பிரேமை, பயனில் பற்றில்லாமலும் செய்யப்பட வேண்டும். பகவானிடம் நமக்கு நம்பிக்கை-பகவான் இருக்கிறார்; பல பேர்களுக்குத் தரிசனம் அளித்திருக்கிறார்; எனக்கும் கிடைப்பார்-என்பது இருக்க வேண்டும். இவ்விதம், பகவான் இருக்கிறார் என்பதிலும், அவர் எளிதில் அடையக் கூடியவர் என்ற விஷயத்திலும் பூரண நம்பிக்கை வைக்க வேண்டும்.

விவேகத்தின் அடிப்படையில் வைராக்கியம் ஏற்பட்டு, வைராக்கியத்தின் அடிப்படையில் உபரதி (பரம சாந்தம்) ஏற்பட்டால், உலக வாழ்விலிருந்து இயக்கங்களை விலக்கி மனம் தானாகவே பரமாத்மாவில் ஈடுபட்டு விடுகிறது.

சித்தத்தின் விருப்பம், சித்தத்தின் இயக்கம்-இரண்டும் ஒரே இடத்தில் தான் இருக்கின்றன. நம்முடைய மனம் எதில் நாட்டம் கொள்கிறதோ, அதை நோக்கியே நம்முடைய மனம் இயங்குகிறது-என்பதால், பகவானிடம் பிரேமை பெருக வேண்டும். பிரேமை ஏற்படுவதற்கு முக்கிய காரணம், சிரத்தை; சிரத்தை ஏற்படுவதற்கு முக்கிய காரணம், அந்தக்கரணத்தின் (மனத்தின்) தூய்மை.

ஸ்ரீபகவான் கீதையில் கூறுகிறார் -

ஸத்த்வாநுரூபா ஸர்வஸ்ய ஶ்ரத்$_3$த$_4$ா ப$_4$வதி ப$_4$ாரத।
ஶ்ரத்$_3$த$_4$ாமயோऽயம் புருஷோ யோ யச்ச்$_2$ரத்$_3$த$_4$: ஸ ஏவ ஸ:॥
*(17/3)*

*(பரத குலத் தோன்றலே! மனிதர்கள் அனைவருக்கும் சிரத்தை என்பது அவர்களுடைய அந்தக்கரணத்தை ஒட்டியே இருக்கிறது. மனிதன், சிரத்தை மயமானவன்; யாரொருவன் எந்த மாதிரியான சிரத்தை உடையவனாக இருக்கிறானோ, அவன் அதே இயல்புடையவனாக கருதத்தக்கவன்.)*

சிரத்தை என்றால், சாதாரண சிரத்தை அல்ல-மிக மிக உயர்ந்த சிரத்தை ஏற்பட வேண்டும். நிதர்சனத்தைக் காட்டிலும் எது மேலானதோ, அதையே பரமசிரத்தை என்கிறார்கள். ஒரு வஸ்துவை, நேரில் கண்ணால் பார்க்க முடியவில்லை; ஆனால், நம்பிக்கைக்குரியவர் சொன்னால், அவர் சொற்களில் நம்பிக்கை ஏற்படவேண்டும்-அதாவது, அந்த வஸ்து, நேரில் காண்பதைக் காட்டிலும் மிகவும் தெளிவாகத் தெரியும் என்ற அளவுக்கு. மன்னர் துருபதனுக்கும் அவருடைய மனைவிக்கும், பரமேசுவரனுடைய சொற்களில் இத்தகைய அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது. சிகண்டி விஷயமாக, 'முதலில் அவன் பெண் உருவத்தில் பிறப்படைந்து, பின்னர் பையனாக மாறுவான்' என்று சொல்லியிருந்தார். அதே போல, துருபதனுக்கு மகள் தான் பிறந்தாள்; ஆனால், அவர் அவளைப் பையன் என்றே கருதினார்; தசார்ண தேசத்தின் அரசன் ஹிரண்யவர்மாவின் மகளுக்கு மணம் செய்தும் கொடுத்தார். கண்பார்வைக்குப் பெண்ணாக இருந்தாலும், அவளைப் பையன் என்றே ஏற்று மதித்தார். இப்படிப்பட்ட அசைக்க முடியாத நம்பிக்கை,

பகவானுடைய உபதேசங்களிலும் கீதையின் சொற்களிலும் ஏற்பட வேண்டும்.

ஞானம், வைராக்யம் (பற்றின்மை), ஏகாந்தமாக வசிப்பது, பலனில் ஆசையின்மை, நாமஜபம், சிரத்தை, பேரன்பு-இவை எல்லாம் பெருமதிப்பு உள்ளவை. இவைகள் ஒருவனிடம் இருக்குமேயானால், பகவத் தியானம் தானாகவே உண்டாகி விடுகிறது; ஏனென்றால், இவையெல்லாம் தியானத்தின் துணைவர்கள்.

நிஷ்காம கர்மத்தினாலும் பகவானுடைய நாமத்தை ஜபிப்பதனாலும் அவரைத் தியானிப்பதாலும் மனத் தூய்மை ஏற்படுகிறது. மனத் தூய்மை ஏற்பட்டவுடன், பகவானிடம் சிரத்தா-பக்தி உண்டாகிறது; சிரத்தை தோன்றியதும் அபரிமிதமான அன்பு தோன்றி விடுகிறது. இந்த அன்பு வளர வளர, மனிதன், பகவானுடைய குண-பிரபாவ-தத்துவ-ரகசியத்தை உண்மையான வடிவத்தில் தெரிந்து கொள்கிறான். பகவானுடைய குணம்-பிரபாவம்-தத்துவம்-ரகசியம் எல்லாம் மிகவும் மதிப்புடையவை. பகவானுடைய பெயர், வடிவம், லீலை, இருப்பிடம்-இவை எல்லாவற்றிலும் குண-பிரபாவ-தத்துவ-ரகசியத்தைக் காண வேண்டும்; குண-பிரபாவங்களின் தத்துவ-ரகசியம் அறிவுக்குப் புலனாகி விட்டால், உள்ளத்தின் உணர்வு, தனக்குத் தானாகவே உச்சநிலையை அடைந்து விடுகிறது; சாதகனுடைய வாழ்க்கையே மாறி விடுகிறது; அவனுடைய நிலையில் விசித்திரமான மாற்றம் ஏற்பட்டு விடுகிறது.

இம்மாதிரியான விஷயங்களை கேட்டுக் கேட்டு ஒருவனுடைய மனத்தில் மகிழ்ச்சி, மலர்ச்சி, சாந்தி, ஆனந்தம் ஏற்பட்டு, பகவானைத் தரிசிக்க முடியும் என்ற நம்பிக்கை உண்டாகிவிட்டால், முன்னர் கூறியதை விட வெகு விரைவிலேயே சாதகனுடைய நிலைமை மாறிப்போய் விடலாம்; நிமிஷ நேரத்தில் அவனுக்குப் பகவான் கிடைத்து விடுவார்!

மனத்தின் நிலை மாறிப் போகும்போது, இதயம் மலர்ந்து போகிறது; பேச்சு, தழுதழுக்கிறது; தொண்டை தடைபடுகிறது; உடலில் மயிர்க்கூச்சல் ஏற்படுகிறது; கண்களில் நீர் வழியத் தொடங்குகிறது; நாசியிலிருந்தும் நீர் பெருகத்

தொடங்குகிறது; அவனுடைய மனம், புத்தி, பொறிகள்-எல்லாவற்றிலும் ஆனந்தம் வெள்ளமாகப் பாய்கிறது.

இவ்விதமான சொற்கடந்த பேரானந்த நிலை ஏற்படா விட்டால், பகவானுடைய பிரிவினால் துக்கம் ஏற்பட வேண்டும்; துக்கத்தில், 'பகவான் இல்லாமல் வாழ்க்கையே வீண்' என்ற அனுபவம் ஏற்பட வேண்டும். பரதன், மாமன்னர் ஸ்ரீராமனைப் பிரிந்திருந்தபோது எவ்வளவு துயரத்தை அடைந்தாரோ, அதே மாதிரியான நிலை தான், பிரிவாற்றாமையில் உண்டாக வேண்டும்.

இதற்காக, நாம், நற்குணம், நல்லொழுக்கம், ஈசுவர பக்தி, ஞானம், வைராக்கியம் முதலியவைகளை அமுதமாகக் கருதி எப்போதும் கைக்கொண்டு ஒழுக வேண்டும். இதற்கு மாறாக தீய குணம், தீய ஒழுக்கம், தீய பொருளில் நாட்டம், சோம்பல், தவறுதல், உறக்கம், புலனின்பம்-இவைகளை யெல்லாம் பெரும் தடைகளாகக் கருதி, முற்றிலுமாகப் புறக்கணித்து விடவேண்டும்; ஒரு நொடிப் பொழுது கூட இவைகளுக்கு இடம் கொடுக்கக் கூடாது.

பகவானை சந்திப்பதில் ஏற்படும் ஒவ்வொரு நொடி தாமதமும், ஒவ்வொரு யுகமாகத் தோன்றவேண்டும்.

பகவான் ஸ்ரீராமனைச் சந்திப்பதற்காகப் பரதன், சித்திரகூடத்துக்குப் போனபோது ஏற்பட்ட தாமதத்தை அவனால் பொறுக்க முடியாமற் போயிற்று. அதே போல, நமக்கும், பகவானைச் சந்திப்பதில் ஏற்படும் தாமதம, பொறுத்துக் கொள்ள முடியாததாக ஆகிவிட வேண்டும். நீரிலிருந்து பிரிவு ஏற்பட்டவுடன் மீனுக்கு ஏற்படும் நிலை-துடிதுடிக்கும் நிலை-பகவானைப் பிரிந்திருப்பதால் அதே மாதிரி துடிதுடிப்பு நமக்கும் ஏற்பட்டால்-பகவான் நம்மைச் சந்திப்பதில் காலம் கடத்தமாட்டார்.

அத்துடன், நாம் ஒரே இடத்தில் உறுதியாக நிலைத்து நிற்க வேண்டும். சாதகப் பட்சி, ஆகாயத்திலிருந்து விழும் நீரை மட்டுமே குடிக்கும்; பூமியில் உள்ள தண்ணீரை-கங்காஜலமாகவே இருந்தாலும் சரி-அது குடிக்காது. அதே போல நாமும் பரமாத்மாவைத் தவிர வேறு எந்தப் பொருளிலும் மனத்தைச் செலுத்தக் கூடாது.

தியானம் செய்யும் போது நாம் சகோரபட்சியைப் போல இருக்க வேண்டும். முழு நிலா தோன்றிய நேரத்திலிருந்து அது மறையும் வரை, சகோரபட்சி அதையே பார்த்துக் கொண்டிருக்கிறது-உயிரே போவதாக இருந்தாலும் சரி, பார்வையைத் திருப்புவதில்லை. அது, சந்திரனையே ஒரே குறியாகப் பார்த்துக் கொண்டிருக்கிறது; அமுதமயமான அதன் வடிவத்தை சுவைத்துக் கொண்டிருக்கிறது. அதுபோல, பகவானைத் தியானம் செய்யும்போது அவருடைய பேரழகு வாய்ந்த திருவடிவத்தைக் கண்களால் சுவைத்துக் கொண்டேயிருக்க வேண்டும்.

பகவானைப் பிரிந்து தவிப்பதில், நாம், ருக்மணியைப் போல இருக்கவேண்டும். பகவான் வராவிட்டால், நம்முடைய உயிர் இருக்காது-என்பதாக நாம் நிச்சயம் செய்து கொண்டு விட வேண்டும். இந்தச் சூழ்நிலையில், அந்தப் பக்தனிடம் செல்ல வேண்டிய கடமை, பகவானுடையதாகிறது, 'பகவான் வரமாட்டாரென்றால், பின்னும் வாழ்ந்து கொண்டிருப்பதால் என்ன பயன்?' என்ற தீர்மானத்துக்கு வந்துவிட வேண்டும். இப்படிச் சொல்வதன் கருத்து, 'நாம் தற்கொலை செய்து கொண்டு விட வேண்டும்' என்பது அல்ல. மாறாக, பகவானுடைய பிரிவில் தோன்றும் ஆற்றாமையில், 'இனிமேல் பகவானைப் பாராமல் இருந்தால் உடலிலிருந்து உயிர் போய்விடும்' என்ற இக்கட்டான நிலை உண்டாக்கப்பட வேண்டும். ராமசரித மானஸத்தில், பரதன், 'வனவாசத்துக்கான கால எல்லை முடிந்து போய்விட்ட பின்னரும், பகவான் ஸ்ரீராமன் வரவில்லை என்ற நிலையில், நான் உயிரோடு இருந்தால், உலகில் என்னைப் போன்ற பாவி வேறு யாருமே இருக்கமாட்டான்' என்கிறான்.

ஆக, இம்மாதிரியான ஒரு நிலையை அடைய வேண்டும் என்றால், மனம் எங்கெங்கெல்லாம் செல்கிறதோ, அங்கங்கிருந்தெல்லாம் நாம் அதனை வலிய இழுத்துப் பகவானிடம் செலுத்தவேண்டும். பகவான் சொல்லியிருக்கிறார் -

யதோ யதோ நிஶ்சரதி மநஶ்சஞ்சலமஸ்தி₂ரம் ।
ததஸ்ததோ நியம்யைதத₃ாத்மந்யேவ வஶம் நயேத் ॥

*(கீதை : 6/26)*

*(நிலை கொள்ளாததும் சலித்துக் கொண்டேயிருப்பதுமான மனத்தை, சப்தம் முதலிய புலனுகர் பொருட்களில் ஈடுபட்டு உலகில் சஞ்சரிப்பதிலிருந்து தடுத்து, அந்தந்தப் பொருட்களிலிருந்து விலக்கி, அடிக்கடி பரமாத்மாவிடமே நிலைபெறச் செய்ய வேண்டும். அதாவது, மனம் எங்கு செல்கிறதோ, அங்கிருந்து மனத்தைத் தன்வயப்படுத்தி பரமாத்மாவிடம் நிலைப்படுத்த வேண்டும்.)*

அல்லது, மனம் எங்கு செல்கிறதோ, அங்கே பரமாத்மாவைக் காண வேண்டும்.

யோ மாம் பஶ்யதி ஸர்வத்ர ஸர்வம் ச மயி பஶ்யதி।
தஸ்யாஹம் ந ப்ரணஶ்யாமி ஸ ச மே ந ப்ரணஶ்யதி॥
*(கீதை : 6/30)*

*(எவன், எல்லாப் பொருட்களிலும், வாசுதேவனான நானே வியாபித்து இருப்பதாகப் பார்க்கிறானோ; எல்லாப் பொருட் களும் வாசுதேவனான என்னுள் இருப்பதாகப் பார்க்கிறானோ, அவனுக்கு நான் காணாமல் போவதில்லை; அவனும் என்னால் காணப்படாமல் போவதில்லை.)*

ஏனென்றால், பகவான் சொல்கிறார் -

ஸமோऽஹம் ஸர்வபூ$_4$தேஷு ந மே த்$_3$வேஷ்யோऽஸ்தி ந ப்ரிய:।
யே ப$_4$ஜந்தி து மாம் ப$_4$க்த்யா மயி தே தேஷு சாப்யஹம்॥
*(கீதை : 9/29)*

*(நான் எல்லா ஜீவராசிகளிலும் சமமாக வியாபித்திருக்கிறேன்; எனக்குப் பிரியமில்லாதவர் என்றோ, பிரியமானவர் என்றோ எவரும் இலர். ஆனால், என்னைப் பிரேமையுடன் வழிபடும் பக்தர்கள் என்னிடமே இருக்கிறார்கள்; நானும் அவர்களுக்குக் கண்ணால் காணத்தக்கவனாகிறேன்.)*

பக்தர்கள் நான்கு வகையினர் ஆவார்கள்-பொருள் விரும்புவோர், துன்பத்தில் உள்ளவர், அறிந்து கொள்ள விழைபவர், ஞானி. பகவான் சொல்கிறார் -

தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த ஏகப$_4$க்திர்விஶிஷ்யதே।
ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்த$_2$மஹம் ஸ ச மம ப்ரிய:॥
*(கீதை : 7/17)*

*(அவர்களுள் எப்போதும் என்னிடம் ஒன்றிய நிலையில் அநன்யமான பிரேமபக்தி செலுத்தும் ஞானி பக்தன் மிகவும் உயர்ந்தவன். ஏனென்றால், என்னை, தத்துவத்தோடு அறிந்துகொள்ளும் ஞானிக்கு நான் மிகவும் பிரியமானவன்; அந்த ஞானியும் எனக்கு மிகவும் பிரியமானவன்.)*

உத$_3$ாரா: ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம் ।
ஆஸ்த்தி$_2$த: ஸ ஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் க$_3$திம் ॥
*(கீதை : 7/18)*

*(இவர்கள் எல்லோரும் மேலானவர்களே; ஆனால், ஞானியோ, சாட்சாத் என் வடிவமே!-என்பது என் கொள்கை. ஏனென்றால், என்னிடம் நிலைத்துவிட்ட மனம்-புத்தியுடைய ஞானி பக்தன், மிக்க உயர்ந்த அடைக்கலப் பொருளான என்னிடமே நல்லவிதமான நிலை கொண்டிருக்கிறான்.)*

இவ்விதம் நான்கு வகையினராகக் கூறப்பட்ட பக்தர்களில், ஞானியைப் பற்றிச் சிறப்பாகப் புகழ்ந்திருக்கிறார், பகவான். ஒரே குறிக்கோளைப் பற்றியுள்ள ஞானியை மேலானவன் என்றும், தனக்கு மிகவும் பிரியமானவன் என்றும் சொல்லியிருக்கிறார்; ஏனென்றால், பகவானுக்கு இப்படி ஒரு நியமம்-

யே யத$_2$ா மாம் ப்ரபத்$_3$யந்தே தாம்ஸ்ததை$_2$வ ப$_4$ஜாம்யஹம் ।
*(கீதை : 4/11)*

*(பக்தன் என்னை எவ்வாறு வழிபடுகிறானோ, நானும் அவனை அதே முறையில் சென்றடைகிறேன்.)*

ஆகவே, அதுவாகவே ஆகி, பகவானை வழிபட வேண்டும்.

ஸர்வபூ$_4$தஸ்தித$_2$ம் யோ மாம் ப$_4$ஜத்யேகத்வமாஸ்த்தி$_2$த: ।
ஸர்வத$_2$ா வர்தமாநோऽபி ஸ யோகீ$_3$ மயி வர்ததே ॥
*(கீதை : 6/31)*

*(எவனொருவன் ஒரே குறியாகக் கொண்டு, எல்லா உயிர்ப் பிராணிகளிடமும் ஆத்மாவாக உள்ள சச்சிதானந்த வாசுதேவனான என்னையே வழிபடுகிறானோ, அந்த யோகி உலகில் எந்தச் செயல் செய்தாலும் அவன்-உண்மையில்-என்னுடனே இருக்கிறான்.)*

ஏனென்றால், அவனுடைய (ஞானியினுடைய) பார்வையில், உலகில், என்னைத் தவிர வேறு எந்தப் பொருளும் இல்லவே இல்லை. உலகமக்களுக்கு வேண்டு மானால், அவன் பல உலகியல் காரியங்களைச் செய்து வருவதாகத் தோன்றலாம்; ஆனால், உண்மையில், அவன், உலகியல் சம்பந்தமான செயல்களில் ஈடுபாட்டுடன் இல்லை; என்னிடமே நிலைத்து இருக்கிறான்.

மேலே சொல்லப்பட்ட எல்லா விஷயங்களையும் நன்றாகப் புரிந்து கொண்டு, தன்னை ஞானி-மகாத்மாவின் நிலைக்கு உயர்த்திக் கொள்ள வேண்டும். மிக உயர்ந்த நிலையிலுள்ள ஞானமும் பக்தியும் உடைய சாதகன், எப்போதும் பகவானையே சிந்தித்துக் கொண்டிருக்கிறான்; அதனால், பகவான் அவனுக்கு எளியர். பகவான் சொல்கிறார்-

அநந்யசேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ: ।
தஸ்யாஹம் ஸுலப$_4$: பார்த$_2$ நித்யயுக்தஸ்ய யோகி$_3$ந: ।।

(கீதை : 8/14)

*(அர்ஜுனா! புருஷோத்தமனான என்னையே அநன்யமான- வேறு எங்கும் செல்லாத-மனத்துடன் நினைத்துக் கொண்டிருப்பவன்- அப்படி நித்திய நிரந்தரமாக என்னிடம் ஊன்றியுள்ள யோகிக்கு நான் எளியன்; அதாவது, சுலபமாகவே அடையத் தக்கவன்.)*

அஹம் ஸர்வஸ்ய ப்ரப$_4$வோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே ।
இதி மத்வா ப$_4$ஜந்தே மாம் பு$_3$தா$_4$ பா$_4$வஸமந்விதா: ।।

(கீதை : 10/8)

*(வாசுதேவனான நான் தான் எல்லா உலகங்களின் தோற்றத் துக்கும் காரணன்; என்னிடமிருந்தே எல்லா உலகங்களும் இயங்குகின்றன-இதைப் புரிந்து கொண்டு சிரத்தா-பக்தியுடன் கூடிய அறிஞரான பக்தர்கள், பரமேசுவரனான என்னையே எப்போதும் வழிபடுகிறார்கள்.)*

'அவர்கள் எவ்வாறு வழிபடுகிறார்கள்?' என்ற கேள்விக்கு விடையை, பகவானிடமிருந்தே கேளுங்கள் -

மச்சித்தா மத்க$_3$தப்ராணா போ$_3$த$_4$யந்த: பரஸ்பரம் ।
கத$_2$யந்தஶ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச ।।

(கீதை : 10/9)

*(என்னிடமே எப்போதும் மனத்தை ஊன்றியுள்ள, என்னிடமே தம் உயிரை அர்ப்பணித்துள்ள பக்தர்கள், என்னிடம் கொண்டுள்ள பக்தியைப் பற்றிப் பேசி விவாதித்துத் தமக்குள் என்னுடைய பிரபாவத்தை அறிவித்துக் கொண்டும், குண- பிரபாவங்களோடு கூடிய என் வரலாற்றைப் பேசிக் கொண்டும் எப்போதும் சந்துஷ்டியுடன் இருக்கிறார்கள்; வாசுதேவனான என்னிடமே-என் நினைவிலேயே-இன்பம் காண்கிறார்கள்.)*

இவ்விதமாக அந்த பக்தர்கள் என்னையே நித்திய-நிரந்தரமாக வழிபட்டுக் கொண்டிருந்து, என்னுடைய அருளினால், என்னை அடைந்து விடுகிறார்கள்.

தேஷாம் ஸததயுக்தாநாம் ப$_4$ஜதாம் ப்ரீதிபூர்வகம்।
த$_3$த$_3$ாமி பு$_3$த்$_3$தி$_4$யோக$_3$ம் தம் யேந மாமுபயாந்தி தே॥
*(கீதை : 10/10)*

*(தியானம் முதலிய வழிகளில் எப்போதும் என்னிடமே ஈடுபட்டு, பிரேமையுடன் என்னை வழிபடும் பக்தர்களுக்கு, தத்துவஞான வடிவமான அந்த யோகத்தை அருள்கிறேன்; அதன்மூலம் அவர்கள் என்னையே அடைந்து விடுகிறார்கள்.)*

தேஷாமஹம் ஸமுத்$_3$த$_4$ர்த்தா ம்ருத்யுஸம்ஸாரஸாக$_3$ராத்।
ப$_4$வாமி நசிராத்பார்த$_2$ மய்யாவேஶிதசேதஸாம்॥
*(கீதை : 12/7)*

*(அர்ஜுனா! என்மேல் சித்தத்தைப் பதித்துள்ள பிரேமி பக்தர்களை, இறப்பு வடிவமான சம்சாரக் கடலிலிருந்து விரைவில் கரையேற்றி விடுகிறேன். அதாவது, நான் படகோட்டியாக மாறி சம்சாரக் கடலிலிருந்து அக்கரை சேர்க்கிறேன்; இதில், தாமதம் என்ற பேச்சுக்கே இடமில்லை.)*

அநந்யாஶ்சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே।
தேஷாம் நித்யாபி$_4$யுக்தாநாம் யோக$_3$க்ஷேமம் வஹாம்யஹம்॥
*(கீதை : 9/22)*

*(மனத்தை வேறு எங்கும் செலுத்தாத பேரன்புடைய பக்தர்கள், அனைத்துக்கும் தலைவனான-பரமேசுவரனான- என்னை எப்போதும் சிந்தித்துக் கொண்டிருந்தவாறே நிஷ்காமபாவத்துடன் வழிபட்டுக் கொண்டும், நித்திய நிரந்தரமாக என்னையே நினைத்துக் கொண்டும் இருப்பவர்களின் யோகக்ஷேமப் பொறுப்பை நானே ஏற்கிறேன்.)* அடைய முடியாததை அடை

ஏனென்றால், அவனுடைய (ஞானியினுடைய) பார்வையில், உலகில், என்னைத் தவிர வேறு எந்தப் பொருளும் இல்லவே இல்லை. உலகமக்களுக்கு வேண்டுமானால், அவன் பல உலகியல் காரியங்களைச் செய்து வருவதாகத் தோன்றலாம்; ஆனால், உண்மையில், அவன், உலகியல் சம்பந்தமான செயல்களில் ஈடுபாட்டுடன் இல்லை; என்னிடமே நிலைத்து இருக்கிறான்.

மேலே சொல்லப்பட்ட எல்லா விஷயங்களையும் நன்றாகப் புரிந்து கொண்டு, தன்னை ஞானி-மகாத்மாவின் நிலைக்கு உயர்த்திக் கொள்ள வேண்டும். மிக உயர்ந்த நிலையிலுள்ள ஞானமும் பக்தியும் உடைய சாதகன், எப்போதும் பகவானையே சிந்தித்துக் கொண்டிருக்கிறான்; அதனால், பகவான் அவனுக்கு எளியர். பகவான் சொல்கிறார்-

அநந்யசேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ:।
தஸ்யாஹம் ஸுலப$_4$: பார்த$_2$ நித்யயுக்தஸ்ய யோகி$_3$ந:।।
*(கீதை : 8/14)*

*(அர்ஜுனா! புருஷோத்தமனான என்னையே அநன்யமான- வேறு எங்கும் செல்லாத-மனத்துடன் நினைத்துக் கொண்டிருப்பவன்- அப்படி நித்திய நிரந்தரமாக என்னிடம் ஊன்றியுள்ள யோகிக்கு நான் எளியன்; அதாவது, சுலபமாகவே அடையத் தக்கவன்.)*

அஹம் ஸர்வஸ்ய ப்ரப$_4$வோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே।
இதி மத்வா ப$_4$ஜந்தே மாம் பு$_3$த$_4$ா ப$_4$ாவஸமந்விதா:।।
*(கீதை : 10/8)*

*(வாசுதேவனான நான் தான் எல்லா உலகங்களின் தோற்றத்துக்கும் காரணன்; என்னிடமிருந்தே எல்லா உலகங்களும் இயங்குகின்றன-இதைப் புரிந்து கொண்டு சிரத்தா-பக்தியுடன் கூடிய அறிஞரான பக்தர்கள், பரமேசுவரனான என்னையே எப்போதும் வழிபடுகிறார்கள்.)*

'அவர்கள் எவ்வாறு வழிபடுகிறார்கள்?' என்ற கேள்விக்கு விடையை, பகவானிடமிருந்தே கேளுங்கள் -

மச்சித்தா மத்க$_3$தப்ராணா போ$_3$த$_4$யந்த: பரஸ்பரம்।
கத$_2$யந்தஶ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச।।
*(கீதை : 10/9)*

*(என்னிடமே எப்போதும் மனத்தை ஊன்றியுள்ள, என்னிடமே தம் உயிரை அர்ப்பணித்துள்ள பக்தர்கள், என்னிடம் கொண்டுள்ள பக்தியைப் பற்றிப் பேசி விவாதித்துத் தமக்குள் என்னுடைய பிரபாவத்தை அறிவித்துக் கொண்டும், குண- பிரபாவங்களோடு கூடிய என் வரலாற்றைப் பேசிக் கொண்டும் எப்போதும் சந்துஷ்டியுடன் இருக்கிறார்கள்; வாசுதேவனான என்னிடமே-என் நினைவிலேயே-இன்பம் காண்கிறார்கள்.)*

இவ்விதமாக அந்த பக்தர்கள் என்னையே நித்திய-நிரந்தரமாக வழிபட்டுக் கொண்டிருந்து, என்னுடைய அருளினால், என்னை அடைந்து விடுகிறார்கள்.

தேஷாம் ஸததயுக்தாநாம் ப$_4$ஜதாம் ப்ரீதிபூர்வகம் ।
த$_3$த$_3$ாமி பு$_3$த்$_3$தி$_4$யோக$_3$ம் தம் யேந மாமுபயாந்தி தே ॥
*(கீதை : 10/10)*

*(தியானம் முதலிய வழிகளில் எப்போதும் என்னிடமே ஈடுபட்டு, பிரேமையுடன் என்னை வழிபடும் பக்தர்களுக்கு, தத்துவஞான வடிவமான அந்த யோகத்தை அருள்கிறேன்; அதன்மூலம் அவர்கள் என்னையே அடைந்து விடுகிறார்கள்.)*

தேஷாமஹம் ஸமுத்$_3$த$_4$ர்த்தா ம்ருத்யுஸம்ஸாரஸாக$_3$ராத் ।
ப$_4$வாமி நசிராத்பார்த$_2$ மய்யாவேஶிதசேதஸாம் ॥
*(கீதை : 12/7)*

*(அர்ஜுனா! என்மேல் சித்தத்தைப் பதித்துள்ள பிரேமி பக்தர்களை, இறப்பு வடிவமான சம்சாரக் கடலிலிருந்து விரைவில் கரையேற்றி விடுகிறேன். அதாவது, நான் படகோட்டியாக மாறி சம்சாரக் கடலிலிருந்து அக்கரை சேர்க்கிறேன்; இதில், தாமதம் என்ற பேச்சுக்கே இடமில்லை.)*

அநந்யாஶ்சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே ।
தேஷாம் நித்யாபி$_4$யுக்தாநாம் யோக$_3$க்ஷேமம் வஹாம்யஹம் ॥
*(கீதை : 9/22)*

*(மனத்தை வேறு எங்கும் செலுத்தாத பேரன்புடைய பக்தர்கள், அனைத்துக்கும் தலைவனான-பரமேசுவரனான- என்னை எப்போதும் சிந்தித்துக் கொண்டிருந்தவாறே நிஷ்காமபாவத்துடன் வழிபட்டுக் கொண்டும், நித்திய நிரந்தரமாக என்னையே நினைத்துக் கொண்டும் இருப்பவர்களின் யோகக்ஷேமப் பொறுப்பை நானே ஏற்கிறேன்.) அடைய முடியாததை அடை*

*வதற்குப் பெயர், யோகம்; கிடைத்திருப்பதைக் காப்பாற்றுவது, க்ஷேமம். அதாவது, அவர்கள் செய்துள்ள சாதனையை அதன் நிலையிலேயே வைத்துக் காப்பாற்றுகிறேன்; அதிலுள்ள குறைகளை நிறைவிக்கிறேன். வேறு விதமாகச் சொன்னால், இன்றுவரை அவர்களுக்கு எது கிடைக்கவில்லையோ-பரமபதப் பிராப்தி-(அதையே, பகவான் வாக்குத் தத்தம் செய்து, சொல்கிறார்.) அதனை நான் அடைவிக்கிறேன்.*

பகவானுடைய இந்த உத்திரவாதத்தைக் கவனத்தில் கொண்டு, நாம் அப்படியே செய்யவேண்டும். இவ்விதமான அநன்யபக்தியால், மனிதன் என்ன விரும்புகிறானோ, அதுவே அவனுக்குக் கிடைத்து விடுகிறது. பகவான் சொல்கிறார் -

ப$_4$க்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதே$_4$ாऽர்ஜுந ।
ஜ்ஞாதும் த்$_3$ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥
மத்கர்மக்ருந்மத்பரமோ மத்$_3$ப$_4$க்த: ஸங்க$_3$வர்ஜித: ।
நிர்வைர: ஸர்வபூ$_4$தேஷு ய: ஸ மாமேதி பாண்ட$_3$வ ॥

*(கீதை : 11/54,55)*

*(எதிரிகளை தவிக்கச் செய்யும் அர்ஜுனா! அநன்யமான பக்தியினால், நான்கு கைகளோடு கூடிய இப்போதுள்ள என்னுடைய வடிவத்தைக் கண்ணால் காணவும், தத்துவத் தோடு அறிந்து கொள்ளவும், அவ்வாறே, உட்புகவும்-ஒன்றிய உணர்வினை அடையவும்-முடியும். அர்ஜுனா! தன்னுடைய கடமைகள் எல்லாவற்றையும் என்பொருட்டே செய்து கொண்டும், என்னையே சார்ந்திருந்தும், என்னையே பக்தி செய்தும், பற்றுதல் இல்லாமலும், எல்லா ஜீவப் பிராணி களிடமும் விரோதமில்லாமலும் எவன் இருக்கிறானோ, அந்த அநன்ய பக்தன் என்னையே அடைந்து விடுகிறான்.)*

இதற்குப் பெயர் தான்-ஏகநிஷ்ட்ட பக்தி, அவ்யபிசாரிணீ பக்தி, அநன்ய சரணம், அநன்ய பிரேமை, அநன்ய பக்தி.

பகவானால் சொல்லப்பட்ட இந்த எல்லா விஷயங் களையும் அறிந்து, இதற்கேற்ப, மனிதன் தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும். இப்படிப்பட்ட வாழ்க்கையை ஏற்றுக் கொண்டு உலகில் வாழ்வது தான், பாக்கியம். உலகிலுள்ள எல்லாப் பொருட்களும், மக்களின் பார்வையில், உலகைச் சார்ந்த பொருட்கள் ஆகும்;

நம்முடைய பார்வையில் அல்ல. நம்முடைய பார்வையில், உலகில் உள்ள எல்லாப் பொருட்களுமே பகவானுடையவை; நான், பகவானைச் சேர்ந்தவன்; பகவான், என்னுடையவர்; என்னுடைய எல்லா செயல்பாடுகளும் பகவானின் பொருட்டாகவே-இவ்வாறு நினைத்துக் கொள்ள வேண்டும்.

அல்லது, எல்லோரையும் பகவானின் வடிவமாகவே கருத வேண்டும். பகவான் கீதையில் சொல்லியிருக்கிறார் -

ப₃ஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந்மாம் ப்ரபத்₃யதே।
வாஸுதே₃வ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுது₃ர்லப₄:॥
(7/19)

*(பல பிறவிகளுக்குப் பின், கடைசிப் பிறவியில், தத்துவ ஞானத்தைப் பெற்றுவிட்ட மனிதன், 'எல்லாம் வாசுதேவனே' என்று உணர்ந்து என்னை வழிபடுகிறான். அப்படிப்பட்ட மகாத்மா மிகவும் கிடைத்தற்கரியர்.)*

ஆக, எல்லாவற்றிலும் பகவானைக் காண்போம்; அல்லது, எல்லாவற்றையும் பகவானாகக் கருதுவோம்-இப்படி எண்ணி, ஆனந்தத்தில் மூழ்கித் திளைப்போம்.

'உலகத்திலிருந்து நமக்கு என்ன தான் பயன் கிடைக்கிறது? அப்படி ஏதேனும் கிடைத்தாலும், அவையெல்லாம் பகவானுடையவை; நான் பகவானுடையவன், எல்லாம் பகவானிடம் இருக்கின்றன; என்னுடைய எல்லா இயக்கங்களும் பகவானுடைய தூண்டுதலால்-அவருடைய ஆணையினாலேயே நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன-என்றோ, அல்லது, நான் அவருக்காகவே எல்லாக் காரியங்களையும் செய்து கொண்டிருக்கிறேன்; பகவான் எவைகளைச் செய்விக்கிறாரோ, அவைகளைச் செய்து கொண்டிருக்கிறேன்.' இவ்வாறெல்லாம் உணர்ந்து கொள்வது, பகவானைத் தரிசிப்பதற்குத் துணைகளாக அமையும். ஆகவே, இவ்வாறு உணர்ந்து கொண்டு, எல்லாக் காலங்களிலும், எல்லா இடங்களிலும், பகவானை அனுபவிப்போம்; ஒருபோதும் அவரை மறவோம்.

## 6. பகவானின் இயல்பு

பகவானுடைய கருணையினால் தான் நமக்கெல்லாம் மனித சரீரம் கிடைத்திருக்கிறதே தவிர, நம்முடைய செயலால் அல்ல; எண்பத்துநான்கு லட்சம் யோனிகளில் பிறந்து, வாழ்க்கையை அனுபவித்து விட்ட பின்னர், பிராணிகளின் ஆன்மிக முன்னேற்றத்துக்காக-எவ்வளவு பெரிய பாவியாக ஒரு ஜீவன் இருந்தாலும்-மனித உடலைக் கொடுப்பது என்ற நியமத்தை எல்லையில்லா நேச உணர்வோடு பகவான் ஏற்படுத்தியிருக்கிறார். அழிவில்லாத இந்த ஜீவன், எண்பத்து நான்கு லட்சம் யோனிகளில் பிறந்து சுற்றித் திரிந்து அலுத்துப் போயிருக்கும் சமயத்தில், தயை நிரம்பிய பகவான் இதனிடம் கருணை கொண்டு மனித உடலைத் தருகிறார். 'இந்த அழிவற்ற ஜீவன், எண்பத்துநாக்கு லட்சம் யோனிகளில் பிறந்து பிறந்து சுழல்கிறான். மாயையின் தூண்டுதலினால் காலத்திற்கும் கருமத்திற்கும் இயல்புக்கும் முக்குணங்களுக் கும் கட்டுப்பட்டு, இந்த ஜீவன் எப்போதும் தடுமாறுகிறான். காரணமின்றி அன்பு காட்டும் பகவான் எப்போதாவது, சிலருக்கே இந்த அரிய மானிடப் பிறவியை அளிக்கிறார்' என்று துளசீதாசர் கூறுகிறார் (ராமசரிதமானசம், உத்தர.). இது, பகவானுடைய காரணமற்ற தயை மற்றும் அன்பான பாசம் நிரம்பிய மிக உயர்ந்த இயல்பு என்பதை நினைவிற்கொள்ள வேண்டும். பாசம் நிரம்பிய இந்த இயல்பின் உண்மை நிலை யை உணர்ந்து கொள்வதன் மூலம் மனிதன் பரமாத்மாவை அடைதல் என்ற பரமசாந்தியை அடைகிறான். பகவான், கீதையில் கூறுகிறார் –

ஸுஹ்ருத$_3$ம் ஸர்வபூ$_4$தாநாம் ஜ்ஞாத்வா மாம் ஶாந்திம்ருச்ச$_2$தி ॥
(5/29)

***(அனைத்து ஜீவப் பிராணிகளுக்கும் நண்பன்-அதாவது, தன்னலம் கருதாத தயையுடைய அன்பன்-என்று, என்னை உண்மையாக அறிந்து கொண்டு, என்னுடைய பக்தன், சாந்தியை அடைகிறான்.)***

இப்படிக் கூறுவதன் கருத்து என்னவென்றால், பகவான் எப்போதும் எல்லாவிதத்திலும் விருப்பங்கள் நிறைவடையப்

பெற்றவர்; அப்படியிருந்தும் மிகவும் இரக்க சித்தம் உடையவ ராதலால், காரணம் ஏதுமில்லாமலே, இயல்பாகவே எல்லோரி டமும் அருள் நோக்கம் கொண்டு, எல்லோருக்கும் நன்மை யையே செய்து வருகிறார்; அத்துடன், அவ்வப்போது அவதாரம் எடுத்து பற்பல லீலைகள் செய்கிறார்; அவைகளைக் கேட்டுக் கேட்டு, மக்கள் பகவானிடம் ஈடுபட்டு சம்சார சாகரத்தைக் கடக்கிறார்கள். பாகவதத்தில்,

அநுக்$_3$ரஹாய பூ$_4$தாநாம் மாநுஷம் தே$_3$ஹமாஸ்த்தி$_2$த:।
ப$_4$ஜதே தாத்$_3$ருஶீ: க்ரீட$_3$ா யா ஶ்ருத்வா தத்பரோ ப$_4$வேத்॥

*(பகவான் ஜீவர்களுக்கு அருள்புரிய வேண்டும் என்பதற்காகவே, தன்னை மனித வடிவில் வெளிப்படுத்திக் கொள்கிறார்; அத்துடன் (மனிதப் பிறவியில்) பலவிதமான லீலைகள் செய்கிறார்; அவைகளைக் கேட்டுக் கேட்டாவது, ஜீவர்கள் பகவானிடம் மனத்தைச் செலுத்தட்டுமே?- என்பதால்)*

அவருடைய ஒவ்வொரு செயலிலும் உலகத்தின் நலன் நிரம்பியிருக்கிறது. அவர், உயிர்களுக்காக வகுக்கும் சட்டங் கள், தயை மற்றும் அன்பினால் நிறைந்துள்ளன. ‘பகவான் காரணம் ஏதுமில்லாமலே என்னிடம் அன்பு செலுத்துகிறார்; அவர் செய்வதெல்லாம், என் நலனுக்காகவே; ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் எது நிகழ்கிறதோ, அது கருணைவள்ளலான பகவானுடைய பிரேமையும், தயையும் ஊடும் பாவும் போல இணைந்து விளங்கும் நலன் பயக்கும் விதி என்று எண்ணி எப்போதும் மனநிறைவுடனும் முகமலர்ச்சியுடனும் இருக்க வேண்டும். இவ்வாறு, இந்த ஆழ்ந்த உண்மையை முழுமையாக உணர்ந்து, நம்பிக்கை வைப்பவனுக்கு பேரானந்தமும் பேரமைதியும் கிடைக்கின்றன.

அவரோவெனில், அனைத்து ஆற்றலும் உடையவர்; எல்லா உலகத்துக்கும் தலைவர்; எல்லோரையும் கட்டுப்பாட்டில் வைத்திருப்பவர்; எல்லோர் இதயத்திலும் உள்ளவர்; கணக்கில்லாத நற்குணங்கள் நிரம்பிய பெருங்கடல்; கருணை வள்ளல்; பேரன்பு உடையவர்- இப்படிப்பட்ட பகவான், தான், ஜீவர்களிடம் நேசம் கொண்டவர் என்று சொல்லுகிறார். அவருடைய இந்த வார்த்தைகளில் மனிதன் நம்பிக்கை கொண்டு, அவரைத்

தன்னுடைய நண்பராக ஏற்றுக் கொண்டால், அவனுக்கு உலகில் எங்கும் கிடைக்காத ஆனந்தமும், விவரிக்க இயலாத சாந்தியும் ஏற்படும்-என்பதைக் கற்பனை செய்து பார்ப்பது கூடக் கஷ்டமாக இருக்கும்! உண்மையில், பகவானுக்கு ஈடு பகவான் தான். உலகத்தில் அவரைப் போன்று, காரணம் தேடாத கருணை வள்ளல், அன்பு செலுத்துபவர், எவ்விதப் பலனையும் விரும்பாமலே மிகவும் நன்மையைச் செய்பவர், வேறு எவரும் இலர்.

தாய்-தந்தை, உற்றார்-உறவினர் ஆகிய எல்லோரும் சுயநலம் காரணமாகவே அன்பு செலுத்துகிறார்கள்; சுயநலம் இல்லாதவர் எவருமே இல்லை. பிருஹதாரண்யக உபநிஷத்தில் மைத்ரேயியிடம், 'கணவன், மனைவி, மைந்தன், செல்வம் ஆகிய எல்லாமும் தனக்கு உபயோகப்படுவதாலேயே அன்பு காட்டப்படுகின்றன' என்று ஸ்ரீயாக்ஞவல்கியர் கூறியிருக்கிறார்.

ந வா அரே ஸர்வஸ்ய காமாய ஸர்வம் ப்ரியம் ।
ப$_4$வத்யாத்மநஸ்து காமாய ஸர்வம் ப்ரியம் ப$_4$வதி ॥
(பி.உ: 2-4-5)

*(மைத்ரேயி! எல்லோரும் எல்லோருக்கும் உபயோகமாக இருக்கிறார்கள் என்பதால் நாம் எல்லோரிடமும் அன்பு பாராட்டுவதில்லை; தனக்கு உபயோகமாக இருப்பவர்களிடமே அன்பு கொள்கிறோம்.)*

ஸ்ரீதுளசீதாசர், ராமசரிதமானஸம் கிஷ்கிந்தா காண்டத்தில், 'பார்வதி! தேவர்கள், மனிதர்கள், முனிவர்கள் எல்லோருமே, தம் நலம் கருதித்தான் அன்பு செய்கின்றனர்' என்று சிவபெருமான் கூறுவதாகப் பாடியுள்ளார். உத்தரகாண்டத்தில், 'உலகத்தில் அனைவரும் தத்தம் நலனை மட்டும் கருத்தில் கொண்டவர்கள் தான். கனவில் கூட, அவர்களுக்கு உயர்ந்த ஆன்மிக விஷயங்களில் பற்றுக் கிடையாது' என்றும் குறிப்பிட்டுள்ளார்.

ஆனால், பகவானோ, ஜீவர்களிடமிருந்து எவ்வித பிரயோஜனத்தையும் எதிர்பார்க்காமல், அன்பு காட்டுகிறார்-என்பது எவ்வளவு உயர்வான, தன்னலம் காணாத, அன்பு நிறைந்த நட்புறவு! அதற்கு ஓர் எல்லையே இல்லை. ஒருவன்

எவ்வளவு பெரிய பாவியாக இருந்துவிட்டுப் போகட்டுமே?- பகவானுடைய திருவடியில் அடைக்கலம் புகுந்துவிட்ட போதிலேயே, பகவான் அவரைத் தூய்மைப்படுத்தி உயர்நிலைக்குத் தூக்கிவிடுகிறார்.

ராமசரிதமானஸம், சுந்தரகாண்டத்தில், ராமன் கூறு கிறார் : 'கோடி அந்தணர்களைக் கொன்றவனாக இருந்தாலும், என்னைச் சரணடைந்து விட்டால், நான் அவனை ஒதுக்கிவிட மாட்டேன். ஒரு ஜீவன் என்னை நோக்கிப் பார்த்துவிட்டால் போதும்; உடனே, அவனுடைய கோடிக்கணக்கான பிறவி களின் பாவங்களை அழிப்பேன்... பாவிகளுக்கு என்னை வணங்குவது உடன்பாடில்லாதது. ஆனால், ராவணன் தம்பி யான விபீஷணன், தீய எண்ணம் கொண்டவனாக இருந் தானேயானால், என் எதிரே வருவதற்கு எப்படித் துணிவான்?' உத்தரகாண்டத்தில், 'எனக்கு என் அடியார் போல வேறு எவரும் பிரியமானவர் இல்லை. இது சத்தியம். இதை மீண்டும் மீண்டும் கூறுவேன்.... பக்தியுள்ளவன் மிகவும் இழிந்தவனாக இருந்தாலும், எனக்கு உயிரினும் மேலானவன்....' என்றும் கூறுகிறார். ஏனென்றால், 'பிரபு தன் உள்ளத்தில் தன் அடியார்களின் தவறு-குற்றங்களை நினைவில் வைத்துக் கொள்வதில்லை. ஆனால், உபகாரம் என்று ஏதேனும் சிறிதளவு செய்தாலும் பெரிதும் மகிழ்கிறார்' (பாலகாண்டம்)

பகவான் தன் மனத்தில் பக்தனுடைய குற்றங்குறைகளை நினைவில் வைத்துக் கொள்வதில்லை; தன் இதயத்தில், (பக்தனைப் பற்றிய) நற்சிந்தனைகளை நூறு தடவைகள் சிந்தித்துப் பார்க்கிறார்.

இது மட்டுமல்ல. எவனொருவன் தூய மனத்துடன் 'நான் தங்களுடையவன்' என்று வாய் திறந்து ஒரு தடவையாவது சொல்கிறானோ, அவனை நிரந்தரமாக அச்சமற்றவனாக ஆக்கிவிடுகிறார், பகவான். பகவானே இதனை முரசறைந்து கூறியிருக்கிறார்.

ஸக்ருதே$_3$வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே ।
அப$_4$யம் ஸர்வபூ$_4$தேப்$_4$யோ த$_3$த$_3$ாம்யேதத்$_3$ வ்ரதம் மம ॥
*(வால்மீகி-யுத்த-18/33)*

*(எந்த மனிதன், 'நான் தங்களுடையவன்' என்று மனப்பூர்வமாகச் சிந்தித்து, முற்றிலுமாகத் தன்னை என்னிடம் அர்ப்பணிக் கிறானோ, தன்னையே என்னிடம் ஒப்படைத்து விடுகிறானோ, நல்விதயம் படைத்த அந்த பக்தனின் பிரார்த்தனையை ஏற்று, அவனை அனைத்துப் பிராணிகளிடமிருந்தும் அச்சமற்றவனாக ஆக்கி விடுகிறேன்! இது என்னுடைய நியமம்.)*

பகவானுக்குத் தான் எவ்வளவு உயர்வான தன்மை! அவர், பக்தனுடைய அன்பைத் தான் பார்க்கிறார்-குலம், இனம், செல்வம், கல்வி, அறிவு, ஆற்றல் முதலியவைகள் பக்கம் பார்ப்பதே இல்லை.

அடியாராகிய பிரகலாதன், பகவானைத் தோத்தரிக்கும் போது கூறுகிறார் -

மந்யே த$_4$நாபி$_4$ஜந ரூபதப: ஶ்ருதௌஜ-
ஸ்தேஜ: ப்ரப$_4$ாவ ப$_3$ல பௌருஷ பு$_3$த்தி$_4$யோகா$_3$: ।
நாராத$_4$நாய ஹி ப$_4$வந்தி பரஸ்ய பும்ஸோ
ப$_4$க்த்யா துதோஷ ப$_4$கவாந் க$_3$ஜயூத$_2$பாய ॥
(7-9-9)

*(பரமபுருஷனாகிய பகவானை சந்தோஷப்படுத்துவதற்கான சாமர்த்தியம், செல்வம்-குலம்-உருவம்-தவம்-கல்வி-ஆத்ம தேஜஸ்-பிரபாவம்-பலம்-ஆண்மை-அறிவு-யோகம் ஆகிய எவற் றுக்குமே இல்லை என்று எண்ணுகிறேன். ஆனால், பக்தியினால் மட்டுமே கஜேந்திரனிடம் பகவான் மகிழ்ச்சி அடைந்தார்.)*

ஏனெனில், பகவான் பக்தனுடைய வேறிடஞ் செல்லாத, உண்மையான பிரேமையையே நோக்குகிறார். வேறிடஞ்செல்லாத மனத்தையுடைய பக்தன், பகவானுக்கு எவ்வளவு பிரியமானவரோ, அவ்வளவு பிரியமானவர் வேறு எவரும் இலர்.

பகவான் கீதையில் சொல்கிறார் -

தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த ஏகப$_4$க்திர்விஶிஷ்யதே ।
ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்த$_2$மஹம் ஸ ச மம ப்ரிய: ॥
(7-17)

*(அவர்களுள், எப்போதும் என்னிலேயே ஒன்றியிருந்து அனன்யப்பிரேமையோடு பக்தி செலுத்தும் ஞானியான பக்தன்.*

*மிகவும் உயர்வானவன். ஏனென்றால், என்னை உள்ளபடி அறிகின்ற ஞானிக்கு நான் மிகவும் பிரியமானவன்; எனக்கும் அந்த ஞானி மிகவும் பிரியமானவன்.)*

பிருகஸ்பதி, இந்திரனிடம் கூறுகிறார் :

'அமரர்கோனே! கேளாய், நமக்கு அளிக்கப்பட்ட உபதேசத்தை. ஸ்ரீராமனுக்குத் தன் அடியார்மீது மிகவும் பிரியம்!' (மானஸம் : அயோ.)

பகவான் ஸ்ரீராமன் காகபுசுண்டி முனிவரிடம், தானே கூறுகிறார்-

'பறவையே, நான் உன்னிடம் உண்மையைக் கூறுகிறேன். வேறொன்றில் கருத்து இல்லாத, தூயவனான பக்தன் எனக்கு உயிரினும் இனியவன். இதனை உணர்ந்து எல்லா ஆசைகளையும் பொறுப்புகளையும் ஒதுக்கிவிட்டு என்னையே வழிபடு' (மானஸம்-உத்தர)

ஆகவே தான், நாம் எல்லோரும் மற்ற எல்லா ஆசாபாசங் களையும் ஒதுக்கிவிட்டு, பலனில் பற்றில்லாத உணர்வுடன் பகவானிடம் அனன்ய பக்தி செலுத்த வேண்டும்.

பகவானுடைய இயல்பின் தத்வ-ரகசியங்களை அறிந்த பரம பாகவதனாக பரதன் இருந்தார். அவருக்கு பகவானிடம் மிக மேலான பக்தி இருந்தது. ஸ்ரீதுளசீதாசர், பரதனுடைய உத்தம இயல்புகளை மிகவும் அழகாக விவரித்துள்ளார்; அதில், பகவானுடைய இயல்பும் காட்சி தருகிறது.

'நற்பண்பு, தவறு செய்வதில் கூச்சம், மிக நேர்மையான சுபாவம், கருணை, பேரன்பு ஆகியவற்றின் உறைவிடம்-ரகுநாதன். எந்தக் காலத்திலும் பகைவனுக்குக் கூட தீங்கு செய்ததில்லை, ஸ்ரீராமன். நான் குற்றமே செய்தாலும், நான் அவருக்குக் குழந்தை போன்றவன்; பணியாளன்' (மானஸம்-அயோத்யா.)

ஸ்ரீராமன் அவதாரம் செய்து உலகை ஒளிமயமாக்கினார்; வடிவழகு, நற்பண்பு, சுகம், நற்குணங்களின் கடல் அவர். நாட்டு மக்கள், குடும்பம், குரு, தாய்-தந்தையர் ஆகிய அனைவருக்கும் ஸ்ரீராமனுடைய இயல்பு இன்பம் அளிக்கும். எதிரிகள் கூட ஸ்ரீராமனைப் புகழ்வார்கள். அவர், தான் பேசும்

அழகு, பணிவு முதலியவற்றால் எல்லோர் மனத்தையும் கவர்ந்து விடுகிறார். கோடி கலைவாணி, நூறு கோடி ஆதி சேஷர்கள் சேர்ந்தாலும் கூட ஸ்ரீராமனுடைய நற்குணங்களை எழுதி மாளாது.

'ஸ்ரீராமசந்திரனுடைய சுபாவத்தை அறிந்துள்ள பரதன், மனம் கலங்காமல், மேலே மேலே அடியெடுத்து வைத்து நடந்தார்.

'அரசவையில் பரதன் பேசும்போது, நான் என் பிரபுவின் இயல்பை அறிவேன். தவறு செய்தாலும் அவர் சினங்கொள் ளவே மாட்டார். என்னிடம் தனிப்பட்ட அருளும், அன்பும் உண்டு. விளையாடும்போது கூட, அவர் முகம் சுளித்துப் பார்த்ததில்லை. குழந்தைப் பருவத்திலிருந்தே நான் அவரை விட்டுப் பிரிந்ததில்லை. நான் அவருடைய கருணையை அனுபவித்திருக்கிறேன். விளையாட்டில் நான் தோற்கும்படி யாக ஏற்பட்டாலும், என்னை ஜெயிக்க வைத்திருக்கிறார்.

'தாங்கள் பழகும் முறை, இனிய இயல்பு ஆகியவை வேத சாஸ்திரங்களால் பாடப்பட்டு உலகப்புகழ் அடைந் துள்ளன. கொடியவன், கோணல் புத்தியுள்ளவன், தீயவன், பெருங்கள்வன், தாழ்நிலையில் உள்ளவன், பண்பில்லாதவன் முதலியோர் கூட, தங்கள் திருவடிகளை அடைந்துவிட்டால், அவர்களையும் தன்னுடையவனாக்கிக் கொள்கிறீர்கள். அவர் களுடைய தோஷங்களை ஒருபோதும் பார்ப்பதில்லை; ஆனால், அடியார் திருக்கூட்டங்களில் அவர்களுடைய பெருமை களை வருணிக்கிறீர்கள். தன் பணியாளனிடம் இப்படி அருள் பாலிக்கும் வேறு எஜமானரே இல்லை. தாங்கள் அடியார் வேண்டுவன எல்லாம் சேர்த்துக் கொடுக்கிறீர்கள். பணியாள னின் அத்தனை கவலைகளையும் தாங்களே ஏற்றுக் கொள் கிறீர்கள். அதனால், அவன் கவலையற்றவனாகி விடுகிறான். தாங்கள் தான் கவலைகளை ஏற்றுக் கொண்டீர்கள் என்பதை கனவில் கூட அவன் அறியா வண்ணம் செயல்படுகிறீர்கள். நான் என்னுடைய இரு கைகளையும் உயரத் தூக்கி ஆணையிட்டுக் கூறுகிறேன்: தங்களைப் போன்ற எஜமானர், இவ்வுலகில் வேறு எவரும் இலர்!-என்று ஸ்ரீராமனைப் பார்த்துக் கூறுகிறான் (அயோத்யா காண்டம்).

பகவான் ஸ்ரீராமன், வனவாசத்தை முடித்துக் கொண்டு திரும்பி வருவதற்கு ஒரே ஒருநாள் மட்டும் மீதம் இருக்கும்போது, பகவானுடைய பிரிவை பொறுக்கமுடியாமல் மிகவும் கலக்கமடைந்து பகவானுடைய இனிய இயல்புகளை நினைத்துப் பார்த்து, பரதன் சொல்கிறான்-

'பிரபு ஸ்ரீராமசந்திரன் நான் செய்தவைகளை நினைத்துப் பார்ப்பவராக இருந்தால், கோடி கற்பகாலத்துக்கு எனக்கு மன்னிப்பே கிடைக்காது! ஆனால் அவர் அடியார் களின் குறைகளைக் காண்பவரல்லர்; ஏழை பங்காளர்; மிக மிருதுவான சுபாவம் கொண்டவர்.' (மானஸம் : உத்தர)

பரதன் சொல்வதன் கருத்து என்னவென்றால், பகவான், தீனர்களுக்கும் துயரத்தில் ஆழ்ந்திருப்பவர்களுக்கும் உறவினர்; அவருடைய இயல்பு மிகவும் மென்மையானது. அதனால், பக்தர்களின் தோஷங்களின் பக்கமே அவர் பார்வை செல்வதில்லை-என்பதுதான்.

ஆகவே, நம் போன்றோரும், தத்தம் இயல்பை பரதனைப் போன்றதாக ஆக்கிக் கொள்ள வேண்டும். பின்னர் நமக்கு மங்களங்கள் ஏற்படும் என்பதில் ஐயமே இல்லை; ஏனென்றால், 'பகவான் எல்லோருக்கும் நண்பன்'-இந்த தத்வ-ரகசியத்தை அறிந்து கொள்ளும் மனிதனும், எல்லாப் பிராணிகளுக்கும் நண்பனாகி, பகவானுடைய பரம பக்தனாக ஆகிவிடுகிறான்.

பகவான் கீதையில் சொல்கிறார் -

அத்$_3$வேஷ்டா ஸர்வபூ$_4$தாநாம் மைத்ர: கருண ஏவ ச।
நிர்மமோ நிரஹங்கார: ஸமது$_3$:க$_2$ஸுக$_2$: க்ஷமீ॥

ஸந்துஷ்ட: ஸததம் யோகீ$_3$ யதாத்மா த்$_3$ருட$_4$நிஶ்சய:।
மய்யர்பிதமநோபு$_3$த்$_3$தி$_4$ர்யோ மத்$_3$ப$_4$க்த: ஸ மே ப்ரிய:॥

*(12-13, 14)*

***(எல்லாப் பிராணிகளிடமும் வெறுப்பு இல்லாமல், எல்லோரிடமும் தன்னலம் இல்லாத பிரேமையும் காரணமில்லாத கருணையும் கொண்டு, மமகார-அகங்காரமில்லாத, சுக-துக்கங்களை சமமாகப் பாவித்து, குற்றமிழைத்தவர்களுக்கும்***

*அபயம் அளிக்கும் அளவுக்கு மன்னிக்கும் தன்மையும், எப்போதும் மனநிறைவும் உடைய யோகி மனம்-புலன்கள் கூடிய சரீரத்தைத் தன் வசத்தில் வைத்துக் கொண்டும், என்னையே உறுதியாகப் பற்றிக் கொண்டும் இருப்பவர்-தன் மனம்-புத்தியை எனக்கே அர்ப்பணித்துவிட்ட இப்படிப்பட்ட என் பக்தர் எனக்குப் பிரியமானவர்.)*

பகவானுடைய இயல்பின் தத்வ-ரகசியங்களை அறிந்து கொண்டுவிட்ட மனிதர், பகவானைச் சார்ந்தவராகி விடுகிறார்; மேலும், பகவான் அவருக்குத் தன் உண்மையான தத்துவத்தைத் தெரிவித்து விடுகிறார்.

ராமசரித மானஸத்தில் ஸ்ரீராமனைப் பார்த்து ஸ்ரீவால்மீகி முனிவர் கூறுகிறார்-'நீங்கள் யாருக்கு உங்களைப் பற்றி அறிய அறிவு கொடுக்கிறீர்களோ அவர் தான் தங்களை அறியமுடியும். அப்படி அறிந்தவுடன் அவர் தங்கள் ஸ்வரூபமாகவே ஆகிவிடுகிறார்'.

எவருக்குத் தன்னுடைய உண்மையான தத்துவத்தை உணர்த்த வேண்டும் என்று பகவான் விரும்புகிறாரோ, அவர்தான் பகவானுடைய தத்துவத்தை அறிந்து கொள்ள முடியும். எவருக்குப் பகவான் மட்டுமே ஒரு பெரும் பொருட்டாக இருக்கிறாரோ, எவர் தன்னுடைய மனம்-புத்தி-புலன்கள்-உயிர்-உடல் ஆகிய அனைத்தையும் பகவானுக்கே சமர்ப்பித்து விட்டாரோ, அவர் தான் பகவானை அறிந்து கொள்ளத் தகுதி பெற்றவராகிறார்; அவருக்கே தான் பகவான் தன்னுடைய உண்மையான வடிவத்தை அறியச் செய்கிறார்.

கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது -

மச்சித்தா மத்$_3$க$_3$தப்ராணா பே$_3$ாத$_4$யந்த: பரஸ்பரம் ।
கத$_2$யந்தஶ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச ॥
தேஷாம் ஸததயுக்தாநாம் ப$_4$ஜதாம் ப்ரீதிபூர்வகம் ।
த$_3$த$_3$ாமி பு$_3$த்$_3$தி$_4$யோக$_3$ம் தம் யேந மாமுபயாந்தி தே ॥
(10-9,10)

*(எப்போதும் என்னிடமே மனத்தைச் செலுத்தியுள்ள என்னிடமே பிராணனை அர்ப்பணித்துள்ள பக்தர்கள் என்னிடம் கொண்டுள்ள பக்தியைப் பற்றி வாத விவாதம் செய்வதன் மூலம் தங்களுக்குள்*

*என்னுடைய பிரபாவத்தை உணர்த்திக் கொண்டும் என்னுடைய குணம்-பிரபாவத்தோடு கூடிய என் கதைகளைப் பேசிக் கொண்டும் எப்போதும் மனநிறைவுடன் இருக்கிறார்கள்; வாசுதேவனான என்னிடமே எப்போதும் திளைக்கிறார்கள். இப்படிப்பட்ட என் தியானம் முதலியவற்றிலேயே எப்போதும் ஈடுபட்டு, பிரேமையோடு வழிபாடு செய்யும் பக்தர்களுக்கு நான், தத்வஞானரூபமான யோகத்தை அளிக்கிறேன்; அதன் மூலம் அவர்கள் என்னையே அடைந்துவிடுகிறார்கள்.)*

பகவானுக்கு நிகரான பேராற்றலும் நற்பண்புகளும் உடையவர் உலகில் எவருமே இலர். அவர் எதிரில், இந்த ஜீவன் மிக அற்பமானது. இதற்கு மேலாக மனிதன் பகவானை எந்த உணர்ச்சியுடன் எந்த முறையில் வழிபடுகிறானோ, பகவான் அவனை அதே உணர்வு, அதே முறையில் அணுகுகிறார்.

யே யத$_2$ா மாம் ப்ரபத்$_3$யந்தே தாம்ஸ்ததை$_2$வ ப$_4$ஜாம்யஹம் ।
*(கீதை 4-11)*

அதாவது, வாத்ஸல்யம்-தாஸ்யம்-ஸக்யம்-மாதுர்யம் முதலியவற்றில் எந்த உணர்வுடன் பகவானை அணுகு கிறானோ, அவனை அதேமுறையில் பகவான் அணுகுகிறார். இது எப்படி நிறைவேறும்? ருக்மிணி முதலிய பட்டத்தரசிகள் ஸ்ரீகிருஷ்ணனிடம் காந்தாபாவத்தோடு இணைந்த மாதுர்ய பாவத்தோடு பிரேமை செலுத்தியதால், அவர்களுடைய கண வராக ஆகி அவர்களுடைய விருப்பத்தைப் பகவான் நிறை வேற்றி வைத்தார். கோபிகைகள், பகவானை ஸக்யபாவத் தோடு கூடிய பரகீய மாதுர்யபாவத்தோடு பிரேமை செலுத்தினார்கள். அவர்களிடம் பகவான் ஸக்யபாவத்தோடு (தோழமை உணர்வோடு) கூடிய பிரேமைக்குரிய பொருளாக இருந்து வந்தார். நந்தர்-யசோதை, வசுதேவர்-தேவகி முதலி யோர், வாத்சல்யபாவத்தோடு (குழந்தை என்ற உணர்வுடன்) அன்பு செலுத்தியதால் அவர்களுக்கு மைந்தனாக இருந்தார். அக்ரூரர் முதலிய பக்தர்கள் தாஸ்யபாவத்துடன் (பணியாளன் அல்லது அடிமை என்ற உணர்வுடன்) பக்தி செலுத்தியதால், அவர்களுக்குத் தலைவர் என்ற நிலையில் பகவான் இருந்து வந்தார். ஸ்ரீதாமா முதலிய இடைச்சிறுவர்கள் ஸக்யபாவத்

துடன் (நட்புணர்வுடன்) அன்பு செலுத்தியதால், அவர் களுடன் நண்பனாகப் பழகினார். அர்ஜுனன் போன்றோர் தாஸ்யம் மற்றும் ஸக்யம் என்ற இரு வழிகளிலும் அன்பு செலுத்தியதால், பகவான் அவர்களுக்குத் தலைவராகவும் நண்பராகவும் திகழ்ந்தார்.

இவ்விதம், எவர் எந்தவிதமாக பகவானை அணுகுகிறா ரோ, பகவானும் அவரை அதேமுறையில் அணுகுகிறார். அம்புப் படுக்கையில் படுத்திருந்த ஸ்ரீபீஷ்மர், பகவான் ஸ்ரீகிருஷ்ணனை நினைத்த போதில், பகவான் ஸ்ரீகிருஷ்ண னுக்கும், பீஷ்மரைப் பற்றிய நினைவு வந்தது. யுதிஷ்டிரரிடம், 'மன்னா! அம்புப்படுக்கையில் ஆண்சிங்கம் போல் படுத் திருக்கும் பீஷ்மர்-மெல்ல அணைந்து கொண்டிருக்கும் அக்னி போன்றுள்ள, அவர்-என்னை இப்போது தியானம் செய்து கொண்டிருக்கிறார்; அதனால், என் மனமும் அவர்பால் சென்றுவிட்டது' என்று பகவான் தானே சொல்வதாக. மகாபாரதம் சாந்திபர்வத்தில் வருகிறது.

இது மட்டுமில்லாமல், பிரேமையோடு பகவானை வழிபடும் அடியார்களை அவர் தன் இதயத்தில் இடம் கொடுத்து ஏற்றுக் கொள்கிறார்; பகவான் அவர்கள் இதயத்தில் இடம் பிடித்துக் கொள்கிறார்.

பகவான், கீதையில் சொல்லியிருக்கிறார் -

ஸமோऽஹம் ஸர்வபூ4தேஷு ந மே த்3வேஷ்யோऽஸ்தி ந ப்ரிய:।
யே ப4ஜந்தி து மாம் ப4க்த்யா மயி தே தேஷு சாப்யஹம்॥
(9-29)

*(நான் எல்லாப் பிராணிகளிடமும் சமநோக்குடன் இருக்கிறேன்; எனக்கு வேண்டாதார்-வேண்டியவர் என்று யாருமில்லை. ஆனால், என்னை பக்தியுடன் அணுகுகிறவர்கள், என்னிடம் இருக்கிறார்கள்; நானும் அவர்களுக்குப் புலப்படுகிறேன்.)*

இதே மாதிரியான கருத்து பாகவதத்திலும் காணப்படுகிறது.

ந தஸ்ய கஶ்சித்3 த3யித: ஸுஹ்ருத்தமோ ந சாப்ரியோ த்3வேஷ்ய உபேக்ஷ்ய ஏவ வா।
தத2ாபி ப4க்தாந் ப4ஜதே யத2ா தத2ா ஸுரத்ருமோ யத்3வது3பாஶ்ரிதோऽர்த்த2த3:॥
(10-38-22)

*(பகவானுக்குப் பிரியமானவர், பிரியம் இல்லாதவர் என்று எவரும் கிடையாது; அவருக்கு நெருங்கிய நண்பர் அல்லது விரோதி என்று எவரும் கிடையாது; அவரால் வெறுக்கத்தக்கவர் யாருமிலர். என்றாலும், கல்பதருவின் அருகே சென்று பிரார்த்திப்பவர்களுக்கு, அவர்கள் விரும்பிக் கேட்கும் பொருளை அது கொடுப்பதைப் போல, பகவான் ஸ்ரீகிருஷ்ணனும் யார் அவரை எந்த முறையில் அணுகுகிறார்களோ, அவர் அதேமுறையில் அவர்களை அணுகுகிறார். அவர் தன்னிடம் ஆழ்ந்த பக்தி செலுத்துபவர்களிடம் தனிப்பட்ட அன்பு பாராட்டுகிறார்.)*

ஸ்ரீதுளசீதாஸர் கூறுகிறார் -

'கருணையின் உறைவிடமான ஸ்ரீராமன், (அயோத்தி) மக்கள் அனைவரும் மனம் நொந்து தவித்து வந்திருக்கிறார்கள் என்பதை அறிந்து கொண்டார். எவரெவர் எந்தெந்த உறவோடு அணுகினாரோ, அவரவர்க்கு ஏற்றவாறு, அவரவருடைய கருத்துக்கேற்ப, லட்சுமணனுடன் கூடச் சேர்ந்து சந்தித்து அவரவர் துயரத்தையும் மன உளைச்சலையும் போக்கினார்.'

ராமசரித மானஸத்தில் பரதன் கூறுகிறார்-(சித்ரகூடத்தில் ராமனைச் சந்தித்து, அயோத்திக்கு வரும்படி கேட்டுக் கொண்ட நிகழ்ச்சியின் தொடர்ச்சியாக) 'சரணாகதி அடைந்தவனைக் காப்பாற்றும் இந்தத் தன்மை தங்களுக்குப் புதியதல்ல; வேதங்கள் புகழ்கின்றன; மக்கள் போற்றுகிறார்கள்! இதில் ஒளிவு-மறைவு ஏதுமில்லை. இனி, உலகம் முழுவதும் எனக்குக் கேடு நினைத்தாலும் நினைத்துவிட்டுப் போகட்டும். தேவரே! தாங்கள் என் பக்கமாகி விட்டீர்கள்! பிறகு, வேறு எவருடைய நல்லெண்ணத்தைச் சம்பாதித்து, நான் நன்மை அடைய வேண்டும்? கற்பகமரம் போன்று-நண்பர், நட்பிலார் என்ற வேற்றுமை இல்லாமல்-விளங்குபவர், தாங்கள். அந்த மரத்தை அடையாளம் கண்டு கொண்டு, அருகே சென்று வேண்டிக் கொள்பவர் யாராக இருந்தாலும், அது உடனே கொடுத்து விடும்!...'

பகவானுக்குத் தான் எவ்வளவு உயர்ந்த இயல்பு என்பதை நினைவில் கொள்ள வேண்டும். அவரைப் போன்ற பரம தயாளு யாருமே இல்லை.

காகபுசுண்டி, ராமசரித மானஸத்தில் கூறுகிறார் -

'பிரபு ரகுபதியை விட்டு, நான் வேறு யாரை சேவிப்பேன்? என்னைப் போன்ற அஞ்ஞானியிடம் கூட பரிவு காட்டுபவராயிற்றே?.....

'சிவபெருமானும் பிரும்மாவும் ஸ்ரீராமனுடைய திருவடிகளைப் பூஜிக்கிறார்கள்! அந்த ஸ்ரீராமன் எனக்குக் கருணை காட்டுகிறார்-என்பது எவ்வளவு மகிழ்ச்சிக்குரியது! வேறு எவரிடமும் இந்த மேலான பண்பாட்டைக் கண்டதுமில்லை; கேள்விப்பட்டதுமில்லை!.... ஆகவே, ராமனுக்கு நிகராக யாரைச் சொல்லுவேன்!...'

உத்தவர் சொல்கிறார் -

அஹோ ப$_3$கீ யம் ஸ்தந காலகூடம் ஜிக$_4$ாம்ஸயாபாயயத$_3$ப்யஸாத்$_4$வீ ।
லேபே$_4$ க$_3$திம் த$_4$ாத்ர்யுசிதாம் ததோऽந்யம் கம் வா த$_3$யாளும் ஶரணம் வ்ரஜேம ॥
*(பாகவதம்: 3-2-23)*

*('பாவியான பூதனை, தன்னுடைய நகில்களில் ஆலகால விஷத்தை வைத்துக் கொண்டு, ஸ்ரீகிருஷ்ணனைக் கொல்லவேண்டும் என்ற தீர்மானத்துடனேயே, அவருக்குப் பாலூட்டினாள்; குழந்தைக் கண்ணனைக் கவனிக்கும் பொறுப்புள்ள ஒரு தாதிக்குக் கிடைக்க வேண்டிய பரமபதத்தை பூதனைக்கும் பகவான் கொடுத்தார்! அப்படிப்பட்ட ஸ்ரீகிருஷ்ணனைத் தவிர, இவ்வளவு பெரிய தயாளு வேறொருவர் இருந்தால் தானே, அவரைப் போய் சரண் அடைய முடியும்?)*

பரம தயாளுவான பகவானுடைய இயல்பின் தத்வ-ரகசியத்தை அறிந்து கொண்டு விட்டவனுக்கு, பகவானைத் தவிர வேறெதுவும் நல்லதாகப் படாது. ஆகவே, அவன் பகவானைத் துறந்துவிட்டு, அழியக்கூடிய, நொடிநேரம் இருக்கக்கூடிய, துயரவடிவமான செல்வம், செழுமை, மகளிர், மகன் முதலியவற்றில் எவ்வாறு நாட்டம் கொள்வான்?

சிவபெருமான் கூறுகிறார் -

'பார்வதி! எவருக்கு ராமனின் இயல்பு தெரியுமோ, அவருக்கு ராமபஜனை தவிர வேறு ஒன்றும் பிடிக்காது.' (ரா. ச. மா.-சுந்தர.)

'பின்னர், அவன் பகவானை ஒருபோதும் மறப்பதில்லை; பகவானும் அவனை ஒருபோதும் மறப்பதில்லை.'

கீதையில் -

யோ மாம் பஶ்யதி ஸர்வத்ர ஸர்வம் ச மயி பஶ்யதி।
தஸ்யாஹம் ந ப்ரணஶ்யாமி ஸ ச மே ந ப்ரணஶ்யதி॥
*(6-30)*

என்கிறார், பகவான்.

***(எல்லாப் பிராணிகளிலும் ஆன்மாவாக, வாசுதேவனான நானே வியாபித்திருப்பதையும், அதேபோல வாசுதேவனான என்னிடம் அனைத்துப் பிராணிகளும் உள்ளுறைவதாகவும் பார்ப்பவனுக்கு, நான் கண்ணில் படாமல் போகமாட்டேன்; அவனும் என் பார்வை படாமல் போகமாட்டான்.)***

பகவான் மிகவும் கோமளமான, மிருதுவான, எளிமையான, இனிமையான, மனங்கவர் இயல்புடையவர் என்பது தான் சாரமான விஷயம். உண்மையில், அவருக்கு நிகர் அவரே தான். அவருக்கு நிகரான, காரணமில்லாமலே கருணை காட்டுபவர், தன்னலமில்லாமல் பிரேமை செலுத்துபவர், நட்பு பாராட்டுபவர், அண்டியவனுக்கு அடைக்கலம் அளிப்பவர், ஏழை பங்காளர், பாவியையும் தூய்மைப்படுத்துபவர் வேறு எவரும் இலர்.

ஆகவே, நாம் எல்லோரும் பகவானுடைய கருணை, பிரேமை நிறைந்த இனிய சுபாவத்தை உணர்ந்து, அதனை எப்போதும் நினைவில் கொண்டு, பகவானுடைய பேரன்பில் மகிழ்ந்து திளைக்க வேண்டும். அதனால், அதிகப் பிரயாசை இல்லாமலும் வெகு விரைவிலும் பகவானை அடைய முடியும்.



# 7. பகவானை அண்டி நின்றால் எப்போதும் நன்மை

இவ்வுலகத்திலும் மேலுலகத்திலும் அனுபவிக்கத்தக்க சகல துன்பங்களும் அழிந்து, இவ்வுலகத்திலும் மேலுலகத்திலும் நன்மை அடைவதற்கான மிக உயர்ந்த வழி பகவானை அண்டி, மெய்யான மனத்துடன் நாம சங்கீர்த்தனம் செய்வது தான். அதே போல், இவ்வுலகத்திலும் மேலுலகத்திலும் அனுபவிக்கத்தக்க சகல சௌக்கியங்களும் அழிந்து, இவ்வுலகத்திலும் மேலுலகத்திலும் சுகங்களும் அழிந்து போவதற்கான வழி - புலனுகர் இன்பங்களில் முழுமையாக ஈடுபட்டு, பகவானை மறந்து போவது தான்! இன்றைய தினம் நாம் பகவானை மறந்து, புலனின்பங்களில் சரணடைந்திருக்கிறோம். அதனால் தான், இவ்வளவு மலை போன்ற துன்பங்கள்-மனக் கொதிப்பு-நாசம் ஆகியன நம்மேல் தொடர்ந்து தாக்கிக் கொண்டிருக்கின்றன. முயற்சியுடையவர் களாக இருப்பவர்களும், பற்பல தொழிலில் சாமர்த்தியம் உடையவர்களாக இருப்பவர்களும், பகவானின் திருப்திக்காக, காலத்திற்குத் தக்கபடியும், சுதர்மத்துக்கு ஏற்ற வகையிலும் பணிகள் செய்வதன்மூலம் பகவானைப் பூஜிக்க வேண்டும்; குறைந்த திறமை அல்லது திறமை இல்லாதவர்கள், மிகவும் துன்பப்படும் குரலிலும் இரங்கத்தக்க நிலையிலும், நன்னெறி வளர்ச்சிக்காகவும் உலக அமைதிக்காகவும் ஒருநிலைப்பட்ட மனத்துடன், பகவானை அழைக்க வேண்டும்.

மனங்கசிந்து நாம் வேண்டிக் கொள்வது ஒருபொழுதும் வீணாகப் போனதில்லை. திரௌபதிக்கு இருந்த நம்பிக்கை, கஜேந்திரனிடம் இருந்த உறுதி, இதற்கும் மேலாக பிரஹ்லாதனிடம் இருந்த பக்தியும் நிஷ்காமமும் நம்மிடம் இருக்க வேண்டும். அவருடைய சொற்களை உண்மைப் படுத்துவதற்காக, ஒரு தூணிலிருந்து நரசிம்மமாக வெளிப் பட்டாரே, பகவான்! - ஸத்யம் வித$_4$ாதும் நிஜப்$_4$ருத்யப$_4$ாஷிதம் । (பாகவதம்-7-8-18)

விபத்து, கஷ்டம், பொறுக்க முடியாத நிலை, அமங்களம், அநீதி முதலியன நம் எதிரில் நின்று

கொண்டேயிருக்கும் - நம்பிக்கையோடு பகவானை நாம் அழைக்காத வரையில்!

ஒரு பெரியவர், இந்த நிகழ்ச்சியைச் சொன்னார்.

ஒரு வீட்டில் குண்டர்கள் புகுந்து குடும்பத் தலைவனைக் கட்டிப் போட்டார்கள்; இரண்டு குண்டர்கள், குடும்பத் தலைவியின் ஆடையை அவிழ்த்து அவளை பலாத்காரம் செய்யத் தயாராகி விட்டார்கள். கணவன்-மனைவி இருவருக்கும் வழி ஏதும் தெரியவில்லை; உதவுவார் இல்லை. மனைவி மிகவும் துயரத்துடன், அழுது கொண்டு பகவானை அழைத்தார். அவளுக்கு திரௌபதியின் நினைவு வந்தது, அவ்வளவு தான்! அந்த நேரத்தில், அவளைப் பிடித்துக் கொண்டிருந்த இரண்டு குண்டர்களும் பரஸ்பரம் சண்டை போட ஆரம்பித்தார்கள். ஒருவன் மற்றவனைக் கத்தியால் வெட்டிப் போட்டான். அவன் கீழே விழுந்ததும் மற்ற குண்டர்கள் எல்லோரும், கணவன்-மனைவியை விட்டு விட்டு ஓடியே போய்விட்டார்கள். இதனிடையில், மனைவியைத் தோளில் தூக்கிக் கொண்டு, வெளியே தப்பிச் செல்வதற்கு வாய்ப்புக் கிடைத்தது, கணவனுக்கு.

பாரதத்திலுள்ள கற்பு மங்கையர், இன்றைக்கு, திரௌபதியைப் போல பகவானை அழைப்பார்களேயானால், பகவான் எங்கே தான் வரமாட்டார்? அவர் உடனே, ஏதோ ஒரு வடிவத்தில் தோன்றி கற்புமகளிரின் எல்லாத் துன்பங்களையும் களைந்துவிடுவார்; அந்த விநாடியே, அவர்களுக்குத் துன்பம் விளைவிக்க எண்ணியவர்களின் அழிவுகாலம் தொடங்கிவிடுகிறது.

தீயவனான துச்சாசனனின் கையில் கட்டுண்டிருந்த, உதவுவார் யாருமில்லாத திரௌபதி, மிகவும் நொந்து, மனத்துக்குள் பகவான் ஸ்ரீகிருஷ்ணனை நினைத்துக் கொண்டு கதறினாள் -

கே$_{3}$ாவிந்த த்$_{3}$வாரகாவாஸிந் க்ருஷ்ண கே$_{3}$ாபீஜநப்ரிய।
கௌரவை: பரிபூ$_{4}$தாம் மாம் கிம் ந ஜாநாஸி கேஶவ॥

ஹே நாத$_{2}$ ஹே ரமாநாத$_{2}$ வ்ரஜநாத$_{3}$ார்திநாஶந।
கௌரவார்ணவமக்$_{3}$நாம் மாமுத்$_{3}$த$_{4}$ரஸ்வ ஜநார்த$_{3}$ந॥

க்ருஷ்ண க்ருஷ்ண மஹாயோகி₃ந் விஶ்வாத்மந் விஶ்வப₄ாவந ।
ப்ரபந்நாம் பாஹி கே₃ாவிந்த குருமத்₄யேऽவஸீத₃தீம் ॥
*(ஸபாபர்வம்-68/41-43)*

***('ஹே கோவிந்தா! துவாரகாவாஸீ! சச்சிதானந்தா! பிரேமையின் வடிவே! கோபீஜனவல்லபா! சர்வ சக்தி படைத்த பிரபுவே! கௌரவர்கள் என்னை அவமானப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். உங்களுக்கு இது தெரியாதா? ஹே ரமாநாதா! துன்பங்களைப் போக்குகிறவரே! நான் கௌரவக் கடலில் மூழ்கிக் கொண்டிருக்கிறேன். தாங்கள் என்னைக் கைதூக்கி விடுங்கள். ஹே க்ருஷ்ணா! ஹே மகாயோகி! ஹே விசுவாத்மா! உலகத்துக்கு உயிரளிக்கும் கோவிந்தா! நான், கௌரவர்களால் சூழப்பட்டு ஆபத்தில் இருக்கிறேன். தங்களைச் சரணடைகிறேன். என்னைக் காப்பாற்றுங்கள்...')***

திரௌபதியின் துன்பக் குரலைக் கேட்டதுமே, பக்தவத்சலரான பிரபு, துவாரகையிலிருந்து ஓடி வந்தார்; திரௌபதிக்கு சேலை சேலையாக அளித்து அவளுடைய மானத்தைக் காப்பாற்றினார். ஆனால், கொடிய துச்சாதனனால் பிடித்து இழுக்கப்பட்ட திரௌபதியின் கூந்தல், அவனுக்குத் தகுந்த தண்டனை கிடைக்கும் நாள் வரை, அவிழ்க்கப்பட்ட நிலையிலேயே இருந்தது. திரௌபதி, முடியப்படாத கூந்தலோடு தான் இருந்தாள். பாண்டவர்களோடு அவள் காட்டில் வசித்தாள். அப்போது, பாண்டவர்களைக் காண பதற்காக ஸ்ரீகிருஷ்ணன் அங்கே வந்தார். பகவான் தனித்திருக்கும்போது திரௌபதி அழுதுகொண்டே கூறினாள்: 'நான் பாண்டவர்களின் பத்தினி; திருஷ்டத்துய்மனின் சகோதரி, உன்னுடைய தோழி- அப்படியிருந்தும் கௌரவர்கள் சபையில் தறதறவென்று இழுத்துச் செல்லப்பட்டேன்! இது, எவ்வளவு வருந்தத்தக்க விஷயம்! பீமனும் அர்ஜுனனும் பெரிய வீரர்களாக இருந்தும் என்னைக் காப்பாற்ற முடியவில்லை. இவர்கள் ஆண்மை-ஆற்றலைக் குப்பைத் தொட்டியிலே போடுங்கள்! இவர்கள் உயிருடன் இருக்கும் போது, துரியோதனன் ஒரு விநாடி நேரம் கூட உயிரோடு இருக்கலாமா? கொடிய துச்சாதனன் என் தலைமயிரைப் பிடித்து சபைக்குள் இழுத்து வந்தபோது, பாண்டவர்கள், கண் இமையாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள் ...'

இவ்வாறு கூறி முடித்துவிட்டு, திரௌபதி அழத் தொடங்கினாள். அவள் நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டு, நாத் தழதழக்க, ஆவேசக் குரலில் சொன்னாள் : ஸ்ரீகிருஷ்ணா! இந்தக் கணவர்-புதல்வர், தந்தை-சகோதரன் இவர்கள் யாரும் என்னுடையவர்கள் அல்லர்; ஆனால், கிருஷ்ணா, நீயுமா?... நீ எங்கள் உறவு; நான் அக்னிகுண்டத்தில் தோன்றிய பெண்; உன்னிடம் எனக்குப் புனிதமான பிரேமை இருக்கிறது; உன்மேல் எனக்கு அதிகாரம் இருக்கிறது; அத்துடன், என்னைக் காப்பாற்றும் ஆற்றலும் உன்னிடம் இருக்கிறது. ஆக, நீ என்னைக் காப்பாற்றியே தீரவேண்டும்'.

கண்ணீர் வடித்துக் கொண்டிருந்த திரௌபதிக்கு ஆறுதல் கூறிய கிருஷ்ணன் அப்போது சொன்னார் -

ஸத்யம் தே ப்ரதிஜாநாமி ராக்ஞாம் ராக்ஞீ ப₄விஷ்யஸி।
பதேத்₃ த்₃யௌர்ஹிமவாந் ஶீர்யேத் ப்ருதி₂வீ ஶகலீப₄வேத்॥
ஶுஷ்யேத்தோயநிதி₄: க்ருஷ்ணே ந மே மோக₄ம் வசோ ப₄வேத்।
*(வனபர்வம்-12/230-231)*

*('மங்களமானவளே! நீ யாராரிடம் கோபம் கொண்டிருக் கிறாயோ, அவர்களுடைய மனைவிகள், இன்னும் சில நாட்களிலேயே, அர்ஜுனனுடைய பயங்கரமான அம்புகளால் தாக்கப்பட்டு இரத்தக்களரியான பூமியில் விழுந்து புரளும் தம் கணவன்மார்களைப் பார்த்து, இப்போது நீ அழுவதைப் போல, அழத் தொடங்குவார்கள். நான், பாண்டவர்களுக்கு அனுகூலமான செயல்களையே செய்வேன். நீ வருந்தாதே. நீ சக்ரவர்த்தினியாக ஆவாய் என்று பிரதிக்ஞை செய்கிறேன். வானம் இடிந்து விழுந்தாலும், இமயமலை துகள் துகளாகப் போனாலும் மண்ணுலகம் பொடிப் பொடியாகப் போனாலும், சமுத்திரம் வற்றிப் போனாலும் போகலாம்; ஆனால், திரௌபதி, என் வார்த்தைகள் ஒருபொழுதும் பொய்யாக மாட்டா...')*

திரௌபதியின் துக்கத்தைக் களைந்த பகவான், இன்று எங்கேயும் ஓடிப் போய் ஒளிந்து கொண்டு விடவில்லை. ஆனால், திரௌபதியைப் போல ஆழ்ந்த நம்பிக்கையோடு பகவானை அழைப்பவர்கள் இல்லாமற் போய் விட்டார்கள். துயரக் கடலிலிருந்து எளிதாகக் கரையேற வேண்டுமானால்,

நம்பிக்கையுடனும் நிலைப்பட்ட மனத்துடனும் பகவானைக் கூவி அழைக்க வேண்டும். பாரதத்தில் ஹிந்துக்களின் இந்த நம்பிக்கை எப்பொழுது குறையத் தொடங்கியதோ, அந்த நாளிலிருந்து பிரார்த்தனைக் குரல் மங்கத் தொடங்கியது; அப்போதிலிருந்து அவர்களுக்குத் துன்பங்கள் வரத் தொடங்கின; அப்போதிலிருந்து அவர்கள் அறவழியிலிருந்தும் சுகம் தரும் நற்பாதையிலிருந்தும் விலகிப் போய் விட்டார்கள். இப்போது, சிரத்தை-நம்பிக்கையுடன் பகவானை அழையுங்கள். உங்களுடைய வாழ்க்கைத் துன்பங்கள் வெகு தூரம் போய் விடுகின்றனவா, இல்லையா? - என்று பாருங்கள். உங்களுக்குப் பகவானுடைய அபரிமிதமான பேரருளினால், அடைதற்கரிய பகவானுடைய சரணாரவிந்தம் எளிதாகவே கிடைத்து விடுகின்றனவா, இல்லையா?-என்பதையும் பாருங்கள்.



## 8. பகவானை ஒருபோதும் மறக்க வேண்டாம்

பகவானை ஒரு விநாடிக் காலம் கூட மறக்காமல் இருப்பது தான், மனிதனின் மிகச் சிறந்த கடமை. 'நான் ஒரு விநாடி கூட பகவானை மறக்க மாட்டேன்' என்று சபதம் எடுத்துக் கொண்டு கடைப்பிடிப்பவன் இந்தப் பிறவியிலேயே பகவானை அடைந்துவிடுவான் என்பதில் சிறிதளவு சந்தேகத்துக்குக் கூட இடமே இல்லை. பகவான், கீதையில்,

அநந்யசேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ:।
தஸ்யாஹம் ஸுலப$_4$: பார்த$_2$ நித்யயுக்தஸ்ய யோகி$_3$ந:॥
*(8-14)*

*('அர்ஜுனா! வேறெங்கும் செல்லாத மனத்துடன், நித்திய நிரந்தரமாக, புருஷோத்தமனான என்னையே சிந்தித்துக் கொண்டு, என்னிடமே லயித்திருக்கும் யோகிக்கு நான் எளியவன்; அதாவது, அவனால் எளிதாக அடையப்படக் கூடியவன்'.)*

பகவானுடைய இந்தப் பிரகடனத்தின்மேல் நம்பிக்கை வைத்து, 'இந்த விநாடியிலிருந்து இறுதிமூச்சுவரை, நான்

மனம் ஒப்பி, பகவானை மறக்க மாட்டேன்' என்று நிச்சயம் செய்து கொள்ள வேண்டும். இவ்விதம் செய்து கொண்ட சபதம், உண்மையாக இருக்கும்பட்சத்தில் பகவான் அதற்கு ஆதரவு அளிக்கிறார்; இறுதியில், அந்த பக்தனின் விருப்பத்தைப் பூர்த்தி செய்து வைக்கிறார். எப்போதாவது கொஞ்சம் மறந்து போனாலும், பகவான் அதை மன்னித்து விடுகிறார். சிலர், 'ஒரு நாளில் பதினெட்டு மணி நேரம் பகவானை ஸ்மரித்துக் கொண்டிருக்கலாம்; ஆனால், தூங்குகிற ஆறு மணி நேரம் அவன் வசமில்லை' என்று சொல்லலாம், இதற்குப் பதில் கூறுவது போல, ஓர் அறிவியல் உண்மை இருக்கிறது. விழித்திருக்கும்போது மனிதன் எந்தக் காரியத்தைச் செய்து வருகிறானோ, அநேகமாக, கனவு நிலையிலும், அவனுடைய மனம் அதே எண்ணத்தில் தான் மூழ்கியிருக்கும். இதிலிருந்து நமக்குத் தெரிய வருவது என்னவென்றால், விழிப்பு நிலையில் பகவானை சிந்தித்துக் கொண்டிருப்பவர்களுக்கு, கனவு நிலையிலும் பகவானின் நினைவு இருந்து கொண்டிருக்கும்-என்பது தான். இது மட்டுமல்ல; ஒருவர் தூங்குவதற்குச் சிறிது நேரம் முன்பாகப் பகவானை நினைத்துக் கொண்டு அப்படியே தூங்கிவிட்டால் அவருக்கு, அநேகமாக, பகவான் சம்பந்தப்பட்ட விஷயங் களே சொப்பனத்தில் வருகின்றன. அதனால், உறங்குவதற்கு முன் உணர்வு (நினைவு) இருக்கும்போது பகவந்நாம ஸ்மர ணையை விடாமலிருக்க முயல வேண்டும். மனம் தெரிந்தே, பகவானை ஒரு நொடிப் பொழுது கூட மறந்து விடக் கூடாது. ஏனென்றால், பகவானை மறந்திருந்த அந்த விநாடியில் மனம், விலங்கு-பறவை, புழு-பூச்சி, மனிதன், தேவதை முதலிய சிந்தனைகளில் ஈடுபட்டிருந்தால்-துரதிருஷ்ட வசமாக, அந்த எண்ணத்தில் இருக்கும்போதே உயிர் போய் விடுமானால், அடுத்த பிறவி, நமது எண்ணத்துக்கு ஏற்ப விலங்கு-பறவை முதலிய இனத்தில் தான் ஏற்படும்.

கீதை எட்டாம் அத்யாயத்தில் ஆறாம் சுலோகத்தில் பகவான் சொல்கிறார் -

யம் யம் வாபி ஸ்மரந்ப$_4$ாவம் த்யஜத்யந்தே கலேவரம்।
தம் தமேவைதி கௌந்தேய ஸதா$_3$ தத்$_3$ப$_4$ாவப$_4$ாவித:॥

*('குந்தியின் மைந்தனே! மனிதன், இறுதிக் காலத்தில் எந்தெந்த இயல்புகளை சிந்தித்துக் கொண்டு சரீரத்தைத் தியாகம் செய்கிறானோ, அவன், அடுத்த பிறவியில், அந்தந்த இயல்புகளுடன் கூடிய உடலையே பெறுகிறான். ஏனென்றால், அவன் எப்போதும் அந்த இயல்பிலேயே திளைத்திருக்கிறான்'.)*

இது, மனித வாழ்க்கைக்கு எவ்வளவு பெரிய கேடு பாருங்கள். மனித வாழ்க்கை கிடைப்பதே மிக மிக அரிது என்பதை எண்ணிப் பார்க்குங்கால், இந்தக் கேட்டின் பயங்கரத்தை ஒருவாறு அனுமானித்துக் கொள்ளலாம். எண்பத்து நான்கு லட்சம் யோனிகளில் அலைந்து திரிந்து அலுப்படைந்து ஜீவன் தவிக்கும்போது பகவான் விசேஷமான அருள் புரிந்து, அதற்கு மனித உடலைக் கொடுக்கிறார். கிடைத்தற்கரிய இம்மானுட வாழ்க்கை வீணாகப் போய்விடக் கூடாது என்பதற்காகப் பகவான் வழி சொல்லிக் கொடுத்திருக்கிறார்.

தஸ்மாத்ஸர்வேஷு காலேஷு மாமநுஸ்மர யுத்$_4$ய ச।
மய்யர்ப்பிதமநோ பு$_3$த்$_3$தி$_4$ர் மா மேவைஷ்யஸ்யஸம்ஶயம்॥
(கீதை-8/7)

*('ஆகவே, அர்ஜுனா! நீ எப்போதும் என்னையே நினைத்துக் கொண்டிரு; யுத்தமும் செய். இவ்விதம் மனம்-புத்திகளை என்னிடம் அர்ப்பணம் செய்துவிட்ட நீ சந்தேகமில்லாமல் என்னையே அடைவாய்.')*

பகவான், பகவத் ஸ்மரணையை முக்கியமானதாகக் குறிப்பிட்டு, யுத்தம் செய்வதை இரண்டாம் பட்சமாகக் கூறுகிறார். இதிலிருந்து, ஒரு விநாடி கூட பகவானை மறக்கக் கூடாது என்பதும்; அப்படி இல்லாவிட்டால், மனித வாழ்க்கை பயனற்றது என்பதும் தெளிவாகத் தெரிகிறது.

பகவானிடம் தன் மனத்தை ஊன்றி நிலைநிறுத்துபவர், நிச்சயமாகப் பகவானை அடைந்து விடுவார்.

தேஷாம் ஸததயுக்தாநாம் ப$_4$ஜதாம் ப்ரீதிபூர்வகம்।
த$_3$தா$_3$மி பு$_3$த்$_3$தி$_4$யோக$_3$ம் தம் யேந மாமுபயாந்தி தே॥
(கீதை-10/10)

*('எப்போதும் என்மீதான தியானம் முதலியவற்றிலேயே ஈடுபட்டு, உள்ளன்போடு வழிபாடு செய்யும் பக்தர்களுக்கு, தத்வக்ஞான வடிவான யோகத்தைக் கொடுக்கிறேன்; அதன் மூலமாக அவர்கள் என்னையே அடைந்து விடுகிறார்கள்!)*

ஆதலால், பகவான் அர்ஜுனனுக்கு ஆணையிடுகிறார் -

மய்யேவ மந ஆத₄த்ஸ்வ மயி பு₃த்₃தி₄ம் நிவேஶய।
நிவஸிஷ்யஸி மய்யேவ அத ஊர்த்₄வம் ந ஸம்ஶய:॥
*(கீதை-12/8)*

*('என்னிடம் மனத்தைச் செலுத்து; என்னிடம் புத்தியை நிலைப் படுத்து. இதற்குப் பின், நீ என்னிடமே உறையத் தொடங்குவாய். இதில் சந்தேகமே இல்லை.')*

பகவான் இவ்வளவு நம்பிக்கையூட்டும்படி ஆறுதல் கூறியபின்னர், நம்முடைய மனம்-புத்திகளுக்கு என்ன தான் வேலை? இவ்விரண்டையும், இந்த விநாடியிலிருந்தே, பகவானுடைய காரியத்தில் செலுத்த வேண்டும்.

புத்தியை பகவானிடம் ஈடுபடுத்துவது என்றால் என்ன? பகவான் எல்லா இடத்திலும் சமமாக விக்ஞான-ஆனந்த வடிவினராக விளங்குகிறார்; எல்லா இடத்திலும் ஆனந்தமான ஆனந்தமே நிரம்பி வழிகிறது; ஆனந்தத்தைத் தவிர வேறு எதுவுமே இல்லை-இவ்விதமாகத் தியானம் செய்து, அதிலேயே நிலைபெற்றிருத்தல் தான்-புத்தியை பகவானிடம் ஈடுபடுத்துவது ஆகும். இவ்விதமான தியானத்தின் பலன், அநாயாசமாகப் பகவானை அடைதல் தான். ஒரே பரமாத்மா, நிராகாரமாக எல்லா இடத்திலும்-நமக்குக் கீழேயும் மேலேயும், உள்ளேயும் வெளியேயும்-சமமான தன்மையுடன் விளங்குகிறார் என்பதை மிக நல்ல விதமாக புத்தியில் நிச்சயப்படுத்திக் கொள்ள வேண்டும்.

புத்தியின் இந்த நிச்சயத்துக்கு ஏற்ற முறையில், மனத்தில் சிந்தித்தல் தான்-மனத்தைப் பகவானிடம் ஈடுபடுத்துதல் ஆகும். இதனுடைய பயனும், பரமாத்மாவை அடைதல் தான்.

பகவானை விட்டுவிட்டு, மற்றப் பொருட்களைப் பற்றி சிந்தித்துக் கொண்டிருப்பது என்பது-தன் கழுத்தில் தூக்குக்

கயிற்றைப் போட்டுக் கொண்டு உயிர் விடுவதற்கு ஒப்பானது தான்! ஏனென்றால், அதனால் (பகவானை மறந்திருப்ப தனால்) மனித வாழ்க்கை பயனற்றதாகப் போய் விடுகிறது. மிக மிக விலையுயர்ந்த பொருளைப் பற்றிய சிந்தனை கூட, நமக்குப் பகவானை அடைவிக்காது. ஆகவே, மிகுந்த கவனத்துடன், பகவானைத் தவிர வேறு எந்தப் பொருள் மேலும் மனம் செல்லாதபடி, பயிற்சி செய்ய வேண்டும். காலம் என்பது பொன் போன்றது. மனித வாழ்க்கையில் நாம் விடும் மூச்சு, அளவிடப்படுகிறது. லட்ச ரூபாய் செலவு செய்தாலும், அதற்கு மேல் (விதிக்கப்பட்ட காலத்துக்கு மேல்) ஒரு நிமிடம் கூட அதிகமாகக் கிடைக்காது. மானுட வாழ்க்கையில் ஒரு விநாடி நேரம் கூட விலை மதிப்பிட முடியாதது. ஏனென்றால், பகவானைப் பற்றி சிந்தித்துக் கொண்டிருந்தால், அந்த விநாடியே, பகவானிடம் நம்மை அடைவிக்கக் கூடும். அப்படியிருக்கும்போது, மானுட வாழ்க்கையின் மொத்த நாட்களைப் பற்றிக் கூற வேண்டுமா? பகவானை அடைவதற்கு மானுட வாழ்க்கை காரணமாக அமைய முடியும்-என்பது தான், அதன் பெருமைக்குரிய விஷயம். மற்ற பிற யோனிகளில் பிறந்த ஜீவன்களுக்கு இது சாத்தியமில்லை. அதனால் தான், மனித வாழ்க்கையின் காலத்தைச் செலவழிப்பதில் மிகுந்த கவனம் தேவை. பகவானைத் தவிர வேறு செயல்களில் காலத்தைச் செலவழிப்பவர்களை அறிவிலிகள் என்று சான்றோர்கள் கூறுகிறார்கள்.

உலகாயதப் பொருட்களைச் சம்பாதிப்பதில் செலவழிக்கப்பட்ட நேரம் கூட வீண் தான். மாதத்திற்கு ஒரு லட்ச ரூபாய் சம்பாத்தியம் கிடைக்கிறது என்று வைத்துக் கொள்வோம். பன்னிரெண்டு மாதங்களில் பன்னிரெண்டு லட்ச ரூபாய். இதனால் என்ன பயன் ஏற்பட்டது? ரூபாய் நிறைந்த பைகளை இங்கேயே விட்டு விட்டு, ஜீவன் மட்டும் தனியாகத் தான் போக வேண்டும்! ஆனால், பணத்தைச் சம்பாதிக்கும்போது அவன் செய்த பாவங்கள், அவசியம் அவனுடனேயே இருக்கும். ஆகவே, பணத்தை ஈட்டுவதில் இரண்டு விஷயங்களைக் கவனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்-பணம் சம்பாதிப்பதற்காகப் பகவானை மறந்து

விடக் கூடாது; பணத்தைக் குவிப்பதற்காக, பாவச் செயல்களில் ஈடுபடக் கூடாது, மரணமடைந்ததும், பணத்துடன் நமக்கு எந்த சம்பந்தமும் இருக்காது. கழுதை, முதுகில் சுமந்து சென்று மண்ணைக் குவிக்கிறது. பகவானை மறந்து பணம் சம்பாதிப்பவனும், சரியாக, அதே மாதிரி தான். இறந்து போனதும், கழுதைக்கு மண்ணால் உபயோகமில்லை; நமக்கும் பணத்தால் உபயோகமில்லை. இந்தக் கொள்கை யின்படி பார்த்தால், மனித வாழ்க்கையின் நாட்கள், பணம் சம்பாதிப்பதில் ஏன் அழிக்கப்பட வேண்டும் என்று நினைக்கத் தோன்றுகிறது.

சில அன்பர்கள், இந்த உடலைப் பேணுவதில் நிறைய நேரம் செலவிடுகின்றனர். அழிந்து போகிற சரீரத்தைப் பேணுவதற்காக நேரத்தைக் கழிப்பது கூட, நேரத்தின் தவறான பயன்பாடு தான். விசேஷமான உணவு-பானங் களாலும் உடல் நலத்தில் அதிக அக்கறை காட்டுவதாலும், சரீரத்தில் நாலைந்து கிலோ எடை அதிகரித்தது என்றால், என்ன பெரிய சாதனை? கடைசியில், மரணம் அடையத் தானே வேண்டும்! சரீரம் ரொம்பவும் பெருத்து விட்டால், உயிரற்ற உடலும் கனமாகத் தான் இருக்கும். சடலத்தைச் சுமந்து செல்பவர்கள், 'ஐயோ, என்னமா கனக்குது, ஐயா?' என்பார்கள். உடலின் இந்தப் பருமையினால், வேறு என்ன தான் ஏற்படும்? பருத்த உடல் எரிந்து போனதும், ஓரிரு கிலோ சாம்பல் அதிகமாகும். சவத்தின் சாம்பலால் என்ன உபயோகம்? வேண்டுமானால் யார் கண்ணிலாவது விழுந்து, அவருக்குக் கஷ்டத்தைக் கொடுக்கும்! அதனால், சரீரத்தை அதிகத் தெம்புடன் வைத்துக் கொள்வதற்காக நேரம் செலவிடுவதில் லாபம் ஏதும் இல்லை.

குடும்பத்தைப் பேணுவதிலும், பகவானை மறந்து விட்டு, அகங்காரத்துடனும் ஆழ்ந்த பாசத்துடனும் நேரத்தைச் செலவிடக் கூடாது; ஏனென்றால், குடும்பத்தில் ஏற்படும் பாசம், அதிக துக்கத்தைக் கொடுக்கக் கூடியது. நீண்ட நெடுங்காலமாக குடும்பம், நம்மை ஏமாற்றிக் கொண்டு வந்திருக்கிறது. இப்போதைக்கு முன்னரும் நாம் ஏதோ ஒரு குடும்பத்தில் இருந்தோம். ஆனால், இப்போது அதைப் பற்றி

நமக்குச் சிறிதேனும் நினைவிருக்கிறதா? முந்தைய பிறவியில் நாம் எங்கே இருந்தோம்? எந்தக் குடும்பத்தில் இருந்தோம்?-என்று, கொஞ்சம் கூட ஞாபகம் இல்லை. அதே போல, இங்கிருந்து, கடைசியாக விடைபெற்றுச் சென்ற பின்னர், இந்தக் குடும்பம் பற்றிய நினைவும் இருக்காது. நூறு, இருநூறு வருஷங்களுக்குப் பிறகு இந்தக் குடும்பம் எங்கெங்கெல்லாம் செல்லுமோ, அதுவும் தெரியாது. ஆகவே, மரணத்துக்குப் பின் உறவு முற்றிலுமாக அற்றுப் போகிற குடும்பத்தின் வசப்பட்டு, மமதை கொண்டு, பகவானை மறந்து விடுவதும், நம்முடைய நேரத்தைக் குடும்பத்தினரின் பராமரிப்பு-போஷணையில் கழிப்பதும், மானுட வாழ்க்கை யைத் தவறான வழியில் பயன்படுத்துவதாகும்.

வீட்டைக் கட்டுவதில் நம்முடைய நேரத்தைச் செலவு செய்கிறோம்-பகவானை மறந்து விட்டு-என்றால் இதுவும் அறியாமை தான். வீட்டைக் கட்டி விட்டோம்; அதை யார் அனுபவிக்கப் போகிறார்கள்? யாருக்கு வீடு தேவையோ, அவர் தானே வீடு கட்டிக் கொள்வார்? பொய்யும் மெய்யுமாக கணக்குக் காட்டி, விலைமதிக்க முடியாத மனித வாழ்க்கையை, வீடு கட்டுவதில் ஏன் ஈடுபடுத்த வேண்டும்? இதே வழியில், உலக வாழ்வின் மற்ற பொருட்களைப் பற்றியும் சிந்திக்க வேண்டும். உலக வாழ்க்கையில் எவ்வெப் பொருட்களையும் மனிதர்களையும் நம்முடையதாகக் கருதிக் கொண்டிருக்கிறோமோ, அவை நம்முடையவை அல்ல; அவைகள் நம்மை விட்டுப் போவது தவிர்க்க முடியாதது. அதனால், அவைகளைச் சேகரிப்பதிலும் காப்பாற்றுவதிலும் ஈடுபட்டுப் பகவானை மறந்து விடுதல் உசிதமன்று. ஆன்மிகப் பார்வையில் பார்த்தால், பரமாத்மாவை அடைவதற்காகச் செய்யப்படும் செயல்களைத் தவிர மற்ற எல்லாக் காரியங்களும் வீண் அல்லது பொருளற்றவையாகும். இந்த மானுடப் பிறவி, ஆத்மாவின் நலனுக்காகக் கிடைத்திருக்கிறது; வீணான இன்பங்களை அனுபவிப்பதற் காக அல்ல. ஸ்வர்க்க இன்பங்களை அனுபவிக்க வேண்டும் என்று முயல்வது கூட வீண் வேலை தான். ஆகவே, ஆத்மாவின் நலனுக்கு உதவும் காரியங்களைத் தவிர வேறு எந்தக் காரியத்தில் ஈடுபட்டாலும், அது அறியாமையே

ஆகும். ஆயுள், நொடிதோறும் கழிந்து கொண்டேயிருக்கிறது. ஆகவே, நாம் எந்தக் காரியத்துக்காக மண்ணுலகத்துக்கு வந்தோமோ, அந்தக் காரியத்தை விரைவிலேயே முடித்து விட வேண்டும். காலத்தின்மேல் நம்பிக்கை வைக்க முடியாது. அடுத்த விநாடியில் என்ன நடக்கும்? என்பதைப் பற்றி யாரும் சொல்ல முடியாது. இப்படிப்பட்ட சூழ்நிலையில், ஒரு நொடியேனும் பகவானை மறத்தல் என்பது மிகவும் ஆபத்தில் சிக்கிக் கொள்வதைத் தவிர வேறு இல்லை.

உலக வாழ்க்கையில் நாம் தொடர்பு வைத்துள்ள பொருட்கள் எல்லாம், நம்மை விட்டு, நிச்சயமாக, ஒரு நாள், பிரிந்து போய்விடும். இந்த உடலோடு உள்ள உறவுகள் எல்லாம் வெறும் கற்பனை என்றும் அழிந்து போகக் கூடியது என்றும் உணர்ந்துகொண்டு, அதனிடம் கொண்டுள்ள மோஹம்-மமதையை, முதலிலேயே சுருட்டி வைத்துக் கொண்டு விட்டால், மிகவும் நல்லது. நாம், பகுத்தறிவுடன், மேலே சொன்ன பிரகாரம், ஆத்மசாதனை செய்து வந்தால், விடுதலை அடைந்து விடுவோம்; இவ்வித சாதனை செய்யாத காரணத்தால், நாம் வேறு வழியில்லாமல் இவற்றுடன் உள்ள உறவுகளை முறித்துக்கொள்ள நேரிடும்போது தட்டுத் தடுமாறி சுற்றி அலையத் தொடங்குவோம். எது பிறந்திருக்கிறதோ, அது அவசியம் மரணம் அடையத்தான் வேண்டும். லட்சக்கணக்கான வழிகளில் முயன்றாலும் எமனின் பிடியிலிருந்து தப்ப முடியாது. ஆகவே, எந்தக் காரியத்துக்காக வந்திருக்கிறோமோ, அதை அவசியம் செய்து முடிக்க வேண்டும்; இல்லையென்றால், பின்னொரு காலத்தில் அதற்காக வருத்தப்பட வேண்டியிருக்கும்.

'இப்போதாவது நல்லறிவு பெற்று ஆத்மலாபத்துக்காகப் பாடுபடாதவன், காலம் செல்லச் செல்ல, தலையைப் பிய்த்துக் கொண்டு மிகவும் வருத்தப்பட நேரும். அந்த மூடன், அப்போது, காலம்-கர்மம்-கடவுள் மேல் பொய்யான குற்றங்களை சுமத்துவான்' என்கிறார், கோஸ்வாமி. 'இது, கலியுகமில்லையா? அதனால், என் ஆத்மலாபத்துக்காக எதுவும் செய்ய முடியல்லே. என்னோட பூர்வ கர்மவினை அப்படி! என் தலையிலே அப்படி எழுதியிருக்கு ... கடவுள்

எனக்கு அனுகூலமா இல்லே?...' - என்ற மாதிரியெல்லாம் இவர்கள் பேசுவார்கள். அவர்களுடைய அழுகை பொருளற்றது; உண்மையற்றது. ஆதலால், இப்பொழுதே நாம் கவனமாக இருக்கத் தொடங்க வேண்டும்.

பரமாத்மாவை அடைவது என்பது, நாம் நாமே முயன்று பெறுவது ஆகும்; வேறு யாரும் நமக்காக இந்தக் காரியத்தை செய்து கொடுக்க முடியாது. உலக சம்பந்தமான வேலை ஏதேனும் பாக்கியிருந்தால், நமது வாரிசு அல்லது வேறு நபர்கள், அவைகளைப் பூர்த்தி செய்வார்கள்; ஆனால், பரமாத்மாவை அடைவதில் குறை வைத்தால், நாம் மறுபடியும் ஜன்மம் எடுக்க வேண்டும். ஆதலால், எந்தக் காரியத்தை நாமே தான் செய்து முடிக்க வேண்டுமோ; மற்றவர்களால் செய்து தர முடியாதோ; எதை அவசியம் செய்தே ஆகவேண்டுமோ, அதை நிறைவேற்றுவதிலேயே காலத்தைச் செலவழிக்க வேண்டும்.

உலக வாழ்க்கையில் ஏற்படும் எல்லாத் தொடர்புகளும் பொய்; கனவு போன்றது; மாயையே. சொப்பனத்தில் நாம் காண்பவையெல்லாம் சத்தியமாகவே தோன்றுகிறது; ஆனால், உண்மையில் அவைகளுக்கு 'ஸத்' (இருப்பு) என்பதே இல்லை. தூக்கம் கலைந்து கண்ணைத் திறந்ததும், அந்த (சொப்பன) உலகம் இல்லை; உடல் இல்லை; அப்போது நடந்த விவகாரங்களும் இல்லை! அது போல, இந்த உலகத்தோடு நமக்குள்ள சம்பந்தங்களெல்லாம், இந்த உடலை வைத்தே ஏற்படுகின்றன; சரீரம் அடங்கிப் போனவுடன், இவைகளுடன் நமக்கு துளிக்கூட சம்பந்தம் இருக்காது. ஆதலால், இந்த உலக பந்தங்களை, நாம், முன்னதாகவே மனப்பூர்வமாக விலக்கிக் கொண்டு விட்டால், பினனால் மனம் வருந்த வேண்டியிருக்காது.

மீதமுள்ள மானுட வாழ்க்கையில், நாம் ஆத்ம தரிசனத்துக்கான எல்லாவற்றையும் செய்து முடிக்க முடியும். பரமாத்மாவை அடைக்கலம் புகுந்து வேண்டிக் கொள்பவன், எதை விரும்பினாலும் அடைந்து விட முடியும். கடோபநிஷத் தில் யமராஜன்-நசிகேதன் விவாதம் வருகிறது. நசிகேதனைப் பார்த்து, 'நசிகேதா, ஓம் என்பது பரமாத்மாவின் திருநாமம்;

அதுவே பரப்ரம்மம்; இதுவே, நிர்குணம்- ஸகுணம்; இதனைச் சரணடைந்து விட்டால், நீ விரும்புகின்றனவெல்லாம் கிடைக்கும்' என்று யமதர்மராஜன் சொல்கிறார்.

ஆதலால், நாமும் பகவானைச் சரணடைந்து, எது வேண்டுமோ அதைச் செய்து முடித்துக் கொள்ளலாம். இன்னொரு விஷயம் : பகவானை அடைவதைத் தவிர வேறு ஒரு விருப்பமும் வைத்துக் கொள்ளக் கூடாது. வேறு ஒரு பொருளுக்கு ஆசைப்படுவது, வெறும் அறியாமை. உலகத்தில் உள்ள அத்தனை பொருட்களும் பிராரப்த வினையின் ஆதிக்கத்தில் உள்ளவை. 'நான், நூறு வருஷங்கள் உயிர் வாழ்வேன்' என்று ஒருவன் சொன்னால், அது அப்படியே நிகழ்ந்துவிடக் கூடியது அன்று. அது போலவே, 'எனக்கு இப்போதே மரணம் ஏற்பட வேண்டும்' என்று ஒருவன் விரும்புவதாலேயே, அவனுக்கு மரணம் ஏற்பட்டு விடாது. அவன் அனுபவிக்கத் தொடங்கி விட்ட பிராரப்த கர்மம் எப்படியோ, அப்படித்தான் நடக்கும். அதனால், ஆசைப்படுவது அறியாமை. இதுபோலவே, இன்ப நுகர்ச்சிப் பொருள்களைப் பற்றியும் உணர்ந்து கொள்ள வேண்டும். பிராரப்த வினைப்படி, நமக்கு எவ்வளவு கிடைக்க வேண்டுமோ, அவ்வளவு தான் கிடைக்கும்; வெறுமே ஆசைப்படுவதால், கிடைக்காது.

பகவத் தரிசனம், நமது விருப்பத்தால் ஏற்படுகிறது. இந்த இச்சை மிகவும் தீவிரமாகவும் ஒருமுகமாகவும் இருந்தால், பகவான் தோன்றுவார். பகவானைத் தவிர வேறு எந்தப் பொருளும் நமது இச்சைக்குக் கட்டுப்பட்டதன்று. உலகத்திலுள்ள எல்லாப் பிராணிகளும் சுகத்தை விரும்பு கின்றன; துக்கத்தை அல்ல. ஆனால் மிகப் பெரும்பாலோர்க்கு துயரம் தான் கிடைக்கிறது. அதனால், ஜடப் பொருட் களுக்காக விருப்பம் கொள்வது அறியாமையே ஆகும்; நாம் ஆசைப்படுவதால் ஜடப் பொருட்கள் கிடைத்துவிடு வதில்லை. அவைகளை அடைய வேண்டுமானால், நாம் முன் பிறவிகளிலேயே புண்ணியம் செய்திருக்க வேண்டும்; அந்தப் புண்ணிய கர்மம், இப்போது (பிராரப்த கர்மா) பலனைக் கொடுக்கத் தொடங்கியிருக்க வேண்டும்; ஆக, அது

இப்போது நம் கையில் இல்லை! ஆனால், பகவானை அடைய வேண்டும் என்று தீவிரமாக ஆசைப்பட்டால், அவரை அவசியம் அடைய முடியும். ஆகவே, பகவானை அடைவ தற்காக விருப்பம் கொள்ள வேண்டும்; அந்த விருப்பமும் மிக உறுதியாகவும் ஒருமுகமானதாகவும் இருக்க வேண்டும்.

பகவானை தரிசிப்பதில் காலதாமதம் ஆகிக் கொண் டிருக்கிறதே?-என்றால், குற்றம் நம்மீது தான். பகவான், நமக்குத் தரிசனம் கொடுப்பதற்கு எப்போதும் தயாராக இருக்கிறார்; நமக்கு அப்படி ஓர் இச்சை தோன்றினால் போதும்; அவ்வளவு தான். பகவானைத் தரிசிக்க வேண்டும் என்ற இச்சை விழித்தெழ வேண்டும் என்பதற்காக, தனியாக ஓர் இடத்தில் உட்கார்ந்து கொண்டு, எளிமை தோன்ற இதயத்தைத் திறந்து அழ வேண்டும். தன்னுடைய குற்றங் களை நினைத்துப் பார்த்து, நெஞ்சம் தழதழக்கப் பகவானிடம் பிரார்த்தனை செய்ய வேண்டும் : 'பிரபூ! தங்களைத் தவிர, இந்த உலகத்தில், வேறு யார் எனக்கு என்று இருக்கிறார்கள்? தலைவரே! நான் தங்களைச் சரண் அடைகிறேன்; தாங்கள் என்னைக் காப்பாற்றுங்கள்.' பகவான் மிகவும் இரக்கம் உடையவர்; அவர், தன் எதிரில் வந்து நின்று பிரார்த்திக்கும் மனிதனின் கணக்கில்லாத பிறவிகளில் செய்யப்பட்ட பாவங்களை அந்த விநாடியே மன்னித்து விலக்கி விடுகிறார்.

தன்னுடைய ஆத்ம முன்னேற்றத்துக்கான சாதனையை மேலும் மேலும் தீவிரமாகச் செய்ய வேண்டும். நேற்று நாம் செய்த ஆன்மிக சாதனையைக் காட்டிலும், இன்று அதிக முனைப்புடன் செய்ய வேண்டும்; இன்றைய தினத்தைக் காட்டிலும் நாளையதினம் இன்னும் அதிக ஆர்வத்துடன் செய்ய வேண்டும். இவ்விதம், விடியற்காலையிலிருந்து நண்பகல், நண்பகலிலிருந்து மாலை, மாலையிலிருந்து இரவு, இரவிலிருந்து மறுநாள் காலை வரை-என்றவாறாக படிப்படியாக சாதனையை தீவிரப்படுத்த வேண்டும். ஒவ்வொரு மணி நேரத்திலும், பின்னர், ஒவ்வொரு நொடிப் பொழுதிலும் சாதனையில் வேகம் மேன்மேலும் அதிகரித்துக் கொண்டிருக்க வேண்டும். இவ்விதமாக முயற்சி செய்யப்படு மேயானால், பகவானை தரிசிப்பதில் கால தாமதம் ஏற்படாது.

'வெகுவாகப் பிரயத்தினம் செய்து அடையப்பட்ட பரமபதம், நமது கவனக் குறைவால் கையை விட்டுப் போய்க் கொண்டிருக்கிறது' என்று ஒருவர் சொன்னார். உண்மை தான். மனித வாழ்க்கையை வீணாக இழப்பது என்பது, கைக் கெட்டிய பரமபதத்தை கை நழுவ விடுவதற்கு ஒப்பானது தான். அதனால், வாழ்க்கையில் கழிந்து போய்விட்ட நாட்கள், கழிந்து போனதே தான்; ஆனால், இனிமேல், ஒரு க்ஷணம் கூட பகவானுடைய நினைவில்லாமல் கழிய விடக்கூடாது. எப்போதும் விழிப்புடன் இருக்க வேண்டும். மனம் முற்றி லுமாக ஈடுபட்டுவிட்டால், மீதி இருக்கும் நாட்களே போது மானவை. இவ்வளவு குறைவான காலத்திலும் கூட பகவானை அடைய முடியும். கொஞ்சம் குறைவு ஏற்பட் டாலும் கூட பயப்பட வேண்டியதில்லை. அடுத்த ஜன்மத் தில், நிச்சயமாக நன்மை ஏற்படும்; ஏனென்றால், அந்த நபர் மெய்ஞானம் நிறைந்த யோகிகளின் குலத்தில் அடுத்த பிறவி எடுப்பார்; அவருடைய சிந்தனையில், இயல்பாகவே பக்தி-ஞானம்-வைராக்யம் குடிகொண்டிருக்கும். அந்தச் சூழலில், நல்லோர்களுடன் சேர்க்கை கிடைக்கும்; சித்தம் எப்போதும் உயர்நிலை நோக்கிப் போய்க் கொண்டிருக்கும்; கடைசியில், அவர் பரமாத்மாவை அடைந்து விடுகிறார்.

இப்போது, மின்சாரத்தால் இயங்கும் ஓர் இயந்திரத்தை கண்டுபிடித்திருக்கிறார்கள். அதன் எதிரில் எழுப்பப்படும் ஒலியை, அது பதிவு செய்து கொள்கிறது. அந்த மெஷின் செல்லுமிடங்களுக்கெல்லாம், பதிவு செய்யப்பட்ட ஒலியும் செல்கிறது. இதே போல, உலக வாழ்க்கையில் நாம் செய்யும் காரியங்கள் எல்லாம், வினைப் பதிவு என்னும் வடிவில் அந்தக்கரணத்தில் ஒடுங்கி விடுகின்றன; மரணத்துக்குப் பின்னால், அவை நம்முடன் செல்கின்றன. இப்போது பதிவான தீய-நல்ல சம்ஸ்காரங்கள் அடுத்து வரும் பிறவியில், நம்முடைய சிந்தனையைத் தூண்டுவதில் காரணமாகின்றன. ஆகவே, வாழ்க்கையில் நாம் செய்த பலவகையான தீய செயல்களின் பதிவு இதயத்தில் ஒருங்கிணைந்து தங்கி உள்ளனவே, அதனை, மரணத்துக்கு முன்னதாகத் துடைந்தெறிந்து விட வேண்டும். துணியிலுள்ள அழுக்கை, சோப்பு-தண்ணீர் கொண்டு, துவைத்து, நீக்கி, சுத்தம் செய்து

விடுவதைப் போல, அந்தக்கரணத்தில் உள்ள ராக-துவேஷம் போன்ற பாவ சிந்தனை வடிவான மாசுகளை, பகவன் நாம சங்கீர்த்தனம் என்ற சோப்பு, நிஷ்காம பாவம் என்ற தண்ணீர் கொண்டு, சுத்தம் செய்து விட வேண்டும். புத்தியிலும் மனத்திலும் நல்ல விஷயங்களை சேகரித்து வைக்க வேண்டும். புத்தியில் பதிந்துள்ள ஞானம், மிகவும் நல்லது. பரமார்த்த விஷயம் பற்றிய அறிவுதான், உண்மையான அறிவு. அதனால், புத்தியில் தைரியம், பொறுமை, அமைதி, சமத்துவம், மகிழ்ச்சி, அறிவு, வைராக்யம் ஆகிய சாத்விகத் தன்மைகளை சேகரித்து வைக்க வேண்டும். மனத்தில் பகவானுடைய உருவ சிந்தனை, பகவானுடைய குணம், பிரபாவம், தத்துவம், ரகசியம் பற்றிய விஷயங்களை ஒருங்கிணைத்து வைக்க வேண்டும். பகவானுடைய திருநாமம், உருவம், லீலை மற்றும் ஸ்தானம் பற்றிச் சிந்திக்க வேண்டும். புலன்களை, தவத்தின் (விரத, உபவாச அனுஷ்டானங்கள்) மூலம் புடம் செய்து தூய்மைப்படுத்த வேண்டும். பிறகு, புலன்கள் மூலம் பகவானைத் தரிசிப்பது, பகவானுடன் பேசுவது, பகவானைத் தொடுவது போன்றவைகளை மனத்திற்குள் செய்ய வேண்டும். அதாவது, பகவான் நமக்கு எதிரே நிற்கிறார்; நம்மையே பார்த்துக் கொண்டிருக்கிறார்; நாம் அவரைத் தரிசித்துக் கொண்டிருக்கிறோம்; அவருடைய திருவடிகளை நமது கைகளால் தொட்டு வணங்கிக் கொண்டிருக்கிறோம்; அவருடைய எழிலார்ந்த மூர்த்தியிலிருந்து வெளிவரும் திவ்விய மணத்தை நுகர்ந்து கொண்டிருக்கிறோம்; பகவானுடன் பேசிக் கொண்டிருக்கிறோம்; பகவானுடைய குரலை காதுகளால் கேட்டுக் கொண்டிருக்கிறோம்- இம்மாதிரி, மனத்தில் நினைத்துப் பார்க்க வேண்டும்.

எல்லா உயிர்ப் பிராணிகளையும் சாட்சாத் நாராயணனாகவே கருதி, கைகளால் சேவை செய்ய வேண்டும். வாயினால் சத்தியம், பிரியம், இதமான சொற்களைப் பேச வேண்டும். கண்களால் பகவானை, மகாத்மாக்களை, நல்ல காட்சிகளைக் காண வேண்டும். இவ்விதமாக ஒவ்வொரு புலனையும் தூய்மைப்படுத்தி, முக்தியை அடைவதற்கு அனுகூலமான தன்மைகளை அவற்றில் நிரப்பி விட வேண்டும்.

இந்தப் பிறவியில் நமக்கு வெற்றி கிடைக்கா விட்டால் பரவாயில்லை; நம்முடைய உத்தம சம்ஸ்காரங்கள் நம்முடனேயே வரும். நிஷ்காமபாவத்துடன் நமது சேவைகளைச் செய்வது மிகவும் உதவியாக இருக்கும். மிகுந்த கவனத்துடன், புலன்களில் நல்ல குணங்களைப் புகுத்தும் பயிற்சியைச் செய்தால், இதயத்தில் குடி கொண்டுள்ள தீயகுணம், தீய ஒழுக்கம், துயரம், மாசு, மனமாற்றம், மனத்திரை, உறக்கம், சோம்பல், தவறுதல் முதலிய தீய சம்ஸ்காரங்கள் மிக விரைவிலேயே முழுமையாக நீக்கப்பட்டு விடும்; பக்தி, ஞானம், வைராக்கியம், நல்லொழுக்கம், நற்குணம் முதலியன குடிகொள்ளும். உண்மையில், தெய்விக இயல்புகள், உடல்-உள்ளம்-உரை களால் தவம் செய்தல்-இவை, அமுதத்துக்கு ஒப்பானவை; ராஜஸ-தாமஸ இயல்புகள் நஞ்சுக்கு ஒப்பானவை. இவைகளால் மனிதனுக்கு வீழ்ச்சி நிச்சயம்.

மிக உயர்ந்ததும் மிக எளிமையானதுமான உபாயம் - பகவத் சிந்தனை. நித்திய நிரந்தரமாகவும் ஆழமான அன்புடனும் பகவானைச் சிந்திக்க வேண்டும். அன்பு இல்லாவிட்டாலும் கூட, பகவத் சிந்தனை, நமது உள்ளத்தை சுத்தம் செய்தே விடுகிறது. பகவானைப் பற்றிய சிந்தனை, விரோத-வெறுப்பு-அச்சத்தால் ஏற்பட்டாலும், அதனால் நன்மையே விளையும். மாரீசன், பகவான் ராமனை அச்சத்தின் காரணமாக நினைவில் வைத்துக் கொண்டிருந்தான்; அவனுக்கு நற்கதியே கிடைத்தது. கம்ஸன், பகவானை வெறுப்பின் காரணமாக நினைத்துக் கொண்டிருந்தான்; அவனுக்கும் நன்மையே ஏற்பட்டது; அப்படியிருக்கும்போது, ஒருவர் ஆழ்ந்த அன்போடும் அருள் வேண்டியும் பகவானை சிந்தித்துக் கொண்டிருந்தால், அவருக்கு நன்மைகளே ஏற்படும் என்பதைச் சொல்லவா வேண்டும்? விரஜபூமி யிலிருந்த கோபிகைகள் நம் கண்முன்னாலுள்ள எடுத்துக் காட்டு. கோபிகைகள் ஆழ்ந்த அன்போடும் அருள்வேண்டி யும் பகவானை சிந்தித்துக் கொண்டிருந்தார்கள் - அதனால், அவர்கள் உயர்நிலை அடைந்தார்கள் என்பதில் என்ன ஆச்சரியம்? ஆகவே, மனம் எங்கே சென்றாலும், அங்கே

பகவானையே காண்பாயாக. இரவில், பகவத் சிந்தனை செய்து கொண்டே உறங்குவாயாக. இரவில் உறக்கம் கலையும் போதும், எழுந்திருக்க நேரும்போதும், மனத்தைத் துருவிப் பார்க்க வேண்டும்-உள்ளே பகவத் சிந்தனை நிகழ்ந்து கொண்டிருக்கிறதா, இல்லையா?-என்று.

தனி இடத்தில் அமர்ந்து, ஜபசாதனை தொடங்கும் போது, ஆரம்பத்தில் பகவானை, பொருளுணர்ந்து துதி செய்ய வேண்டும். கீதை, ராமாயணம் முதலியவற்றை பொருளுணர்ந்து பாவ பூர்வமாகப் பாராயணம் செய்ய வேண்டும்; சிரத்தை-அன்புடனும் நிஷ்காமமாகவும் செய்ய வேண்டும். பின்னர், சத்சங்கத்தில் பங்கு கொள்ள வேண்டும். வேதத்தில் நமக்கு அறிவுரை கூறப்பட்டிருக்கிறது -

உத்திஷ்ட்ட$_2$த ஜாக்ரத ப்ராப்ய வராந்நிபே$_3$ாத$_4$த।
*(கடோபநிஷத்-1-3-14)*

'எழுந்திரு; விழித்தெழு; மகான்களிடம் சென்று அறிய வேண்டிய பரமாத்ம தத்துவத்தை அறிந்துகொள்'

இன்னும் கொஞ்சம் காலம் இருக்கும்போது, நல்லுணர்வு ஏற்பட்டுவிட்டால் நல்லது; இல்லாவிட்டால், தலைக்கு மேலே எமன் வந்து நிற்கும் போது, எந்த வழியும் உபயோகப்படாது.

'உயர்ந்த நாடு, உயர்ந்த ஜாதி, உயர்ந்த காலம், உயர்ந்த தர்மம், உயர்ந்தவர் சேர்க்கை-இவ்வளவு பெரும்பேற்றை அடைந்தும், சம்சார சாகரத்தைக் கடந்து செல்லாதவன்-இகழ்ச்சிக்குரியவன்; அறிவில்லாதவன்' - என்கிறார், கோஸ்வாமி.

'உன்னுடைய நன்மையை நீ விரும்புவாயேயானால், இரண்டு விஷயங்களை மறந்து விடாதே-ஒன்று, மரணம்; மற்றது, பகவான்.'

பகவானை நினைவு வைத்துக் கொண்டால், பாவங்கள் அழிந்து, நன்மைகள் பெருகும்; மரணத்தை நினைவு வைத்துக் கொண்டால், எதிர்காலத்தில் பாவம் சேராது.

அட, எந்த சாதனையும் செய்ய முடியவில்லை என்றாலும், பகவானுடைய திருநாமங்களில் உனக்குப் பிடித்தமானதை எப்போதும் உருப்போட்டுக் கொண்டேயிரு; நீ உருப்பட்டு விடுவாய்.



## 9. கீதையில் கூறப்பட்டுள்ள ஒன்றிய பிரேம சாதனை

'ஒரே பொருளான பரமேசுவரனைத் தவிர எனக்கு வேறு எதுவும் இல்லை; அவர்தான் என்னுடைய எல்லாமும்'-இப்படி எண்ணிக் கொண்டு, சிறிதளவு கூட சுயநலம், பற்றுதல் மற்றும் விருப்பம் இல்லாமல் பகவானிடமே, மிகுந்த சிரத்தையுடன் கூட, வேறு எவ்விடமும் செல்லாத ஒன்றிய நிலையில் பிரேமை செலுத்துவது; பகவானைத் தவிர வேறு எந்தப் பொருளிலும் கொஞ்சம் கூட பிரேமை கொள்ளாமல் இருப்பது-இது தான், ஒன்றிய பிரேமை. இந்த ஒன்றிய பிரேமை (பக்தி) என்னும் சாதனையின் ஸ்வரூபமும் அதன் பயனும் கீதையில் இவ்வாறு சொல்லப்பட்டிருக்கிறது -

மச்சித்தா மத்$_3$க$_3$தப்ராணா போ$_3$த$_4$யந்த: பரஸ்பரம்।
கத$_2$யந்தஸ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச॥
தேஷாம் ஸததயுக்தாநாம் ப$_4$ஜதாம் ப்ரீதிபூர்வகம்।
த$_3$த$_3$ாமி பு$_3$த்$_3$தி$_4$யோக$_3$ம் தம் யேந மாமுபயாந்தி தே॥
(10-9,10)

*(எக்காலத்திலும் என்னிடமே மனத்தைச் செலுத்தி, என்னிடமே உயிரை அர்ப்பணித்துள்ள பக்த ஜனங்கள், என்னிடம் வைத்துள்ள பக்தியைப் பற்றி தங்களுக்குள் பேசி மகிழ்கிறார்கள்; என் பிரபாவத்தைப் பிறருக்கு எடுத்துக் கூறுகிறார்கள்; என்னுடைய குணங்கள், கதைகளைப் பேசிப் பேசி எப்போதும் சந்தோஷமாக இருக்கிறார்கள்; வாசுதேவனான என்னிடமே நிரந்தரமாக சிந்தனையைச் செலுத்தி உள்ளம் பூரிக்கிறார்கள். இப்படியாகத் தியானம் முதலியவை வழியாக என்னிடமே*

*எப்போதும் திளைத்துக் கொண்டு, அன்போடு வழிபடும் பக்தர்களுக்கு தத்வஞான வடிவான யோகத்தை அருள்கிறேன்; அதனால், அவர்கள் என்னையே அடைகிறார்கள்).*

இங்கே, ஒன்பதாவது சுலோகத்தில் அநன்ய பிரேமி பக்தனின் (ஒன்றிய அன்புடைய பக்தன்) லட்சணத்தைக் கூறும்போது, ஆறு சாதனை முறைகளைக் குறிப்பிட்டிருக் கிறார்; பத்தாவது சுலோகத்தில் அதன் பயனைச் சொல்லியிருக்கிறார்.

இனி, இந்த விஷயத்தைப் பற்றி சிறிது விரிவாகப் பார்ப்போம்.

'மச்சித்தா:'

உலக வாழ்க்கையில் பற்றுள்ள மனிதன், இரவு-பகலாக உலக விவகாரங்களிலேயே ஆழ்ந்து திளைப்பதைப் போல, பகவானிடம் பேரன்பு கொண்ட பக்தன் பகவானிடமே ஆழ்ந்து திளைக்கிறான்; உலகப் பற்றுடைய மனிதன் எப்போதும் மனத்தில் உலகத்தைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பதைப் போல, பக்தனும் எப்போதும் மனத்தில் பகவானைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கிறான். பகவானைக் காணத் துடிக்கும் சாதக பக்தன், மனத்திற்குள் பகவானை அழைத்து, அவரைக் கண்டு, பேசி, தொட்டு, வழிபட்டு கௌரவப்படுத்தி, விளையாடி-எல்லாம் செய்து கொண்டேயிருக்கிறான்! எல்லாவற்றுக்கும் முதலாவதாக, தன்னுடைய இஷ்ட தேவதை-ஸ்ரீசிவன், ஸ்ரீவிஷ்ணு, ஸ்ரீராம், ஸ்ரீகிருஷ்ணன் ஆகிய யாராக இருந்தாலும் சரி-அவரை அழைத்து, திருவடிகளிலிருந்து சிரசு வரை, ஆடை-அணிகலன்-ஆயுதம் முதலியவற்றோடு கூடிய அவருடைய திருவுருவத்தைப் பேரார்வமும் பேரன்பும் கொண்டு சிந்திக்கிறான். பிறகு, தன் மனத்துக்குள்ளே காட்சி தரும், மானஸ பகவானுக்கு, மனத்தாலேயே பூஜைக்குரிய சாமான்களைச் சேகரித்து, மனம் என்னும் பொருளாலேயே ஷோடச உபசார பூஜையைச் செய்கிறான். பிறகு, மனம் நெகிழ்ந்து, துதிப் பிரார்த்தனை செய்கிறான். அவ்விதமே, மனத்தாலேயே அவருடன் கூட சிரித்துப் பேசி மகிழ்ந்தவாறே

ஆசிரமம்-வீடு-வனங்களில் சுற்றி வந்து கொண்டிருக்கிறான். பகவானுடைய திருவடிகள் பதியும் இடங்களிலெல்லாம், பகவானுடைய மகிமை பிரவேசிக்கிறது; அதனால், அந்த இடத்தின் துகள் மிகவும் புனிதமானதாகவும் மங்களத்தைத் தரக் கூடியதாகவும் ஆகிவிட்டதாகக் கருதுகிறான். எந்த ஒரு இருக்கை, சிம்மாசனம், மேடையில் அமர்ந்து பகவானுடன் பக்தன் தன் மனத்தால் உரையாடல் செய்தானோ, அந்த மேடை, சிம்மாசனம் முதலியவற்றில் பகவானுடைய திவ்விய குண-பிரபாவங்களின் அணுக்கள் படிந்திருப்பதாகக் கருதுகிறான்; அதனால், அந்த மேடை-ஆசனங்களைத் தொடும்போது அவன் சரீரத்தில் மயிர்க் கூச்சல் ஏற்படுகிறது; உள்ளம் மலர்ச்சி அடைகிறது. இரண்டு நண்பர்கள் தமக்குள் தத்தம் அன்பைப் பகிர்ந்து பேசிக் கொள்வார்களே, அதைப் போல, அவன் பகவானுடன் பிரேமையைப் பற்றி மனத்துக் குள்ளேயே சம்பாஷிக்கிறான். அன்பு நிறைந்த கண்களால் அவர்கள், ஒருவருக்கொருவர் பார்க்கிறார்கள். பகவானுடைய நெஞ்சத்திலும் கண்களிலும், சமத்துவம்-சாந்தி-ஞானம்-பிரேமை முதலிய எண்ணிறந்த நற்குணங்கள் நிறைந் துள்ளன; 'பகவான், என்னிடம் அருள் நிறைந்த பார்வை செலுத்துகிறார்; அதனால், அவருடைய குணங்கள் என்னுடைய மனம்-புத்தி-புலன்கள்-உடல் மற்றும் மயிர்க் கால் தோறும் ஏராளமாகப் புகுந்து, அவைகளிலும் சமத்துவம்-சாந்தி-ஞானம்-ஆனந்தம்-மலர்ச்சியை எல்லையில்லாத அளவுக்கு வழங்கி விடுகின்றன! 'ஆகா! நான் அவருடைய கல்யாண குணங்களாகிற கடலில் மூழ்கிப் போய்க் கொண்டிருக்கிறேன்'-இப்படி, நேரடி அனுபவம் அவனுக்கு உண்டாகிறது. பகவானுடைய கண்களின் பார்வை எங்கெல்லாம் படுகிறதோ, அவை எல்லாமும் புனிதமடைந்து, சிறப்படைந்து, க்ஷேமத்தைக் கொடுக்கக் கூடியவையாக ஆகிவிடுகின்றன-இப்படிப்பட்ட அனுபவமும் ஏற்பட ஆரம்பிக்கிறது. பின்னர், பகவானும் பக்தனும் ஒன்றாக உட்கார்ந்து உணவு உண்கிறார்கள்; இவர் அவருக்கும், அவர் இவருக்கும் ஊட்டிவிடுகிறார்கள்-என்ற நிலையும் உண்டா கிறது. பகவானுடைய திருக்கரம் பட்டதனால், அந்த உணவுப் பண்டம், தெய்விகமான சுவை கொண்ட இனிப்பாகி

விடுகிறது. அதை உண்பதால், சரீரத்தில் ஏற்படும் மகிழ்ச்சி-ஆனந்தம்-சாந்தி-திருப்திக்கு ஓர் அளவே இல்லை. பகவானுடைய திருவடிவத்துடன் ஏதேனும் ஒரு பொருள் உரசிவிட்டால், அந்த பொருளும் திவ்வியமான சுவை-ஆனந்தம்-சாந்தி-பிரேமை-நன்மை நிரம்பியதாக ஆகிவிடு கிறது. பகவான் எதனை தன் மனத்தில் நினைத்துக் கொள்கிறாரோ அந்த வஸ்துவும் கூட பரம சாந்தி, பரமானந்தம், மிகவும் நல்லதைச் செய்யக் கூடியதாக ஆகிவிடுகிறது. பகவானிடமிருந்து அற்புத மணம் வீசுகிறது; அது, நாசிகளுக்கு அமிழ்தம் போன்றது. பகவானுடைய பேச்சு மிகவும் கோமளமானது; மதுரமானது; அது, செவிகளுக்கு அமிழ்தம் போன்றது. பகவானுடைய திருவடி தீண்டுதல், கைகளுக்கு அமிழ்தம் போன்றது. பகவானின் தரிசனம் கண்களுக்கு அமிழ்தம் போன்றது. பகவானுடைய சிந்தனை, மனத்துக்கு அமிழ்தம் போன்றது. பகவானுடைய ஸாகார-நிராகார, ஸகுண-நிர்குண வடிவங்களைப் பற்றிய தத்துவ ஞானம், புத்திக்கு அமிழ்தம் போன்றது. இவ்விதமாக, அவருடைய தரிசனம், பேச்சு, ஸ்பரிசம், உரையாடல், சிந்தனை, கூடி விளையாடல்-எல்லாம் ரஸானந்தப் பிரேம அமிர்த மயமானவை! பகவானுடைய நாமம், ரூபம், லீலை, வாசஸ்தலம்-எல்லாம் மிக்க இனியவை, திவ்வியமானவை; உலகில் காணக் கிடைக்காதவை; சுவை நிறைந்தவை - இவ்வாறெல்லாம் சிந்தனை செய்த வண்ணம் இருக்கும் பேரன்புடைய பக்தன், தன்னுடைய சித்தத்தை முற்றிலுமாக பகவான் மயமாகவே ஆக்கி விடுகிறான்; பகவானைத் தவிர வேறு எந்தப் பொருளிடத்திலும் அவனுக்கு மனமகிழ்ச்சி ஏற்படுவதில்லை; செயல்படுவதுமில்லை. அதனால், அவர் பகவானை ஒரு நொடி நேரம் கூட மறக்க முடியாது. ஒரு பகவானிடமே அவருடைய மனம் லயித்துப் போய் நிரந்தரமாக ஊன்றிக் கொண்டு விடுகிறது.

'மத்$_3$க$_3$தப்ராணா:'

பேரன்பு கொண்ட பக்தர்கள், சிவ-விஷ்ணு-ராம-கிருஷ்ணன் என்கிற தமது இஷ்ட தேவதையை நேரில் கண்ணால் காணவேண்டும் என்பதற்காக, அவரையே தனது

வாழ்வு-செல்வம்-உயிர் ஆகிய எல்லாமாகக் கருதி, தம்முடைய வாழ்க்கையையே அவருக்கு அர்ப்பணம் செய்து விடுகிறார்கள். பின்னர், அவர்களுடைய வேலைகள் எல்லாம், பகவானுக்காகவே என்றாகி விடுகின்றன. அவர்களுடைய வாழ்க்கை பகவானுக்காகவே நடக்கிறது. அவர்களுக்கு, பகவானின் பிரிவு, ஒரு நொடி நேரமானாலும் கூட, பொறுக்க முடியாததாகி விடுகிறது. பகவானைக் காணாமல் அவர்களுக்கு அமைதி ஏற்படுவதில்லை; இரவில் தூக்கம் வருவதில்லை; பகலில் பசி எடுப்பதில்லை. பகவானுடன் பிரிவு ஏற்படுங்கால், தண்ணீர் இல்லாத மீனைப் போல அவர்கள் துடித்துப் போகிறார்கள். மீனின் உயிர் தண்ணீரில் அடங்கியிருப்பதைப் போல, இவர்களுடைய உயிர் பகவானிடம் இருக்கிறது. அவர்கள், கோபிகைகளைப் போல, பிரிவாற்றாமை காரணமாகப் பைத்தியம் போலவும் உன்மத்தர் போலவும் ஆகி பகவானைத் தேடித் தேடி அலைகிறார்கள். இவ்விதம், அவர்கள் தம்முடைய வாழ்வையும் உயிரையும் பகவானுக்கே பலிதானம் செய்து விடுகிறார்கள். அவர்களுக்கு உண்பது, குடிப்பது, பேசுவது, நடப்பது எதிலுமே தன்னுணர்வு இருப்பதில்லை. யட்ச-ராட்சஸ-தேவதை-மனிதன்-விலங்கு எதைப் பற்றியும் கவலைப் படுவதில்லை. அவர்கள் எல்லாவற்றிடமிருந்தும் அச்சம் நீங்கி நடக்கிறார்கள். அறநூல் நியமங்கள், உலக சம்பிரதாயம் பற்றியும் அவர்களுக்குத் தெரியாது. மனம்-உடல்-செல்வம்-வாழ்க்கை-உயிர் ஆகிய அனைத்தையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்துவிட்டதால், பகவானைத் தவிர வேறு எந்தப் பொருளைக் கொண்டும் அவர்கள் மகிழ்வதில்லை; தன்னுடையது என்று பற்றுக் கொள்வதில்லை. அவர்கள், பகவானை மட்டுமே சார்ந்திருக்கிறார்கள்.

### 'பே$_3$ாத$_4$யந்த: பரஸ்பரம்'

கோபிகைகள் பகவானுடைய பிரேமையின் தத்வ-ரகசியத்தை தங்களுக்குள் பேசி மகிழ்ந்தார்கள்; பிறருக்குச் சொல்லி ஆனந்தப்பட்டார்கள். அதே போல, பகவானிடம் பேரன்புபூண்டு அதில் மூழ்கிப் போன பக்தர்கள், தங்களுடைய நண்பர்களுடன், பகவானுடைய நாம-ரூப-

லீலை-இருப்பிடம்-பிரேமை-குணம்-பிரபாவம் பற்றி விளக்கிப் பேசிக் கொண்டு, ஒருவர் மற்றவருடன் பகவானுடைய தத்வ-ரகசியத்தைப் பகிர்ந்து கொள்கிறார்கள்; மற்றும், மிகவும் பிரியத்துக்குரிய பகவானுடைய லீலை, சரித்திரம், மகிமை முதலியவற்றையும் பகவானுடைய மாதுர்யம், ரூப லாவண்யம், ஆடை-அணிகலன், திருநாம வைபவம், குண-பிரபாவம் சம்பந்தமாக பரஸ்பரம் பேசிப் பேசி பரம ஆனந்தத்தில் ஒன்றித் திளைக்கிறார்கள்.

'கதயந்தஶ்ச மாம்'

பேரன்பு உடைய பக்தர்கள், தங்களைப் போன்றே பகவானிடம் ஆழ்ந்த பக்தி உடையவர்கள், தங்களிடம் நெருங்கிய நட்புடையவர்கள் கூட்டத்தில் நாமசங்கீர்த்தனம், மற்றும், குணங்களை சிறப்பித்துப் பாடல்கள் பாடி வருவார்கள். பகவானுடைய ஸாகார-நிராகார-ஸகுண-நிர்குண வடிவங்களின் தத்வ-ரகசியங்களை, பகவானுடைய சரித்திரம்-லீலைகளை, பகவானுடைய திருநாமத்தின் பெருமை, பகவானுடைய நித்ய வாசஸ்தலமான பரம பதத்தின் குண-பிரபாவ-தத்வ-ரகசியத்தை, பகவானுடைய திவ்விய, உலகில் காணக்கிடைக்காத, எல்லையற்ற, பலவகையான குணங்களின் தத்வ-ரகசியத்தை விளக்கும் நூல், விரிவுரை, கடிதப் போக்குவரத்து ஆகியவற்றின் மூலமாக சிரத்தை-அன்புடன் விளக்கிக் கொண்டிருப்பார்கள். இவ்வாறு செய்து கொண்டிருக்கும் போதே, அவர்கள் பகவானிடம் உள்ள பேரன்பினால் கிடைக்கும் ஆனந்தத்தால் தடுமாறி, அதில் மூழ்கிப் போகிறார்கள். அப்படியும் கூட, இவை எல்லாவற்றைப் பற்றியும் விளக்குவதில் அவர்கள் ஒருபோதும் களைத்துப் போவதில்லை.

'நித்யம் துஷ்யந்தி ச'

அத்தகைய பக்தர்கள், மேலே கூறப்பட்ட விஷயங்களிலேயே எப்போதும் மகிழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இதைக் காட்டிலும் ஆனந்தத்தை அளிக்கக் கூடியது என்று எதையும் கருதமாட்டார்கள். அவர்கள் பகவானுடைய தத்வ-ரகசியத்தை எண்ணி எண்ணி மனம் நிரம்பி

மலர்ச்சியோடு இருக்கிறார்கள். பெரிய பெரிய ஆபத்துக்கள் ஏற்பட்டாலும் கூட, அந்தப் பேரானந்த நிலையிலிருந்து அவர்கள் தடுமாறுவது இல்லை; மாறாக, தங்களுடைய இஷ்டதேவதையின் பெயர்-வடிவம்-லீலை-குணம்-பிரபாவத்தை எண்ணிக் கொண்டு பரமானந்தத்திலேயே திளைத்திருக்கிறார்கள். தங்களுக்கு மிகப் பிரியமான இஷ்ட தெய்வம் பரமாத்மாவின் அன்புமயமான லீலை, சரித்திரங்களை மனத்திற்குள்ளேயே பார்த்துப் பார்த்து எப்போதும் சந்தோஷத்துடன் இருக்கிறார்கள்; பகவானுடைய அதிமதுரமான சுபாவம், மகிமை, தோற்றப் பொலிவு ஆகியவற்றின் தத்வ-ரகசியத்தை எண்ணி பரமானந்தத்தில் மூழ்கியிருக்கிறார்கள்.

'ரமந்தி ச'

பேரன்பு கொண்ட அந்த பக்தர்கள், உலகியலிலிருந்து மாறுபட்ட மேலான நெஞ்சக் களிப்புடன் பகவானுடன் விளையாடி வருகிறார்கள். அவர்கள் எப்போதும் பகவான் ஒருவரிடமே திளைத்துக் கொண்டிருக்கிறார்கள். தங்களுடைய பேரன்புக்குரிய பகவானிடமிருந்து வீசிக் கொண்டிருக்கும் திவ்வியமான நறுமணத்தை நாசிகள் மூலம் சுவைத்துப் பார்த்தல், நாசிகள் மூலம் அடையப்படும் ஆனந்தம்; பகவானுடைய பிரசாதத்தை ஏற்று, வாயில் போட்டு, நாக்கினால் சுவைப்பது, நாக்கு மூலமான ஆனந்தம்; பகவானுடைய கண்களை தமது கண்களால் நேராகச் சந்தித்து, அவருடைய கண்களில் மிளிரும் திவ்வியமான பிரேம-ரஸ-ஞான வடிவான ஒளியைப் பார்த்துக் கொண்டே யிருப்பது, கண்களால் கிடைக்கும் ஆனந்தம்; பகவானுடைய திருவடிகளை தொட்டுக் கும்பிடுவது, கைகளால் பெறப்படும் ஆனந்தம்; பகவானுடைய சதங்கை, புல்லாங்குழல் முதலிய வற்றின் நாதம், அவருடைய அன்பு நிறைந்த மதுரமான குரல்-இவற்றைக் கேட்டுக் கேட்டுச் சுவைத்தல், செவிகள் மூலம் பெறப்படும் ஆனந்தம். பகவானுடைய குண-பிரபாவ-ரூப-லீலைகளைச் சிந்தித்துப் பார்ப்பது, மனத்தின் மூலம் பகவானுடன் விளையாடுவதாகும். அவ்விதமே, பகவானு டைய ஸகுண-நிர்குண, ஸாகார-நிராகார வடிவங்களின்

தத்வ-ரகசியத்தை அறிந்து கொண்டு அதிலேயே லயித்துப் போயிருத்தல், புத்தி மூலமாக அவருடன் கூடிக் களிப்ப தாகும். இவ்விதமாக, பகவானின் மணத்தை நுகர்தல், பிரசாதம் உண்பது, தரிசனம், ஸ்பர்சம், பேச்சு, கேட்பது, சிந்தனை ஆகிய எல்லாமே மிக்க மதுர-ரஸ-பிரேம-அமிர்த-ஆனந்தமயமானவை-என்று எண்ணிக் கொண்டு பேரன்பு உடைய அந்த பக்தர்கள், தங்களுடைய மனம்-புத்தி- புலன் களை பகவானுடன் இணைத்து, அவற்றின் மூலம் அவரைக் கண்டு, பேசுவதிலேயே நிகரற்ற சுவையை சுவைத்துக் கொண்டு பகவானிடமே நித்திய நிரந்தரமாக களியாட்டம் செய்து வருகிறார்கள். கோபிகைகளுக்கு பகவானிடம் ஒன்றிய, தெய்விகப் பிரேமை இருந்தது. தங்களுடைய மனம், பிராணன் மற்றும் எல்லாச் செயல்களையும், தங்கள் உயிருக் குயிரானவரும் அன்புக்குரியவருமான கண்ணனுக்கே அர்ப்பணம் செய்திருந்தார்கள்; பகவானுடைய குணங்களைப் பாடிப்பாடி, அவருடைய பிரேமையில் எப்போதும் மூழ்கியிருந்தார்கள். ஸ்ரீமத் பாகவதத்தில் -

தந்மநஸ்காஸ்தத$_3$ாலாபாஸ்தத்$_3$விசேஷ்டாஸ்தத$_3$ாத்மிகா: ।
தத்$_3$குணாநேவ க$_3$ாயந்த்யோ நாத்மாக$_3$ாராணி ஸஸ்மரு: ॥
*(10-30-44)*

- என்று சொல்லப்பட்டிருக்கிறது.

*(கோபிகைகளுடைய மனம், கிருஷ்ணமயமாகி இருந்தது. அவர்களுடைய வாயிலிருந்து ஸ்ரீகிருஷ்ணனைத் தவிர வேறு எதுபற்றியும் பேச்சு வருவதில்லை. அவர்களுடைய உடல் களிலிருந்து ஸ்ரீகிருஷ்ணனுக்காகவே ஸ்ரீகிருஷ்ணன் போன்ற அசைவுகளே ஏற்பட்டன. பலபடச் சொல்வானேன்? அவர் களுடைய ஆத்மாவே ஸ்ரீகிருஷ்ணமயமாகி விட்டிருந்தது. அவர்கள் ஸ்ரீகிருஷ்ணனுடைய குண-லீலைகளையே பாடிக் கொண்டிருந்தார்கள். தங்களுடைய உடல் மற்றும் வீடு பற்றிய நினைவு கூட இல்லாத அளவுக்கு அவர்கள் அவரிடம் ஒன்றிப் போயிருந்தார்கள்.)*

மேலே சொன்னபடி பகவானுடைய நாம-ரூப-லீலை-இருப்பிடம்-குணம்-பிரபாவத்தின் தத்வ-ரகசியத்தைத்

தெரிந்து கொண்டு சிரத்தை-நம்பிக்கையுடனும் ஒன்றிய அன்புடனும் நிரந்தரமாக மனத்தில் சிந்தித்தல், தரிசனம், அளவளாவுதல், திருவடி தீண்டுதல் ஆகியவைதான், பகவானை மனப்பூர்வமாக, தூய, நிஷ்காம பாவத்துடன் வழிபடுவதாகும். இவ்விதம் பகவானை வழிபடும் பக்தர்கள், கௌரவம்-பெருமை, சுக-சௌக்கியம், மேலாண்மை-இன்பம், முவ்வுலக ஐசுவரியம், ஏன் முக்தியைக் கூட விரும்பமாட்டார்கள். அவர்கள் தூய அன்புக்காகவே, ஒன்றிய மனத்தோடு பகவானை வழிபடுகிறார்கள்.

ந பாரமேஷ்ட்₂யம் ந மஹேந்த்₃ரதி₄ஷ்ண்யம் ந ஸார்வபௌ₄மம் ந ரஸாதி₃பத்யம் ॥
ந யோக₃ஸித்₃தீ₄ரபுநர்ப₄வம் வா மய்யர்பிதாத்மேச்ச₂தி மத்₃விநாந்யத் ॥
*(பாகவதம்-11/14/14)*

*(தங்களையே எனக்கு அர்ப்பணித்து விட்டவர்கள், என்னைத் தவிர பிரும்ம பதவியையோ, தேவராஜனான இந்திரனின் பதவியையோ விரும்பமாட்டார்கள். அவர்கள் மனத்தில் ஈரேழு பதினான்கு உலகங்களையும் கட்டியாளும் ஆசை எழுவதில்லை; ரஸாதலத்தின் மன்னனாக ஆக விரும்புவதில்லை; யோகப் பயிற்சியினால் அடையக் கூடிய பெரிய பெரிய ஸித்திகளையும் மோட்சத்தையும் கூட விரும்புவதில்லை.')*

இவ்வாறு தூய, ஒன்றிய அன்பு செலுத்தும் பக்தனுக்கு புத்தியோக வடிவமானதும் விக்ஞானத்தோடு கூடியதுமான ஞானத்தை பகவான் அருள்கிறார். இதன்மூலம், பகவானுடைய ஸாகார-நிராகார, ஸகுண-நிர்குண ஸ்வரூபங்களின் தத்வ-ரகசியத்தை உள்ளபடி தெரிந்துகொண்டு, அதன் பயனாக, அன்புப் பொருளான பகவானை அடைந்து விடுகிறான். பகவானை அடைந்தபிறகு, அவனுக்குப் பகவானைப் பற்றிய அனுபவம் மட்டுமே இருந்து வருகிறது, அவன் தன்னையே மறந்து விடுகிறான். உணர்வு வரும்போது, அவனுடைய எல்லா அங்க அசைவுகளும் பகவானுடைய விருப்பம், சமிக்ஞைகளுக்கு ஏற்ப, பொம்மலாட்ட மரப்பாவை போல, இயல்பாகவே செயல்படத் தொடங்குகின்றன. பகவானுடைய எல்லா அசைவுகளும் பக்தனுக்காக என்றும், பக்தனுடைய எல்லா அசைவுகளும் பகவானுக்காக என்றும் ஆகிவிடுகின்றன. அவர்களிடையே பரஸ்பரம் புத்தம்

புதிய பிரேமை எப்போதும் கூட்டல் குறைவின்றி விழித்துக் கொண்டே இருக்கிறது, அவர்களுடைய செயல்பாடுகள், பரஸ்பரம் மகிழ்விப்பதற்காகவே நிகழ்கின்றன; அது அவர்களிடையே ஒரு லீலையாக நடைபெறுகிறது. பிரேமை, பிரேமைக்குரிய பொருள், பிரேமை செலுத்துபவன்-என்று, இவைகளின் பெயரும் உருவமும் வெவ்வேறாக இருந்தாலும், உண்மையில் மூன்றும் ஒரே பொருள் தான். பொன்னாலான அணிகலன்களின் உருவமும் பெயரும் வெவ்வேறாக இருந்தாலும், அவை, அடிப்படையில், பொன்னே ஆகும். இது போலவே, பரமதிவ்விய வடிவமான சின்மய பரமாத்மாவே, பிரேமை செலுத்துபவன்-பிரேமைக்குரிய பொருள்-பிரேமை என்ற பெயர்களில் விவகரிக்கிறார். பக்தனுடைய பார்வையில், பக்தன்-பிரேமை செலுத்துபவன்; பகவான்-பிரேமைக்குரிய பொருள்; இருவரிடையே உள்ள சம்பந்தம்-பிரேமை; பகவானுடைய பார்வையில், பகவான்-பிரேமை செலுத்துபவர்; பக்தன்-பிரேமை செய்யப்படும் பொருள், இருவரிடையே உள்ள உறவு - பிரேமை என்பதால், பகவானுடைய எல்லாச் செயல்களும் பக்தனுக்கு லீலையாகப்படும்; பக்தனுடைய எல்லாச் செயல்களும் பகவானுக்கு லீலையாகப் படும். அவர்களுடைய செயல்கள், ஒருவர்-மற்றொருவரின் மகிழ்ச்சிக்காகவே செய்யப்படுகின்றன.

இந்த நிலையில், ஒருவர் மற்றவரிடம் வெட்கம், மரியாதை, அச்சம், உபசாரம் எதையும் சிறிதளவு கூட எதிர்பார்ப்பதில்லை. உண்மையில், அவர்கள் இருவரும் ஒருவரே; ஆகவே யார், யாரிடமிருந்து, யாருடைய, எதற்காக வெட்கம்-மரியாதை-அச்சம்-உபசாரத்தை எதிர்பார்ப்பது? தாஸ்யம் (தன்னை பகவானின் அடிமையாகக் கருதும் சாதனை); வாத்ஸல்யம் (பகவானைத் தன் சேயாகக் கருதும் பாவனை)-இவற்றில் வேண்டுமானால் உபசார-மரியாதை, அச்சம் இருக்கலாம்; காந்தா பாவத்தில் (தன்னை பகவானின் மனைவியாகக் கருதுவது) உபசார-மரியாதை உண்டு; அவ்விதமே, ஸக்ய பாவத்திலும் (பகவானை நண்பனாகக் கருதுவது) வெட்கம் இருக்கும். ஆனால், மேற்சொன்ன உன்னத நிலையில் பரஸ்பர வெட்கம், அச்சம், கௌரவம்,

உபசாரம்-மரியாதை என்பன கொஞ்சங்கூட இருக்கமாட்டா. ஏனென்றால், பகவானுடைய தரிசனம் ஏற்பட்டவுடனேயே தாஸ்யம், ஸக்யம், காந்தா பாவம், வாத்ஸல்யம், சாந்தம் முதலிய எல்லா பாவங்களும் அந்த பக்தனுள் புகுந்து விடுகின்றன; மிகத் தூயதான, சின்மய, பரம பிரேமஸ்வரூபரான பகவானையே அடைந்து விட்ட காரணத்தால் அவர் இந்த பாவங்களுக்கு மேலே போய்விடுகிறார். இத்தகைய சுத்த, திவ்ய, காணக்கிடைக்காத பிரேமையை அடைவது ரகசியமானது, இதனைப் பற்றி யாரும் வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது.



## 10. இறுதிக் காலத்தில் பரமாத்ம நினைவின் பெருமை

சாஸ்திரங்களில் பகவானுடைய இரு வடிவங்கள் கூறப் பட்டிருக்கின்றன-நிர்குணம், ஸகுணம். இவற்றில் நிர்குணம் என்று பேசப்படுவது, நிராகாரமும் ஆகும். ஸகுணத் தோற்றத்தில் இரண்டு வகைகள் (ஸகுண-நிராகாரம்; ஸகுண-ஸாகாரம்) இருக்கின்றன. பகவானுடைய இந்த மூன்று வடிவங்களில் ஏதேனும் ஒன்றைப் பற்றிச் சிந்தித்த நிலையிலே உடலைத் துறக்கும் மனிதன், நிரந்தரமாக இந்த உலக வாழ்க்கையிலிருந்து விடுதலை பெற்று பரப்ரம்ம பரமாத்மாவை அடைந்து விடுகிறான். பரப்ரம்ம பரமாத் மாவை அடைவது என்பது தான்-அவ்யக்த, அக்ஷர, பரமகதி, பரந்தாம என்ற-அநேகம் பெயர்களால் சொல்லப் படுகிறது.

அவ்யக்தோऽக்ஷர இத்யுக்தஸ்தமாஹு: பரமாம் க₃திம்।
யம் ப்ராப்ய ந நிவர்தந்தே தத்₃த₄ாம பரமம் மம॥
*(கீதை : 8/21)*

***(எந்த அவ்யக்தமானது 'அக்ஷரம்' என்ற பெயரால் சொல்லப் பட்டிருக்கிறதோ, அதே அக்ஷரம் என்று பெயர் பெற்ற அவ்யக்த பாவத்தை, பரமகதி என்கிறார்கள். அந்தப் பழைமையான அவ்யக்த பாவத்தை அடைந்துவிட்டவர், திரும்ப வருவதில்லை; அது தான் என்னுடைய பரமபதம்).***

'என்னையே நினைத்துக் கொண்டு மரணம் அடைகிறவன், பரமாத்மாவான என்னையே அடைந்து விடுகிறான்' என்று பகவான் கூறுகிறார்.

அந்தகாலே ச மாமேவ ஸ்மரந்முக்த்வா கலேவரம் ।
ய: ப்ரயாதி ஸ மத்$_3$ப$_4$ாவம் யாதி நாஸ்த்யத்ர ஸம்ஶய: ॥
*(கீதை : 8/5)*

*(எவனொருவன் மரணத் தறுவாயில்கூட என் நினைவுடனே உடலைத் துறக்கிறானோ, அவன் என்னையே சாட்சாத்தாக அடைந்து விடுகிறான்; இதில் கொஞ்சமும் சந்தேகம் இல்லை).*

'தன்னை ஸ்மரிக்கிறவர்களை மட்டும் பகவான் கடைத்தேற்றுகிறார்; தன்னைப் பற்றி சிந்திக்காதவர்களை மேல்தூக்கி விடுவதில்லை' என்றால், பகவான் ஒருபக்கமாகப் பரிந்து பேசுகிறவர் ஆகமாட்டாரோ?-என்று கேள்வி கேட்டால், வாஸ்தவத்தில் அது அப்படி இல்லை. பகவான் நடுநிலையாளர் தான்; ஒரு கட்சியைச் சேர்ந்தவர் அல்லர்; அவருக்கு எல்லோரிடமும் சமமான அருள் இருக்கிறது. ஆனால், மரணகாலத்தில் ஒரு மனிதன் எந்தெந்த தேவதை, மனிதன், விலங்கு, பறவை, மரம், மலையை நினைத்துக் கொண்டு உடலைத் துறக்கிறானோ, அவன் அதே உருவத்தை அடைகிறான் என்பது ஒரு பொதுவான விதி.

யம் யம் வாபி ஸ்மரந்ப$_4$ாவம் த்யஜத்யந்தே கலேவரம் ।
தம் தமேவைதி கௌந்தேய ஸத$_3$ா தத்$_3$ப$_4$ாவப$_4$ாவித: ॥
*(கீதை-8/6)*

*(குந்தியின் புதல்வனே! மனிதன் இறுதிக் காலத்தில் எந்தெந்த உணர்வுகளை மனத்தில் கொண்டு உடலைத் துறக்கிறானோ, அந்தந்தப் பிறவியையே அடைகிறான்; ஏனென்றால், அவன் எப்போதும் அதே நினைவாகவே இருக்கிறான்)*

பகவான், இந்தப் பொது நியமத்தைக் கூறிவிட்டு, மேலும் சொல்கிறார் -

தஸ்மாத்ஸர்வேஷு காலேஷு மாமநுஸ்மர யுத்$_4$ய ச ।
மய்யர்ப்பிதமநோபு$_3$த்$_3$தி$_4$ர்மாமேவைஷ்யஸ்யஸம்ஶயம் ॥
*(கீதை-8/7)*

*(ஆகவே, அர்ஜுனா! எப்போதும் என்னையே நினைத்துக் கொண்டிரு; யுத்தமும் செய். இவ்விதம் என்னிடம் மனம்-புத்தியை அர்ப்பணம் செய்து விட்டால். சந்தேகமில்லாமல் என்னையே அடைவாய்).*

ஸ்ரீகிருஷ்ணன், எப்படி அர்ஜுனனுடைய தேரோட்டி யாக தேரில் வீற்றிருந்து காட்சி கொடுத்துக் கொண்டே இருந்தாரோ, அதே போல, பகவான் எல்லா இடங்களிலும் நம்முடனே இருக்கிறான் என்று அறிந்துவிட்டால், அந்த ஸகுண-ஸாகார பரப்ரம்ம வடிவான பகவான் ஸ்ரீகிருஷ்ண னைப் பற்றிய சிந்தனை இயல்பாகவே ஏற்படும். மனிதன் நிரந்தரமாக எந்தப் பொருளைப் பற்றி சிந்தித்துக் கொண்டிருக்கிறானோ, அதே பொருள் அவனுடைய கடைசிக் காலத்திலும் தானாகவே நினைவுக்கு வந்துவிடும். ஆகவே, பகவானுடைய ஸகுண-ஸாகார வடிவத்தை நினைத்துக் கொண்டே சரீரத்தை விட்டுவிடும் மனிதன், அந்த பகவானுடைய ஸகுண ஸ்வரூபத்தையே அடைந்து விடுகிறான் என்பதில் ஐயமில்லை.

இந்த விஷயத்தைத் தொடர்ந்து, 'ஸகுண நிராகாரத் தைச் சிந்தனை செய்வதால், பரமாத்ம பிராப்தி கிடைக்கிறது' என்பது சொல்லப் படுகிறது. எங்கும் வியாபித்துள்ள ஸகுண நிராகார வடிவ பரம திவ்விய பரமாத்மாவை சிந்தித்துக் கொண்டே உயிரை விடுபவனும் அந்தச் சிந்தனையின் தாக்கத்தால் பரமாத்மாவை அடைந்து விடுகிறான்.

'பார்த்தா! பரமேசுவர தியானம் என்கிற பயிற்சி வடிவான யோகத்தோடு கூடிய, வேறெங்கும் செல்லாத சித்தத்தால் எப்போதும் சிந்தனை செய்து கொண்டிருக்கும் மனிதன் பரம திவ்யபுருஷனான பரமேசுவரனையே அடைந்து விடுகிறான். எவர் எல்லாம் அறிந்தவரோ, எல்லோரையும் கட்டுப்படுத்துபவரோ, நுட்பத்தினும் நுட்பமாக இருப்பவரோ, எல்லோரையும் காப்பாற்றிப் பராமரித்து வருபவரோ, நினைவுக்கு எட்டாத வடிவம் கொண்டவரோ, சூரியனைப் போல் உயிர்ப்புள்ள ஒளி வடிவினரோ, அவித்தையிலிருந்து வெகு தூரத்துக்கு அப்பால் உள்ளவரோ, அந்தத் தூய, சச்சிதானந்தத்திரட்சிப் பொருளான பகவானை சிந்திக்கிற, பக்தனான அந்த மனிதன் இறுதிக்

காலத்திலும், தன் யோக சக்தியால், தன் உயிரை இரண்டு புருவங்களுக்கிடையே நன்றாக நிலைநிறுத்தி, சஞ்சலமடையாத மனத்தால் நினைத்துக் கொண்டு, அந்த திவ்விய ஸ்வரூபமான பரமாத்மாவையே அடைந்து விடுகிறான்'- என்று, கீதை 8 - 8, 9, 10ல் பகவான் சொல்லியிருக்கிறார்.

பரம திவ்விய புருஷனான பரமாத்மா அவ்யக்த நிராகார ஸர்வ வியாபீ; இந்த உலகம் முழுவதும் அந்தப் பரமாத்மாவின் ஒரு சிறு பகுதியில் நிற்கிறது. வாயு, தேயு, நீர், மண் ஆகிய நான்கு பூதங்களும் ஒரு அவ்யக்த-நிராகார ஆகாயத்தில் அடங்கியிருக்கின்றன; ஆகாயம், இந்த நான்கிலும் வியாபித்துள்ளது. அதே போல, எல்லா சராசரப் பூதப் பிராணிகளின் உள்ளேயும் வெளியேயும் பரமாத்மா நிறைந்துள்ளார்; பூத-பிராணிகளின் ஒட்டு மொத்தமும் அந்தப் பரமாத்மாவின் ஓர் அம்சத்தில் இருக்கிறது.

புருஷ: ஸ பர: பார்த$_2$ ப$_4$க்த்யா லப்$_4$யஸ்த்வநந்யயா ।
யஸ்யாந்த:ஸ்த$_2$ாநி பூ$_4$தாநி யேந ஸர்வமித$_3$ம் ததம் ॥
*(கீதை-8/22)*

***(அர்ஜுனா! எந்தப் பரமாத்மாவின் உள்ளடங்கி எல்லா உயிர்களும் இருக்கின்றனவோ, எந்த சச்சிதானந்தத் திரட்சியான பரமாத்மாவினால் இவ்வுலகமெல்லாம் நிறைந்துள்ளதோ. அந்த மிகத் தொன்மையான, அவ்யக்த பரமபுருஷ. பரமாத்மா, ஒன்றிய பக்தியால் அடையத் தக்கவர்).***

ஸகுண-ஸாகார, ஸகுண-நிராகார ஸ்வரூப சிந்தனையால் பரமாத்மாவை அடைவதைப் போலவே நிர்குண-நிராகார பிரம்மத்தைச் சிந்தனை செய்தவாறே உடலை உகுக்கும் மனிதனும் பரமகதி என்பதான நிர்குண, சச்சிதானந்த வடிவான பிரம்மத்தை அடைகிறான். பரம அக்ஷர வடிவான பரமாத்மாவின் பெருமைகளை விளக்கி, பகவான் கூறுகிறார்-

யத$_3$க்ஷரம் வேத$_3$விதே$_3$ா வத$_3$ந்தி விஶந்தி யத்$_3$யதயோ வீதராக$_3$ா: ।
யதி$_3$ச்ச$_2$ந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி தத்தே பதம் ஸங்க்$_3$ரஹேண ப்ரவக்ஷ்யே ॥
*(கீதை-8/11)*

*(வேத வல்லுநர்கள் எந்த சச்சிதானந்த வடிவான பரமபதத்தை அழிவில்லாதது என்கிறார்களோ, பற்றுதல் இல்லாத, முயற்சியுடைய துறவிப் பெரியோர்கள் எதனுள் புகுந்து விடுகிறார்களோ, எந்தப் பரமபதத்தை அடைவதற்காகப் பிரம்மசாரிகள், பிரம்மசர்யத்தைக் கடைப்பிடிக்கிறார்களோ, அந்தப் பரமபதத்தின் சிறப்புக்களை, நான் உனக்குச் சுருக்கமாகக் கூறுகிறேன்).*

இந்த நிர்குணா-நிராகார பரமாத்மாவே, அக்ஷர பிரம்மம் என்ற பெயரால் வழங்கப்படுகிறது.

அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ......।

*(கீதை-8/3 முன்பாதி)*

இந்த அக்ஷர பிரம்மத்தின் பெயர் தான், 'ஓம்'. அதனால் தான், இறுதிக் காலத்தில் ஓங்காரத்தை உச்சரித்துக் கொண்டும் அதன் பொருள் வடிவான, சச்சிதானந்த-நிர்குணா-நிராகார பிரம்மத்தை நினைத்துக் கொண்டும் உடலைத் துறப்பவன், மேலான நிலையை (பரமகதியை), அதாவது, பரமாத்மாவை அடைகிறான்.

ஓமித்யேகாக்ஷரம் ப்$_3$ரஹ்ம வ்யாஹரந்மாமநுஸ்மரந்।
ய: ப்ரயாதி த்யஜந்தே$_3$ஹம் ஸ யாதி பரமாம் க$_3$திம்॥

*(கீதை-8/13)*

இவ்விதம், மேலே சொல்லப்பட்ட, பகவானுடைய மூன்று வகையான வடிவங்களில் ஏதேனும் ஒன்றை நினைத்துக்கொண்டே இருப்பவன், இங்கேயே பிரம்மத்தை அடைகிறான்; அல்லது, அர்ச்சிமார்க்கம் வழியாகச் சென்று பிரம்மத்தை அடைகிறான்.

அக்$_3$நிர் ஜ்யோதிரஹ: ஶுக்ல: ஷண்மாஸா உத்தராயணம்।
தத்ர ப்ரயாதா க$_3$ச்ச$_2$ந்தி ப்$_3$ரஹ்ம ப்$_3$ரஹ்மவிதே$_3$ா ஜநா:॥

*(கீதை-8/24)*

*(உடலைப் பிரிந்து, உயிர், மேலே செல்லக்கூடிய இரு வழிகளில்) எந்த மார்க்கத்தில் பிரகாசமான அக்னி அபிமானி தேவதையாக இருக்கிறதோ, பகல்-வளர்பிறை-உத்தராயண ஆறு மாதங்கள் காப்புக் கடவுளர்களாக இருக்கின்றனவோ, அந்த வழியில்,*

*பிரம்மத்தை அறிந்த யோகிகள் இறந்தபின், மேலே சொல்லப்பட்ட (அக்னி, பகல், வளர்பிறை, உத்தராயணம்) தேவதைகள் வழியே வரிசையாக அழைத்துச் செல்லப்பட்டுப் பிரம்மத்தை அடைகிறார்கள்.')*

இந்தச் சுலோகத்தில் வரும் ஜ்யோதி: என்னும் சொல், அக்னியை ஒட்டி வரும் உரிச்சொல்லாகும்; 'அக்னி' என்ற சொல், அக்னியின் அபிமானி தேவதையைக் குறிப்பதாகும். இதன் வடிவம், தெய்விகமான ஒளிக்கற்றை யாகும்.

கடல் சூழ்ந்த மண்ணுலகில் உள்ள எல்லா நாடுகளின் மீதும் இதன் அதிகாரம் இருக்கிறது. உத்தராயண மார்க்கம் வழியாகச் செல்லும் தகுதியுடைய ஜீவன்களை, பகல் பொழுதின் அபிமானி தேவதையுடன் சம்பந்தப் படுத்தி வைப்பது தான், இதன் வேலை. இரவில் உயிரை விட்ட உபாஸகன் (தன் உபாசனை பலத்தால்) உத்தராயண மார்க்கம் வழியாகச் செல்லும்போது, இரவு முழுவதும் அந்த ஜீவனைத் தன்னிடமே வைத்துக் கொண்டிருந்து விட்டு, பகல் வந்ததும் அதன் அபிமானி தேவதையிடம் ஒப்படைத்து விடுகிறது. மேலும், பகலில் இறப்பவனை, உடனேயே, பகல் அபிமானி தேவதையிடம் ஒப்படைக்கிறது.

இதைப் போலவே, பகல் அபிமானி தேவதையின் அதிகாரம், மண்ணுலக எல்லை - அதாவது, ஆகாயத்தில் மண்ணுலகத்துடன் வாயுமண்டலம் சம்பந்தம் வைத்துள்ள தூரம் - வரை இருக்கும்; உத்தராயண மார்க்கத்தில் செல்லும் உபாஸகனை சுக்லபக்ஷ அபிமானி தேவதையுடன் சேர்த்து வைப்பது தான் இதன் வேலை.

சுக்லபக்ஷ அபிமானி தேவதையின் அதிகாரம், பூலோகத்தின் எல்லைக்கு அப்பால் விண்ணுலகம் வரையில்-அங்குள்ள உலகங்களில் பதினைந்து நாட்கள் பகற்பொழுதும், பதினைந்து நாட்கள் இரவும் இருக்கும். உத்தராயண மார்க்கம் வழியாகச் செல்லத் தகுதி வாய்ந்த ஜீவனை, தன்னுடைய எல்லையைக் கடந்து அழைத்துச் சென்று, உத்தராயண அபிமானி தேவதையின் பொறுப்பில் விட்டு விடுவது தான் இதன் வேலை.

சூரியன் வடக்கு நோக்கிச் செல்லும் ஆறு மாத காலத்தை உத்தராயணம் என்கிறார்கள். உத்தராயண கால அபிமானி தேவதையைக் குறிக்கும் சொல், 'ஷண்மாஸா உத்தராயணம் ।' விண்ணுலகுக்கு மேலே எந்த உலகங்களில் ஆறு மாத காலத்துக்குப் பகற்பொழுதும் ஆறு மாத காலத்துக்கு இராப்பொழுதும் இருக்கிறதோ, அந்த உலகங்கள் வரை இதற்கு அதிகாரம். உத்தராயண மார்க்கம் வழியாக, பரமபதம் செல்லும் தகுதியுடைய ஜீவன்களை, தன்னுடைய எல்லையைக் கடந்து சென்று, உபநிடதங்களில் விளக்கப் பட்டுள்ள ஸம்வத்ஸர அபிமானி தேவதையிடம் சேர்ப்பிப்பது தான் இதன் வேலை. அங்கிருந்து மேலே சென்று, ஸம்வத்ஸர அபிமானி தேவதை, அந்த ஜீவனை சூரியலோகத்திற்குக் கொண்டு போய்ச் சேர்க்கிறது. அங்கிருந்து, வரிசைப்படியாக, ஆதித்ய அபிமானி தேவதை, சந்திர அபிமானி தேவதையிடமும், அது, மின்னல் அபிமானி தேவதையின் அதிகாரத்திலும் ஜீவனை விட்டு விடுகின்றன. பின்னர், அங்கே, பகவானுடைய பரமபதத்திலிருந்து பகவானுடைய பார்ஷதர்கள் (மெய்க் காப்பாளர்கள்) வந்து, அந்த ஜீவனை பரமபதத்துக்கு அழைத்துச் செல்கிறார்கள்; சென்றதும், அதற்குப் பகவானின் தரிசனம் கிடைக்கிறது.

பிரம்மவடிவமான பரமபதத்தை அடைந்த பிறகு, அவர் மீண்டும் பிறப்பு-இறப்பு என்னும் சம்சாரச் சக்கரத்தில் சுழல் வதில்லை. பிரம்மலோகம் வரை சென்ற ஜீவன், மீண்டும் இவ்வுலகுக்குத் திரும்பி வந்து, தன் வினைப்பயனுக்கேற்ற பிறவியை அடைகிறது; ஏனென்றால், பிரும்மாவும் பிரும்மலோகமும் கால வரையறைக்கு உட்பட்டவை.

ஆப்$_3$ரஹ்மபு$_4$வநால்லோகா: புநராவர்திநோऽர்ஜுந ।
*(கீதை-8/16 முன்பாதி)*

ஸஹஸ்ரயுக$_3$பர்யந்தமஹர்யத்$_3$ப்$_3$ரஹ்மணோ விது$_3$: ।
ராத்ரிம் யுக$_3$ஸஹஸ்ராந்தாம் தேऽஹோராத்ரவிதே$_3$ா ஜநா: ॥
*(கீதை-8/17)*

***(பிரும்மாவின் ஒரு பகல் என்பது ஓராயிரம் சதுர்யுகங்களைக் கொண்டது; ஓர் இரவும் ஓராயிரம் சதுர்யுகங்களைக் கொண்டது.***

*இதன் தத்துவத்தை உணர்ந்து கொண்ட யோகிகள், கால தத்துவத்தை அறிந்தவர்கள் ஆகிறார்கள்).*

நான்கு யுகங்களின் கால அளவைக் கூட்டினால், அது ஒரு திவ்விய யுகம் ஆகும். கலியுகம்-4,32,000 ஆண்டு; துவாபரம்-8,64,000; திரேதா-12,96,000; சத்திய யுகம்-17,28,000 ஆண்டு. இவை மொத்தமாக 43,20,000 ஆண்டுக் காலம் ஒரு திவ்விய யுகம். தேவதைகளின் காலக் கணக்கு, நம்முடையதைக் காட்டிலும் 360 மடங்கு அதிகம். அதனால், ஓராயிரம் திவ்விய யுகம் என்பது, நம்முடைய கணக்குப்படி 432 கோடி ஆண்டுகள் ஆகும். இது, பிரும்மாவுக்கு ஒரு பகல்; இதே அளவு காலம், ஓர் இரவு. இப்படி நூறு ஆண்டுகள் கழிந்த பின்னர், பிரும்மா, தான் படைத்த உலகங்களோடு கூட தானும் அடங்கிப் போகிறார். இந்த விஷயத்தைப் பற்றிய விவரமான தகவல்கள் மனுஸ்மிருதி முதல் அத்யாயத்தில் தெரிவிக்கப்பட்டுள்ளன.

சராசர பூதகணங்கள் (உயிர்க் கூட்டம்) எல்லாம், பிரும்மாவின் பகல்பொழுது தொடங்கும்போது, அவ்யக்தத்திலிருந்து (பிரும்மாவின் சூக்ஷ்ம சரீரத்திலிருந்து) உற்பத்தியாகின்றன; பிரும்மாவின் இரவுப் பொழுது தொடங்கும் போது, அந்த அவ்யக்தம் எனப்படும் பிரும்மாவின் சூக்ஷ்ம சரீரத்திலேயே லயமடைகின்றன.

அவ்யக்தாத்$_3$வ்யக்தய: ஸர்வா: ப்ரப$_4$வந்த்யஹராக$_3$மே ।
ராத்ர்யாக$_3$மே ப்ரலீயந்தே தத்ரைவாவ்யக்தஸம்ஜ்ஞகே ॥
*(கீதை-8/18)*

எனவே, பிரும்மாவும் பிரும்மலோகமும் கால எல்லைக்கு உட்பட்டனவாகையால், காலம் முடிந்ததும் அழிந்து போகின்றன. இவையெல்லாம் அழிந்து போய்விட்டாலும் சச்சிதானந்த ஸ்வரூப பரமாத்மா அழிவதில்லை.

'அந்த அவ்யக்தத்தையும் தாண்டி, விலட்சணமான ஸநாதனமான அவ்யக்த பாவம் ஒன்று இருக்கிறது; அதுவே பரம திவ்வியப் பொருளான பரமாத்மா. சிருஷ்டிப் பொருட்கள் அனைத்தும் அழிந்து போனாலும், பரமாத்மா அழிந்து போவதில்லை' என்கிறது, கீதை.

இடைவிடாத பயிற்சியின் பிரபாவத்தினால், இந்தப் பிறவியிலேயே மனிதன் பரமாத்மாவை அடைய முடியும். ஏனென்றால், இடைவிடாது பகவானை நினைத்துக் கொண்டிருப்பவருக்கு, பகவத்பிராப்தி எளிதானது. பகவான் சொல்கிறார் -

அநந்யசேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ:।
தஸ்யாஹம் ஸுலப$_4$: பார்த$_2$ நித்யயுக்தஸ்ய யோகி$_3$ந:॥
(கீதை-8/14)

*(அர்ஜுனா! எவனொருவன் வேறு எங்கும் சிதறாத சித்தத்தோடு, எப்போதும், புருஷோத்தமனான என்னை நினைத்துக் கொண்டிருக்கிறானோ, என்றைக்கும் அழிவில்லாத என்னுடன் இணைந்து விட்ட அந்த யோகிக்கு நான் எளியன்- அதாவது, தானாகவே அவரால் அடையப்படுகிறேன்).*

இவ்விதமாகப் பயிற்சி செய்து வருபவருக்கு இந்தப் பிறவியிலேயே (உயிர் வாழும்போதே) பகவான் கிடைப்பார் என்னும்போது, இறுதிக் காலத்தில் நிச்சயமாகக் கிடைப்பார் என்று சொல்லவேண்டுமா, என்ன? பரமாத்மாவை எப்போதும் நினைவு வைத்துக் கொண்டிருப்பது ஒன்றும் கஷ்டமான வேலை அல்ல; இந்த சாதனையால் பரமாத்மாவை அடைந்து விட்டவர், துக்கமயமான இவ்வுலகுக்கு ஒருக்காலும் திரும்பி வர மாட்டார்.

மாமுபேத்ய புநர்ஜந்ம து$_3$:க$_2$ாலயமஶாஶ்வதம்।
நாப்நுவந்தி மஹாத்மாந: ஸம்ஸித்$_3$தி$_4$ம் பரமாம் க$_3$தா:॥
(கீதை-8/15)

*(பரம ஸித்தியை அடைந்து விட்ட மகாத்மாக்கள், என்னை அடைந்து, பின்பு மறுபடியும், துயரங்களின் இருப்பிடமாகவும் நொடி நேரம் நிலைத்திருப்பதுமான பிறவியை அடைய மாட்டார்கள்).*

அத்தகையவர்கள் உலக வாழ்க்கையை முற்றிலுமாகக் கடந்து சென்று பரமபத வடிவான பரமாத்மாவை நிரந்தரமாக அடைந்து விடுகிறார்கள்.

வேதே₃ஷு யக்ஞேஷு தப:ஸு சைவ தா₃நேஷு யத்புண்யப₂லம் ப்ரதி₃ஷ்டம் ।
அத்யேதி தத்ஸர்வமிதம்₃ விதி₃த்வா யோகீ₃ பரம் ஸ்தா₂நமுபைதி சாத்₃யம் ॥
(கீதை-8/28)

*(வேதங்களைப் படித்தல், வேள்வி செய்தல், தவம், தானம் ஆகிய வற்றால் என்னென்ன புண்ணிய பலன்கள் கிடைக்கும் என்று சொல்லப்பட்டிருக்கிறதோ, அவைகளையெல்லாம் முற்றிலுமாக ஒதுக்கிவிட்டு, சனாதனமான பரமபதத்தை அடைகிறார்.)*

கீதையின் எட்டாவது அத்தியாயத்தில், மனிதனுடைய மரணகாலத்தில் ஏற்படும் பகவத் சிந்தனையின் விசேஷமான பெருமைகள் விளக்கப்பட்டுள்ளன. ஆகவே, மரணகாலத் தில், பொருள் உணர்ந்து, இந்த அத்தியாயத்தை அவசியம் கேட்க வேண்டும். அத்தியாயம் முழுவதையும் படித்துக் காட்ட முடியாமற் போனாலும், மேலே சொல்லப்பட்ட முக்கியமான சுலோகங்களையாவது, அர்த்தத்துடன் கேட்பிக்க வேண்டும். ஏனென்றால், இந்த சுலோகங்களில் ஏதேனும் ஒன்றையேனும் பொருளும் பாவமும் உணர்ந்து ஒருவன் தன் மனத்தில் வாங்கிக் கொண்டுவிட்டால், இயல் பாகவே அவனுக்கு மகத்தான நன்மை ஏற்படும். அப்படி யிருக்கும்போது, எப்போதும், எக்காலத்திலும் பகவானுடைய ஸகுண-நிர்குண-ஸாகார-நிராகார வடிவங்களில் யாதேனு மொன்றை நினைவில் கொண்டுள்ளவனுக்கு இறுதிக் காலத்திலும் பரமாத்மாவின் நினைவு மிகவும் சகஜமாகவே ஏற்பட்டு விடும்-என்பது சர்வ நிச்சயம்.



## 11. செயல்கள் அனைத்தும் பகவானுக்கே!

எல்லா உயிர்கள், பொருட்கள், செயல்கள், உணர்ச்சிகள் ஆகியவற்றை பகவானோடு தொடர்புபடுத்தி சாதனை செய்வதனால், சாதகனின் இதயத்தில் ஆர்வம், சமபாவம், மலர்ச்சி மற்றும் அமைதியும் எப்போதும் பகவானின் நினைவும் இருந்து கொண்டிருக்கும். இதனால் பகவானிடம் ஆழமான சிரத்தையும் பிரேமையும் ஏற்பட்டு, இயல்பாகவே பகவானை அடைய முடியும். எவையெல்லாம் இருக்கின்

றனவோ-எல்லாம் பகவானுடையவை; நானும் பகவானுடையவன்; பகவான் எல்லாவற்றிலும் நிறைந்துள்ளார் (கீதை 18-46); ஆகவே, எல்லோருக்கும் சேவை புரிவதே பகவானுக்கு சேவை புரிவதாகும்; நான் என்ன செய்து கொண்டிருக்கிறேனோ-அது பகவானுடைய தூண்டுதலினால் பகவானுக்காகவே செய்து கொண்டிருக்கிறேன்; பகவான் எனக்கு மிகவும் பிரியமானவர்; என்னுடைய நலனை விரும்புபவர்-இம்மாதிரியான உணர்வுகளுடன் தன்னுடைய வீட்டு வேலை, அல்லது, கடை வேலை, அல்லது, அறநெறிக் கூட்டத்தின் வேலைகளை, தனக்குப் பிரியமானவரான பகவானின் வேலையாகக் கருதியும் தானே பகவானுடையவனாகவும் ஆகி, செயல்களை ஆற்றுவதால் சாதகனுக்கு ஒருபோதும் அலுப்புத் தோன்றுவதில்லை; மாறாக, மனத்தில், தைரியம், உற்சாகம், மலர்ச்சி, சாந்தி முதலியன மேன்மேலும் வளர்ந்தோங்கிவரும். அவ்விதம் வளர்ச்சி ஏற்படாவிட்டால், 'இதற்கு என்ன காரணம்?' என்று நிச்சயமாக சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஆலோசித்துத் தேடிப் பார்த்தால், இந்த வளர்ச்சியின்மைக்குக் காரணம் சிரத்தை-நம்பிக்கைக் குறைவு தான் என்பது புலனாகும். இந்தக் குறையைப் போக்கிக் கொள்வதற்கு, சாதகன் பகவானைச் சரணடைந்து அவரிடம் மிகுந்த வினயத்தோடு, தோத்திரம்-பிரார்த்தனை செய்ய வேண்டும்; பகவானுடைய குணம், பிரபாவம், தத்துவம் மற்றும் ரகசியத்தை உணர்ந்து கொள்ள வேண்டும்.

கீதையைப் பிரசாரம் செய்யும் சேவை, நிச்சயமாக, பகவானுடைய வேலையே. இதில் எவ்வித சந்தேகமும் இல்லை. ஸ்ரீமத் பகவத் கீதையின் அர்த்தத்தையும் உணர்வுகளையும் புரிந்துகொண்டு, கீதையைப் பிரசாரம் செய்பவனுக்கு, அதனால் கடைத்தேற்றம் ஏற்படுகிறது; பகவான் அவனிடம் மிகவும் மகிழ்ச்சி கொள்கிறார். கீதை அத். 18-68, 69 சுலோகங்கள் இதைப் பற்றிக் கூறுவதைப் பாருங்கள்.

ய இமம் பரமம் கு$_3$ஹ்யம் மத்$_3$ப$_4$க்தேஷ்வபி$_4$த$_4$ாஸ்யதி ।
ப$_4$க்திம் மயி பராம் க்ருத்வா மாமேவைஷ்யத்யஸம்ஶய: ॥

ந ச தஸ்மாந்மநுஷ்யேஷு கஶ்சிந்மே ப்ரியக்ருத்தம: ।
ப$_4$விதா ந ச மே தஸ்மாத$_3$ந்ய: ப்ரியதரோ பு$_4$வி ॥

*(எவனொருவன் என்னிடம் மிகவும் பிரேமை கொண்டு மிகவும் ரகசியப் பொருள் நிறைந்த கீதா சாஸ்திரத்தை என்னுடைய பக்தர்களுக்குச் சொல்கிறானோ, அவன் என்னையே அடைவான் என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை. அவனை விட, எனக்குப் பிரியமான சேவையைச் செய்யக்கூடியவன் வேறு எவனும் இல்லை. அவ்விதமே, இம் மண்ணுலகம் முழுவதிலும் அவனை விட அதிகப் பிரியமானவன் எதிர்காலத்திலும் இருக்கமாட்டான்.)*

இந்த இரண்டு செய்யுட்களின் அர்த்தத்தையும், உணர்வுகளையும் மிக நன்றாகப் புரிந்து கொள்பவன், தன் வாழ்நாள் முழுவதையும் கீதைப் பிரசாரத்திலேயே கழிக்க வேண்டும். தற்போது கீதைப் பிரசாரம் சம்பந்தமாக ஏதோ கொஞ்சம் நாம் காண்கிறோம்-பார்க்கிறோம் என்றால், அதற்கு முக்கிய காரணம், இவ்விரண்டு சுலோகங்களின் பொருள் மற்றும் உணர்ச்சிகளின் தாக்கம்தான்.

ஆகவே, கீதைப் பிரசாரம் என்பது பகவானுடைய காரியமே ஆகும். பகவானுடைய விசேஷமான கருணை கிடைத்தால் தான் இந்தச் சேவையில் ஈடுபாடு தோன்றும். பணத்தைச் சிலவு செய்வதால், இந்த அருட்பணி கிடைத்துவிடாது.

பகவானுடைய செயலைச் செய்வது, அவருடைய ஆணைகளை மதித்து நடப்பது-என்பது, பகவத் சேவையே ஆகும். உண்மையில் இந்த வேலையை (கீதா பிரசாரத்தை) பகவத் சேவையாகவே கருதி மேற்கொள்வதில் நிச்சயமாக மனமகிழ்ச்சியும், சாந்தியும் கிடைக்கும்; கிடைக்கவில்லையென்றால், அந்தப் பணியை பகவானுடைய வேலை என்று கருதவில்லை என்றாகும். ஒருவன், ஒரு மகாத்மாவை மகாத்மா என்றே புரிந்து கொண்டு அவருக்குப் பணிவிடை செய்தும், அவருடைய ஆணைகளை மதித்தும் நடந்து வந்தால், அவனுடைய மனத்தில் தோன்றும் ஆனந்தத்துக்கு ஈடே கிடையாது-என்னும்போது, பகவானுக்குச் செய்யும் சேவையில் மிகவும் மகிழ்ச்சியும் சாந்தியும் கிடைக்கும் என்பதைப் பற்றி சொல்லவா வேண்டும்?

கீதா பிரசாரம் என்னும் அருட்பணியை ஆற்றி வருபவர்களின் மனத்தில் பகவத் சிந்தனை, திருப்தி, ஆர்வம்,

பிரேமை மற்றும் சாந்தி ஏற்படவில்லையென்றால், அதற்கான காரணங்களைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். அத்துடன், பகவானிடம் சரணடைந்து நமக்குத் தெரியவரும் குற்றம் குறைகளை நீக்கி விடவேண்டும். எல்லோரிடமும் பகவானுக்கு அளவற்ற கருணை இருக்கிறது-என்பதை பூரண மாகத் தெரிந்து கொள்ளாததால் தான் நாம் மனத்திருப்தியும் சாந்தியும் கிடைக்காமல் தவிக்கிறோம். நம்மீது பகவானுக்கு உள்ள எல்லையற்ற தயையை நாம் நூற்றில் ஒரு பங்கு கூட அறிந்திருக்கவில்லை. நமக்குத் தெரியாவிட்டாலும் நம்மீது பகவானுக்கு எல்லையற்ற கருணை இருக்கிறது என்பதை ஒப்புக் கொள்ள வேண்டும். இப்படிச் செய்வதால், நாளடைவில், அது நமக்குத் தெரியவரக் கூடும்.

பகவானுடைய தயையின் சூட்சுமம் பற்றி நாம் மிகத் தெளிவாக அறிந்து கொள்வதற்காக, இங்கே ஒரு உதாரணம் காட்டுகிறேன்.

ஒரு க்ஷத்திரிய சிறுவன் அரசு உதவியுடனும் ஏற்பாட்டுடனும் ஒரு பல்கலைக் கழகத்தில் படித்து வந்தான். அவனுடைய தாய்-தந்தையர்கள், அவனுக்கு 'பையா! இந்த நாட்டின் மன்னர் மிக உயர்ந்த ஞானி, யோகி, மகான். காரணமில்லாமலே அவர் அன்பு காட்டுபவர்; பரந்த மனப்பான்மையுடையவர். அவர் நம்மீது மிகவும் அதிகமாக கருணை காட்டி வருகிறார். நாங்கள் இருவரும் இறந்து போய்விட்டாலும் நீ கவலைப்பட வேண்டாம். ஏனென்றால், மன்னருக்கு எங்களிடம் இருப்பதைக் காட்டிலும் உன்னிடம் மிக அதிகமான தயவு இருக்கிறது' என்று எப்போதும் சொல்லி வந்தார்கள். பெற்றோரின் இந்த அறிவுரையைக் கேட்ட பையன் அவ்வாறே எண்ணிக் கொண்டிருந்தான்.

காலம் வந்ததும் அவனுடைய பெற்றோர்கள் மாண்டு போனார்கள். ஆனால், அந்தப் பையன் துயரம் அடைய வில்லை. கல்லூரியில் அவன் உடன் படிக்கும் மாணவர்கள், 'என்னப்பா, உன்னோட அப்பா-அம்மா செத்துப் போயிட் டாங்க. ஆனா, உன் முகத்திலே சோகமே இல்லையே? என்ன விஷயம்?... ஆமா, இனிமே உன்னை யார் பராமரிக்கப்

போறாங்க?' என்று கேட்டார்கள். க்ஷத்திரியப் பையன், 'எனக்கு என்னப்பா துயரம்? ஏன்னா, என்னோட அப்பா-அம்மாவைக் காட்டிலும் என்கிட்ட ரொம்பப் பிரியமா இருக்காரே, நம்ம ராசா! மன்னர் இருக்காரே, அவர் ரொம்பப் பெரிய பக்தர்; ஞானி; மகான். தெரியுமா, நான் அவர் தயவிலே தான் இருக்கேன்' என்றான். சிறுவனுடைய சொற்களைக் கேட்ட அந்த கல்விச்சாலையின் தலைமை ஆசிரியருக்கும் கூட மிகவும் ஆச்சரியம் உண்டாயிற்று-'பாரு, இந்தப் பையன் மனசிலே, மகாராஜாவைப் பற்றி எவ்வளவு நம்பிக்கை-பக்தி இருக்கு!....' என்று.

அந்தத் தலைமையாசிரியர், அரசு நிர்வாகக் குழுவில் ஓர் அங்கத்தினர். ஒருநாள், நிர்வாகக் குழுக் கூட்டத்துக்கு அவரும் வந்திருந்தார். அந்தக் கூட்டத்தில், மகாராஜா சொன்னார் : 'நம்முடைய நாட்டில் அநாதைச் சிறுவன் யாரேனும் இருந்தால் சொல்லுங்கள். அரசு தரப்பில் அவனுக்கு, நல்லமுறையில் உதவிகள் செய்யலாம்.' நிர்வாக் குழுவின் பல அங்கத்தினர்கள், அந்த க்ஷத்திரிய சிறுவன் பெயரையே முன்மொழிந்தார்கள். இதைக் கேட்ட மன்னன் அவர்களுடைய சம்மதத்துடன், அந்தச் சிறுவன் சாப்பாட் டுக்கான ஏற்பாடுகளைச் செய்து கொடுத்தான்; அவனுடைய பழைய வீட்டைப் புதுப்பித்துக் கொடுக்க உத்தரவிட்டான். படிப்புக்கான ஏற்பாடு, முதலிலிருந்தே அரசு செய்து கொண்டிருந்தது.

சில நாட்கள் கழிந்த பின்னர், ராஜாவின் உத்திரவுப்படி அரசு ஊழியர்கள், சிறுவனுடைய பழைய வீட்டைச் செப்பனிட்டுப் புதுப்பிப்பதற்காக, அதனை இடிக்க ஆரம்பித்தார்கள். அதைப் பார்த்துக் கொண்டிருந்த ஒரு மாணவ நண்பன், ஓட்டோட்டமாக அவனிடம் வந்து, 'அரசாங்க வேலைக்காரங்க உன் வீட்டை இடிச்சுப் பாழாக்கிட்டிருக்காங்க' என்று தகவல் கொடுத்தான். அதைக் கேட்டதும் சிறுவனுக்கு ஒரே மகிழ்ச்சி. 'அடடே! ராஜாவுக்குத் தான் எங்கிட்ட எவ்வளவு அன்பு! பழைய வீட்டை இடிச்சுட்டுப் புது வீடு கட்டுவாங்க போலிருக்கு!' என்று சொன்னான். இதைக் கேட்டதும் தலைமையாசிரியருக்கு

மிகவும் ஆச்சரியம் ஏற்பட்டது. 'அட பாரேன்! இந்தப் பையனுக்குத் தான் எவ்வளவு வலுவான நம்பிக்கை! ராஜாகிட்டதான், தகர்க்க முடியாத எவ்வளவு நம்பிக்கை!' என்று எண்ணினார்.

பின்னர், அடுத்து வந்த நிர்வாகக் குழுக் கூட்டத்தில் தலைமையாசிரியர் கலந்து கொண்டபோது, மன்னர் ஓர் ஆலோசனை வெளியிட்டார். 'நான் வயோதிகம் அடைந்து விட்டேன். எனக்கு பிள்ளைப் பேறு இல்லை. அதனால், இளவரசுப் பட்டம் யாருக்குச் சூட்டுவது? அதற்குத் தகுதியானவர் யார்?'

உடனே, தலைமையாசிரியர் சொன்னார் : 'அந்த க்ஷத்திரியச் சிறுவன், குணம்-நடத்தை-கல்வி-சுபாவம் ஆகியவற்றில் எல்லோரைக் காட்டிலும் சிறந்தவனாக இருக்கிறான். அவனுக்கு மன்னரிடம் அன்பு இருக்கிறது; தங்களிடம் எல்லையற்ற நம்பிக்கை வைத்திருக்கிறான்'.

இந்த விஷயத்தை மற்ற அங்கத்தினர்களும் மகிழ்ச்சியுடன் ஆமோதித்தார்கள். அரசர், எல்லோருடைய சம்மதத்தின் பேரில், அந்த க்ஷத்திரியச் சிறுவனுக்கே இளவரசுப் பதவியை வழங்க முடிவு செய்தான்.

அடுத்தநாள் மன்னரின் அமைச்சரும், வேறு சில அரசாங்க அலுவலர்களும் க்ஷத்திரியச் சிறுவன் வீட்டுக்கு வந்தார்கள். அவர்கள் எல்லோரையும் மிக நல்ல முறையில் வரவேற்று உபசரித்துவிட்டுச் சிறுவன் கேட்டான். 'நான் தங்களுக்கு என்ன சேவை செய்ய வேண்டும்?'

'மகாராஜாவுக்கு உங்கள் மேல் நிறைய தயை இருக்கிறது' என்று அரசு அலுவலர்கள் தெரிவித்தார்கள்.

'மாமன்னருக்கு என்னிடம் அபாரமான தயவு உண்டு என்பது எனக்கு முன்னமேயே தெரியுமே! அதனால்தான், உங்களுக்கும் என்மீது மிகவும் அன்பு இருக்கிறது' என்று சிறுவன் கூறினான்.

'நாங்கள் தங்களுடைய பணியாளர்கள்; தங்கள் கருணையை எதிர்பார்த்து வந்திருக்கிறோம்'.

'நீங்கள் இப்படியெல்லாம் சொல்லி என்னை லஜ்ஜைப்பட வைக்கக்கூடாது. நான், உங்களுடைய பணியாளன். மகாராஜாவுக்கு என்மீது பேரன்பு உண்டு என்பதை நான் நன்றாகவே அறிவேன்....'

'தாங்கள் அறிந்து கொண்டிருப்பதைக் காட்டிலும் மன்னருக்குத் தங்களிடம் மிகவும் அதிகமாகவே அன்பு இருக்கிறது...'

'அப்படியா!... மகாராஜா, என் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்திருக்கிறாரா, என்ன?'

'கல்யாணம் மட்டுமில்லை; மகாராஜாவுக்குத் தங்களிடம் ஏராளமாகக் கருணை இருக்கிறது....'

'என்னது!.... மூன்று-நான்கு கிராமங்களுக்கு என்னை ஜாகிர்தாராக ஆக்கியிருக்கிறாரா, மன்னர்?'

'அது ரொம்ப சின்ன விஷயம்!... மன்னருக்குத் தங்களிடம் உள்ள தயவை, தங்களால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியாது!...'

'அவருக்கு என்னிடம் எந்த அளவுக்குத் தயை இருக்கிறது என்பதை அருள்கூர்ந்து சொல்லுங்கள்' என்று, பணிவுடன் கேட்டான், சிறுவன்.

'தங்களுக்கு இளவரசுப் பதவியை வழங்கியிருக்கிறார், மகாராஜா!... அதனால் தான், நாங்கள் தேவரீருடைய தயவை வேண்டுகிறோம்....'

இதைக் கேட்டதும் க்ஷத்திரியச் சிறுவன் அடைந்த ஆனந்தத்துக்கு எல்லையே இல்லை. அந்தப் பேரானந்தத்தில் தன்னையே மறந்தான்!

இந்த உபமானத்தை ஆத்மிக விஷயத்துடன் இணைத்துப் பார்க்க வேண்டும். பகவான் தான் ஞானி-மகாத்மாவான அரசன்; குன்றா ஆர்வமுடைய சாதகன் தான் க்ஷத்திரியச் சிறுவன்; உபதேசம் கூறும் ஆசிரியப் பெருமக்களே, பெற்றோர்கள்; சத்சங்க சாதகர்கள் தான், உடன் படிக்கும் மாணவர்கள்; பகவானிடம் பிரேமை கொண்ட மகாபுருஷர்கள் தான், நிர்வாகக்குழு உறுப்பினரான தலைமை

ஆசிரியர். சிறுவனுடைய உணவு-உடைக்கான ஏற்பாடுகளை அரசு செய்து கொடுத்தது என்பது, உலகாயத நோக்கில், அனுகூலமான வாழ்க்கை; வீட்டை இடிப்பது என்பது, உலகநோக்கில், விரோதமான நிகழ்ச்சிகளைச் சந்திப்பது. இவ்வாறு நிகழ்வுகளை எடுத்துக் கொண்டால், இவ்விரு நேர்மாறான நிகழ்ச்சிகளையும் அந்தச் சிறுவன், மன்னனுக்குத் தன்னிடம் உள்ள பேரன்பின் அடையாளமாக ஏற்றுக் கொண்டதைப் போல, வாழ்க்கையில் ஏற்படும் அனுகூல-பிரதிகூலச் சம்பவங்களை பகவானால் அளிக்கப்படும் மங்களமான நியமங்கள் என்று ஏற்றுக் கொண்டு திருப்தி யுடன் இருக்க வேண்டும். சிறுவன், மன்னனையே தன் நண்பராகக் கருதி, அவரிடம் தன்னை முழுமையாக ஒப்படைத்து, சிரத்தையும், நம்பிக்கையும் கொண்டிருந் தானே-அது தான், பகவானிடம் சரணாகதி செய்வது என்னும் அரிய சாதனை.

இந்த உபமானத்திலிருந்து நாம் ஒரு பாடத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும். பகவானிடம் நமக்கு எவ்வளவு அருள் இருப்பதாக எண்ணிக் கொண்டிருக்கிறோமோ, அதைக் காட்டிலும் மிக அதிகமாகவே பகவான் நம்மிடம் அருள்மனம் வைத்துள்ளார்-என்பதைப் புரிந்து கொள்வோம். பகவானுக்கு நம்மிடம் உள்ள பெருங்கருணையின் அளவை நம்மால் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாது. அளவற்ற கருணையைப் பற்றி நாம் தெரிந்து கொண்டு விட்டோமானால், க்ஷத்திரியச் சிறுவனைப் போல நாமும் எல்லை காணமுடியாப் பேரானந்தமும் திருப்தியும் அடைந்து நம்மை நாமே மறந்து விடுவோம்.

ஆகவே, நம் விருப்பப்படியோ, விருப்பமில்லாமலோ, அல்லது, பிறர் விருப்பப்படியோ என்னென்ன நடக்கின்றன வோ, அவையெல்லாம் பகவானுடைய மங்களமான ஏற்பாடு என்று அறிந்து கொள்ள வேண்டும்; நாம் செய்கிற செயல்கள் எல்லாம் பகவானுடைய பணி என்றும், பகவானுக்குச் செய்யும் புனித சேவை என்றும் கருத வேண்டும்; எல்லாக் காலத்திலும் பகவானை நினைவில் இருத்தி ஆனந்தத்தில் மூழ்கித் திளைக்க வேண்டும்.

பகவானிடம் பக்தி கொண்டு ஒழுகுதல் என்ற இந்த சாதனையைக் கடைப்பிடிக்கும் சாதகனுடைய உள்ளத்தில் நிறைவு, புல்லரிப்பு, கண்ணீர் வழிதல், நெஞ்சத்தில் மலர்ச்சி, பேச்சில் தழுதழுப்பு, தொண்டை அடைத்துக் கொள்வது முதலியன ஏற்படும். ஆனால், சாதனையைச் செய்து செய்து நிறைவு நிலையை அடைந்து விட்டால்-அதாவது, பகவானை அடைந்து விட்டால்-ஆனந்தம், பேரானந்தம், பரமானந்தம் முதலிய படிகளைக் கடந்து மேலே சென்று சாந்தியையும் தெய்விக மகிழ்ச்சியையும் அடைந்து விடுகிறான். வாணலியில் நெய்யை விட்டு கசோரியைக் கொதிக்க விடும்போது, அது பச்சையாக இருக்கும்வரையில் குதித்துக் கொண்டிருக்கும்; அப்போது, அதில் ஏதோ சில மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. ஆனால், அது பொரியத் தொடங்கியதும் அதனுடைய ஆட்டம் குறைந்து போகிறது; பின்னர், முழுவதுமாகப் பக்குவப்பட்டதும் அதில் சத்தம் ஓய்ந்து அடங்கிப் போய்விடுகிறது. அதுபோலவே, சாதனை செய்து வரும்போது, சாதகனிடம் பச்சைத் தன்மை உள்ள வரையில், அவன் சாதனைப்படிகளில் ஏறும்போது மகிழ்ச்சியில், சந்தோஷத்தில் துள்ளிக் குதிக்கிறான்; அப்போது அவனுக்கு மயிர்க்கூச்சம், கண்ணில் நீர்வழிதல், தொண்டைத் தடுமாற்றம் முதலிய ஏற்படுகின்றன. ஆனால், சாதனை கனிந்து வரும்போது அவனுக்கு சந்தோஷம் முதலிய துள்ளல்கள் அடங்கத் தொடங்குகின்றன; அவன் முழுமையாகக் கனிந்தவுடன் ஆனந்தம்-பேரானந்தம்-பரமானந்தம் முதலிய வெவ்வேறு நிலைகளைக் கடந்து பரமசாந்தியை அடைந்து விடுகிறான். தொடர்ந்து, அந்தப் பரமாத்மாவிலேயே சஞ்சலமில்லாமல், ஸ்திரமாக லயித்து மேலான சாந்தியையும் பரமானந்த வடிவினரான பரமாத்மாவையுமே அடைந்து விடுகிறான்.



# Gita Press, Gorakhpur

## Our Publications, Kalyan and Kalyana-Kalpataru available at :

| | | |
|---|---|---|
| **Gorakhpur** — 273005 | Gita Press—P.O. Gita Press website:www.gitapress.org / e-mail:booksales@gitapress.org | ✆ **(0551) 2334721; 2331250; Fax 2336997** |
| **Delhi** — 110006 | 2609, Nai Sarak | ✆ **(011) 23269678; Fax 23259140** |
| **Kolkata** — 700007 | Gobind Bhavan-Karyalaya, 151, Mahatma Gandhi Road e-mail : gobindbhawan@gitapress.org | ✆ **(033) 22686894; Fax 22680251** |
| **Mumbai** — 400002 | 282, Samaldas Gandhi Marg (Princess Street) Near Marine Lines Station | ✆ **(022) 22030717** |
| **Kanpur** — 208001 | 24/55, Birhana Road | ✆ **(0512) 2352351; Fax 2352351** |
| **Patna** — 800004 | Ashok Rajpath, Opposite Women's Hospital | ✆ **(0612) 2300325** |
| **Ranchi** — 834001 | Cart Sarai Road, Upper Bazar | ✆ **(0651) 2210685** |
| **Surat** — 395001 | Vaibhav Apartment, Opposite Nutan Niwas, Bhatar Road e-mail : suratdukan@gitapress.org | ✆ **(0261) 2237362, 2238065** |
| **Indore** — 452001 | G-5, Shree Vardhan, 4 R.N.T. Marg | ✆ **(0731) 2526516, 2511977** |
| **Jalgaon** — 425001 | 7, Bhim Singh Market, Near Railway Station | ✆ **(0257) 2226393; Fax (0257) 2220320** |
| **Hyderabad** — 500095 | 41, 4-4-1; Dilshad Plaza, Sultan Bazar | ✆ **(040) 24758311** |
| **Nagpur** — 440002 | Shriji Kripa Complex, 851, New Etawari Road | ✆ **(0712) 2734354** |
| **Cuttack** — 753009 | Bhartiya Towers, Badam Badi | ✆ **(0671) 2335481** |
| **Raipur** — 492009 | Mittal Complex, Ganjpara Telghani Chowk | ✆ **(0771) 4034430** |
| **Varanasi** — 221001 | 59/9, Nichibag | ✆ **(0542) 2413551** |
| **Haridwar** — 249401 | Sabjimandi, Motibazar | ✆ **(01334) 222657** |
| **Rishikesh** — 249304 | Gita Bhawan, P.O.-Swargashram e-mail : gitabhawan@gitapress.org | ✆ **(0135) 2430122, 2432792** |
| **Coimbatore** — 641018 | Gita Press Mansion, 8/1M, Racecourse | ✆ **(0422) 3202521** |
| **Bangalore** — 560027 | #15, 4th 'E' Cross, K.S. Garden, Lalbagh Road | ✆ **(080) 22955190, 32408124** |

## Station-Stalls —

**Delhi** (Platform No. 5-6); **New Delhi** (No. 16); **Hazarat Nizamuddin** [Delhi] (No. 4-5); **Kota** [Rajasthan] (No. 1); **Bikaner** (No. 1); **Gorakhpur** (No. 1); **Kanpur** (No. 1); **Lucknow** [N.E. Railway]; **Varanasi** (No. 4-5); **Mughal Sarai** (No. 3-4); **Haridwar** (No. 1); **Patna** (Main Entrance); **Ranchi** (No.1); **Dhanbad** (No. 2-3); **Muzaffarpur** (No. 1); **Samastipur** (No. 2); **Howrah** (No. 5 & 18 Both); **Kolkata** (No. 1); **Sealdah Main** (No. 8); **Asansol** (No. 5); **Cuttack** (No. 1); **Bhubaneshwar** (No. 1); **Ahmedabad** (No. 2-3); **Rajkot** (No. 1); **Jamnagar** (No. 1); **Bharuch** (No. 4-5); **Indore** (No. 5); **Vadodara** (No. 4-5); **Aurangabad** [Maharashtra] (No. 1); **Secunderabad** [A.P.] (No. 1); **Guwahati** (No. 1); **Kharagpur** (No. 1-2); **Raipur** [Chhattisgarh] (No. 1); **Bangalore** (No. 1); **Yesvantpur** (No. 6); **Hubli** (No. 1-2); **Sri Satya Sai Prashanti Nilayam** [South Central Railway] (No. 1) and **I.S.B.T. (Delhi)**

## Retail Counters

**Churu** — Rishikul-Brahmacharyashram, Purani Sarak, **Rishikesh** — Muni Ki Reti, **Tirupati** — Shop No. 56, T.T.D. Mini Shopping Complex, **Berhampore** —Municipal Market Complex, Block-B, Stall No. 57 to 60, I[st] Floor, **Gujrat**—Santram Mandir, Nadiyad.

**Code 1480▲**